—நம்பெருமாள் ஸன்னிதியில் நடந்த சாத்துமுறை—

அதன் பிறகு ஏழாம்பத்தில் இரண்டாவது பதிகம் *கங்குலும் பகலும் உபந்யாஸம் முடியும்போது அதன் சாத்துமுறை திருவரங்கம் பெரிய கோயிலில் சென்று நடத்த வேணுமென்று பக்தவர்க்கங்கள் அபிப்ராயப்பட அதுவும் அப்படியே நடைபெற்றது. முதல்நாள் ஸாயங்காலமும் மறுநாள் காலையுமாக இரண்டு வேளைகளில் பெரிய திருவடி மஹாமண்டபத்தின் முன்னணியில் ஸ்தலாசார்ய புருஷர்கள் யாவரும் உடனிருந்து நடத்தி வைத்தார்கள்.

— திருமாலிருஞ்சோலையில் நடந்த சிறப்பு —

அங்கிருந்து திருமாலிருஞ் சோலைக்குச் சென்று, ஆண்டாள் மநோரதித்த *நாறுநறும்பொழிற் பாசுரப்படியே நூறு தடாவில் வெண்ணெயும் நூறுதடா நிறைந்த அக்காரவடிசிலும் கண்டருளப்பண்ணி வரவேணுமென்று ஏற்கெனவே விரும்பி அதற்குரிய விசேஷ ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. சென்னை பக்த மணிகள் யாவரும் இதில் அளவுகடந்த ஊக்கங் கொண்டு அபரிமிதமான ச்ரத்தையைக் காட்டினார்கள். மதுரையில் நெடுநாளாக அடியேனுக்குப் பரமாப்தராகவும், "அபிமானதுங்கன் செல்வனைப் போல" என்றதற்கு ப்ரத்யக்ஷநிதர்சந பூதராகவும் விளங்காநின்ற ஸ்ரீ உ. வே. S. ஸுந்தரராஜய்யங்கார் (அட்வொகேட்) மேலே ப்ரஸ்தாவித்த திருமாலிருஞ் சோலைக் கைங்கரியத்தை வெகு சிறப்பாக நடத்தி வைத்தார். அவருடைய மஹோபகாரங்கள் அளவுகடந்தவை.

—சென்னையுபந்யாஸஸபையின் வேறுபாடு—

இதற்குப்பிறகு உபந்யாஸஸபை வேறுபட்ட விஷயத்தைச் சுருக்கமாக இங்குத் தெரிவிக்கிறேன். என்னுடைய உபந்யாஸங்களை அன்போடும் ஆதரவோடும் நடப்பித்து வந்த B. K. P. ஸபையார் பலவகைச் செலவுகளையும் நிர்வஹித்துக் கொண்டு போவதற்காக டிக்கெட்டு நிபந்தனைவைத்து உபந்யாஸங்களை நடத்தி வந்தார்கள். இருபத்துமூன்று வருஷகாலம் டிக்கெட்டு நிபந்தனையோடுதான் நடந்தது. அப்போது ஒரு ஸமய விசேஷத்தில் எனக்கு ஒரு அபிப்பிராயம் தோன்றியது— டிக்கெட்டு நிபந்தனையை நிர்ப்பந்தமாக வைக்காமல் அபேக்ஷையுள்ள அகிஞ்சனர்களும் கேட்கும்படி நடத்திவர வேணுமென்று. ஆனால் இவ்வபிப்ராயம் 23 வருஷமாக உண்டாகாமல் திடீரென்று அப்போது உண்டானதற்கு என்ன காரணமென்று சிலர் கேட்கக்கூடும். இதைப்பற்றி நானே ஸபையில் விளக்கமாகத் தெரிவித்தேன். அதாவது, *கங்குலும்பகலின் சாத்துமுறையை பக்தவர்க்கங்க ளெல்லாரும் கூடி ஸ்ரீ ரங்கத்திலே ஸ்ரீ ரங்கநாதன் ஸன்னிதி முன்னிலையிலே இரண்டுநாள் நடத்தி வைத்தகாலத்தில் அடியேன் ஸ்ரீ ரங்கநாச்சியாரை ஸேவிக்கப்போனபோது அங்கிருந்த அந்தரங்க கைங்கரியபரர்கள் மிகவும் கொண்டாடி, "இங்கே இரண்டுநாள் வெகு ஆனந்தமாக அநுபவித்தோம்; நாங்கள் மதராஸுக்கு வந்து ஸ்வாமியின் காலக்ஷேபங்களைக் கேட்க விரும்பினால் அது எங்களுக்கு ப்ராப்தமாகிறதில்லை; காசுகொடுத்து டிக்கெட்டு பெற்றுக் கொள் என்கிறார்கள். ஸ்வாமி இவ்விடத்தில் வந்து ஸாதித்தது போல அங்கேயும் யாவரும்

அநுபவிக்கும்படி உபந்யாஸங்கள் செய்தால் ஸ்ரீ ரங்கநாச்சியார் திருவுள்ளத்திற்கு மிகவும் உகப்பாயிருக்கும்' என்று கூறினார்கள். இதைக் கேட்டவுடனே அடியேனுக்கு இது ஸ்ரீ ரங்கநாச்சியாருடைய நியமனம் என்று பட்டது. பிறகு சென்னையில் வந்து உபந்யாஸம் செய்யும்பொழுது இதைப் பலருமறிய ஸபையில் கூறி ஸபையதிகாரிகளிடத்திலும் தெரிவித்துக் கொண்டேன்; டிக்கெட் இருந்தால்தான் உபந்யாஸங்களுக்கு வரலாமென்கிற நிர்ப்பந்தம் கூடாது; Free ஆகவும் விடவேண்டுமென்றேன். ஸபை யதிகாரிகளுக்கு அது ஸௌகரியப்படாததால் 2, 3 மாதங்கள் உபந்யாஸம் நின்றிருந்தது. பிறகு பக்தவர்க்கங்கள் மிகவும் வருத்தமடைந்து வேறு ஸபையையாவது ஸ்தாபித்து அதன் மூலமாகப் பழையபடியே உபந்யாஸங்களைக் குறைவில்லாமல் நடத்தி வர வேணுமென்று முயன்று வந்தார்கள்.

— ஸத்காலக்ஷேபஸபாஸ்தாபனம் —

அதன் பயனாக ஸத்காலக்ஷேபஸபா என்றொரு புதிய ஸபை ஸ்தாபிக்கப்பட்டது. அதன் மூலமாக 1954ஆ அக்டோபர்மீ முதற்கொண்டு அடியேனுடைய உபந்யாஸங்கள் முன்போலவே தொண்டைமண்டலம் ஸ்கூல் ஹாலிலேயே சனி ஞாயிறுகளிலும், ஸமயாநுகுணமாக இதர கிழமைகளிலும் நடத்தப்பட்டுவந்தன. ஸபை மட்டும் வேறேயொழிய உபந்யாஸம் செய்யுமிடம் அதுவேயாயிருந்தது. மார்கழி மாதத்தில் மட்டும் ஸௌகரியங்களை நோக்கி வேறு ஹால்களில் திருப்பாவை யுபந்யாஸம் நடத்தி வைக்கப்பட்டது. மற்றபடி வாரந்தோறும் நடைபெறும் உபந்யாஸங்கள் பழைய படியே தொண்டைமண்டலம் ஸ்கூல் ஹாலிலேயே நடந்து வந்தன. வ்யவஸ்தையில்லாமல் கண்டவர்களும் கண்டபடி வந்து புகுந்துஅதிக்ரமங்கள் செய்யாமைக்காகவும், ஸபையின் காரியங்கள் ஒழுங்காகநடைபெற்று வருவதற்காகவும் அப்போதும் பிரவேசச்சீட்டு நிபந்தனையுண்டு. ஆனால் கேட்க விருப்பமுள்ளவர்கள் தடையின்றி உள்ளேபுக அனுமதிக்கப்பட்டார்கள்

— கீழ்ப்பாக் அட்வகேட் V. ராஜகோபாலாசாரியர் M. L. ஸ்வாமி —

புதிய ஸபையாகிய இந்த ஸத்காலக்ஷேப ஸபைக்கு ஸ்ரீமான் உவே. V. ராஜகோபாலாசாரியர் ஸ்வாமி M. L. [சென்னைப் பிரபல அட்வகேட்] நிரந்தர அக்ராஸநாதிபதியாக அமர்ந்திருந்தார். இந்த ஸ்வாமியின் ஸ்வக்ராமம் திருக்கண்ணபுரத்திற்கு ஸமீபத்திலுள்ள உபயவேதாந்தபுரம். இந்த ஸ்வாமி இருபது வருஷங்களுக்கு மேலாகவே நம்முடைய உபந்யாஸ கோஷ்டிக்குத் தவறாமல் வந்து கொண்டிருந்தவர் ஆஸ்திகாக்ரேஸரர். நம் பூர்வாசார்ய திவ்ய ஸூக்திகளில் ஆழ்ந்த அவகாஹனமுள்ளவர். இந்த ஸ்வாமியின் அக்ராஸனாதிபத்யத்தினால் நறுமணம் பெற்ற ஸத்காலக்ஷேப ஸபையின் நன்மைகளைப்பற்றி நாம் இங்கு விவரித்தெழுத வேண்டிய துண்டோ? இரண்டு மஹான்கள் வைஸ்பிரஸிடெண்டு ஸ்தானத்தில் அமர்ந்திருந்தார்கள். 1. ஸ்ரீமான் G. முஸலப்பரெட்டியார், அட்வகேட். 2. பரமார்த்த பூஷண நாதெள்ள ஸம்பத்து செட்டியார். இவ்விருவருங்கூட பழைய அபிமானிகளே. இவர்களுள் முஸலப்ப ரெட்டியார் பலவருஷங்களாக உபந்யாஸ கோஷ்டியை இடையறாது அநுபவித்து வந்தவர். தவிர, பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளில் ஆழ்ந்த அவகாஹனமுள்ளவர். இதிஹாஸ புராணங்களையும் வெகு ஊக்கத்துடன் ஆராய்ச்சிசெய்பவர் இவர் தொண்டைமண்டலம் ஸ்கூல் வாசலிலேயே க்ருஹமுள்ளவராதலாலும் உபந்யாஸங்களை விடாமல் அநுபவிக்க இவர்க்கு அதிக ஸௌகரியமேற்பட்டது.

அது பழையகால விருத்தாந்தம், அதன்பிறகு ஸ்ரீமான் உவே, உ. ஸ்ரீநிவாஸய்யங்கார், கொஞ்சேடி, ஸுப்ராயலு செட்டியார், A, V, கன்னையநாயுடு புலிபாடி ஸோமஸுந்தரராவ், கராலபாடி, ராதாகிருஷ்ணய்யா முதலான அபிமானிகள் ஸத்காலக்ஷேபஸபையைச் சிறப்பாக நடப்பித்து வருகிறார்கள், பலவருடங்களாக பிரஸிடெண்டு பதவியை அலங்கரித்திருந்த V, ராஜகோபாலாசாரியர் ஸ்வாமி சென்ற ஐப்பசி மாதத்தில் திருநாடலங்கரித்து விட்டபடியால் அவருடைய ஸ்தானத்தில் ஸ்ரீமான். ஊரா ஜகன்னாத செட்டியாரென்பவர் அமர்ந்திருக்கிறார், இவர் மற்றும்பல தருமஸ்தாபனங்களையும் நிர்வஹித்து வருபவர்.

உபந்யாஸ ஸபையில் வேற்றுமை விளைந்திருக்க வேண்டியதில்லை.—துர்விஜ்ஞாநஸ்வஹ்ருதயமஹோ தைவமத்ர ப்ரமாணம்" என்கிறபடியே ஆர்க்குமறிவரிதான எம்பெருமான் திருவுள்ளத்தினாலேயே விளைந்ததத்தனை. ஸபை வேறுபட்டாலும் ஸ்தலம் வேறுபடாமல் நடந்து வந்தது பலநாள்வரையில். 1931-ஆம் ஹூ முதலாக, எந்த நாட்டிலுள்ளவர்களும் பெரும்பாலும் இந்த உபந்யாஸ மண்டபத்திற் பிரவேசித்து ச்ரவணம் செய்தவர்களேயாவர். "இமவந்தந் தொடங்கி யிருங்கடலளவும்" என்று பெரியாழ்வார் ஸாதிக்கிறபடி ஆஸேதுசிதாசலமுள்ள ஸ்ரீ வைஷ்ணவர்கள் தமிழ்ப்பாஷையறியாதவர்களுங்கூட அனேகமாய் ச்ரோத்ருகோடியில் அந்வயித்துப் போவர்கள். திருவல்லிக்கேணியில் ஸுப்ரஸித்தராயிருந்த ஸ்ரீமத் M. O. பார்த்தஸாரதி ஐயங்காருடைய மைத்துனர் (late) ஸ்ரீ உவே. அளஸிங்கராசாரியர் ஸ்வாமி அனேக வருஷங்கள் இவ்வுபந்யாஸ மண்டபத்திற்கு வந்து கொண்டிருந்தார். அப்போது அந்த ஸ்வாமி அடிக்கடி ஒரு வார்த்தை சொல்லுவர்—"த்வீபாந்தரங்களில் தோன்றின பாச்சாத்யர்களாயிருந்தாலும் அவர்களுங்கூட இந்த ஸபாமண்டபத்தில் தங்கள் வாழ்நாளில் ஒரு நாளாவது புகுந்து புறப்பட வேண்டும்" என்று; இப்படி ப்ரேம பரவசர்களாய்ப் பல பெரியோர்கள் பேசின பேச்சுக்கள் பலபல. அப்போதிருந்த பெரியோர்களில் ஏறக்குறைய இருநூறு மஹான்கள் நாளடைவில் காலகதி யடைந்து விட்டார்கள்.

— ஸ்ரீமத்பரமஹம்ஸ இளங்காடுயதீந்த்ர ஸ்வாமிகள். —

உத்தமாச்ரமியான ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. இளங்காடு ஸ்வாமி யென்பவர் காஞ்சியில் பலவாண்டுகள் எழுந்தருளியிருந்தார். [இந்த ஸ்வாமிக்கு ரங்கூன் ஜீயர்ஸ்வாமி யென்று ஒரு ப்ரக்க்யாதியுண்டு. ப்ரத்யபிஜ்ஞைக்காகத்தெரிவித்தபடி.] அந்த ஸ்வாமி பூர்வாச்ரமத்திலிருந்தே மிகவும் பரிசிதராகையாலே நெருங்கிப்பழகுவதுண்டு அவர் அடிக்கடி ஸாதித்துக் கொண்டிருப்பர்-"அண்ணா! ஒரு நாளைக்கு என்னை சென்னைப்பட்டணத்து உபந்யாஸ மண்டபத்தில் கொண்டு போய் உட்கார வைக்க வேணுமே" என்று. அதற்கு அடியேன் ஒன்றும்பதில் சொல்லாமலேயிருந்துவந்தேன். ஒரு ஸமயம் அந்த ஸ்வாமி சென்னை மயிலாப்பூரிலுள்ள சில பக்தர்களின் வேண்டுகோளுக்கிணங்கி மயிலைக்கு எழுந்தருளும் படியாயிருந்தது. அப்

போது மார்கழி மாதம். திருப்பாவையுபந்யாஸம் தினப்படி மாலைவேளைகளில் நடந்து கொண்டிருப்பதைத் தெரிந்துகொண்டு ஸதுபாயத்தினுல் அவ்விடத்திற்கு ஸஹாயராய் எழுந்தருளிவிட்டார். முன்னுடி தெரிவித்தருளாமையால் ஆஸன ஸம்விதாநம் ஒன்றும் பண்ண முடியாமலிருந்தது. பரம ஸௌலப்யததாலே ஒரு நாற்காலியிலே வீற்றிருந்தார். உபந்யாஸம் முடிந்தபிறகு ஸ்ரீ ஸ்வாமி ஸாதித்த வார்த்தைகள் வெளியிடத்தகாதவை. ஆயினும்அவர் நெஞ்சுகனிந்து ஸாதித்தவை யென்னுங் காரணத்தினுல் அவற்றைச் சுருக்கமாகத் தெரிவிக்கிறேன்.

— இளங்காடு ஸ்வாமி ஸபையில் ஸாதித்த வார்த்தைகள் —

" அண்ணுவை பூர்வாச்ரமத்திலிருந்தே யறிவேன்; இவர் வித்யார்த்தியாய் புஸ்தகத்தைக் கையிலெடுத்துக்கொண்டு ஸன்னிதிவீதியில் போகும் போதெல்லாம் நான் ப்ரேமத்துடன் பார்த்தவன். எனக்கும் இவர்க்கும் வயதில் 15, 20 வருஷம் ஏற்றத்தாழ்வு உண்டு. ஆனுல் இளமையில் அடிக்கடி நான் என்ன நினைக்கிற வழக்கமென்ருல் 'நாம் இவரைவிட தாழ்ந்த வயதாயும் பெண்ணுயும் பிறவாமற் போனுேமே' யென்று நினைப்பது வழக்கம். இவரைக் கணவனுகக் கொள்ளும்படியான ஒரு பெண்மணியாய்ப் பிறவாமல் போனுேமே யென்று மிகவும் குறைப்பட்டிருந்தேன். இங்கே உபந்யாஸ மண்டபத்திற்கு வந்தபிறகு என்மனத்தில் தோன்றியதையும் ஸத்தியமாக உங்களிடம் சொல்லுகிறேன்' ஒரு செட்டியாராகவோ நாயுடுவாகவோ முதலியாராகவோ இந்த பேட்டையில் பிறவாமற்போனுேமே யென்கிற குறை தோன்றிற்று, பிராமணுய்ப்பிறந்தால் உபந்யாஸம் மட்டும் கேட்டுப் போவேன்: மேலே சொன்ன ஜாதிகளில் பிறந்தால், இவருக்கு இங்கே இரண்டு பக்கத்திலும் திருக்கச்சி நம்பி கைங்கரியம் செய்கிருர்களே, அதுவும் செய்ய பாக்கியம் பெறுவேன். ப்ராஹ்மண ஜன்மம் அஹங்கார ஜன்ம மல்லவா? கைங்கரியம் செய்ய ருசியுண்டாக மாட்டாதே?"

இப்படி அநுபாஷிக்கவும் தகாத வார்த்தைகளையே மேன்மேலும் தொடர்ச்சியாக அரைமணிகாலம் ஸாதித்துக்கொண்டு போனுர். அப்போது அங்கு என் திருத்தாயார் முன்னணியில் உட்கார்ந்திருப்பதைக் கடாக்ஷித்து விட்டார்' உடனே 'அம்மா அலமேலுவா?' என்று ஆரம்பித்து ஏதேதோ ஸாதித்தார். அப்போது அந்த ஸ்வாமியினுடைய பிரேமத்தின் கனத்தைக் கண்டு யாவருமே வியந்தார்கள், அந்த ஸ்வாமி, மறுநாளே வேலூருக்கு எழுந்தருளிவிட்டார். அவ்விடத்தில் புராண ப்ரவசனத்திற்காக பக்தர்களால் அழைக்கப்பட்டு அங்கே சென்று சேர்ந்து சில வருஷங்கள் ஸ்ரீராமாயண ப்ரவசனம்செய்து கொண்டிருந்தார். அங்கே போய்ச்சேர்ந்தவுடனே அங்குள்ள பெரியமனிதர்களிடத்தில் அடியேனைப்பற்றி விசேஷமாக ஸாதித்து "கிழவனுன நான் இங்கே ப்ரவசனம் செய்வது கிடக்கட்டும்: காஞ்சீபுரம் அண்ணுவை இங்கே வரவழைத்து அவரிடத்தில் நீங்கள் கேட்கவேணும்" என்று ப்ரரோசனம் செய்தார். "போத்தாரோ மத்ஸரக்ரஸ்தா:" என்று பர்த்ருஹரி சொன்னபடி. படித்தவர்களுக்கு நாமே மேன்மைபெற வேணுமென்கிற விருப்பமும் இதர பண்டிதர்களை இழித் துரைப்பதும் உலகில் பெரும் பான்மையான இயல்பு. இத்தகைய துர்குணத்தை அந்தமஹாஸ்வாமி அறவே அகற்றியிருந்தவர்.

## — சில வருடங்கள் வேலூரில் உபந்யாஸங்கள் —

அப்போது வேலூரில் ஸ்ரீரங்கம் உவே. ராஜகோபாலய்யங்காரென்பவர் போலீஸ் இலாகாவில் உயர்ந்த அதிகாரத்தில் இருந்து வந்தார். அவர்க்கும் அடியேனுக்கும் பரிசயமே யிருந்ததில்லை. மேலே குறித்த உத்தமாச்ரமிஸ்வாமி அந்த ராஜகோபாலையங்காரைத் தம்மிடம் வரவழைத்து அடியேனைப்பற்றி மிகமிகச் சொல்லி அவர்க்கு அடியேனிடத்தில் அபரிமிதமான ப்ராவண்யத்தை உண்டாக்கி விட்டார்' அவர் அடிக்கடி என்னைக்காணக் காஞ்சி புரத்திற்கு வருவதும் சென்னையில் உபந்யாஸங்கள் கேட்க வருவதுமாயிருந்தார் இரண்டொரு மாதத்திற்குள்ளேயே எம்மிருவர்க்கும் நிரவதிகமான நட்பு ஏற்பட்டு விட்டது. சென்னைக்கு வருவது போல் வேலூருக்கும் வாரந்தோறும் வந்து ஸ்ரீ ராமாயணோபந்யாஸங்கள் செய்ய வேணுமென்று நிர்ப்பந்திக்கத் தொடங்கினர். பிறகு மாதத்தில் இரண்டு முறை சென்று நான்கு உபந்யாஸங்கள் செய்து வருவதாக அங்கீகாரம் செய்து அப்படியே நடத்த வேண்டியதாயிற்று. மூன்று நான்கு வருஷகாலம் அவ்விதமாக நடந்து பட்டாபிஷேகம் செய்யப்பட்டது. அப்போது அந்த ராஜகோபாலையங்கார் தம்முடைய அதிகாரம் செல்லுமிடங்களான அர்க்கோணம் வாலாஜா ராணிபேட்டை ஆற்காடு காட்பாடி பள்ளிகொண்டை ஆம்பூர் வாணியம்பாடி முதலான பலவிடங்களில் அடிக்கடி தனிப்பட்ட உபந்யாஸங்கள் நடத்த ஏற்பாடு செய்வித்து என்னை நாடு நகரமும் நன்கறிந்த நபராக ஆக்கிவைத்தார். வேலூரில் ஸ்ரீ ராமாயண பட்டாபிஷேகம் ஆவதற்கு முன்னமே அந்த ஸ்வாமி உத்யோகத்தில் நின்றும் விச்ராந்தி பெற்று ஸ்ரீரங்கத்திற்கு நித்யவாஸமாக எழுந்தளினர். ஆயினும் அடிக்கடி காஞ்சிபுரத்திற்கும் சென்னைக்கும் வந்து சேருவர். அவர்க்கும் எனக்கும் தேஹ ஸம்பந்தம் அணுவளவுமில்லையாகிலும் சிறந்த பந்துக்களினும் மேலாகவே கலந்து பழகினர்.

## — வடநாட்டுச் சிறுயாத்திரை யொன்று —

மேலே ப்ரஸ்தாவித்த ராஜகோபாலையங்கார் ஸ்வாமி உத்யோகத்திலிருந்த போது ஒருமுறை வடநாட்டு க்ஷேத்ர தீர்த்த யாத்திரை செய்துவர விரும்பி என்னை யழைத்தார். அப்போது பத்தெட்டு பேர்களுடன் வெகு ஆனந்தமான யாத்திரை நடை பெற்றது. அந்தயாத்திரை இருபதுநாளில் முடிவுபெற்றது. பவஹ

ஆவணிமீ 6உ முதலாக 26உ வரையில் (22.8-34 to 11-9-34) நடந்தது. மதராஸில் புறப்பட்டு பண்டராபூர் என்கிற பாண்டுரங்கம், பாம்பே, நாஸிக்பஞ்சவடி, புஷ்கரம்' தேஹளி (அதாவது டெல்லி), ஹரித்வாரம், ஹ்ருஷிகேசம், லக்ஷ்மணஜூலா, ப்ருந்தாவனம், மதுரா,கோகுலம், கோவர்த்தனம், ப்ரயாகம், அயோத்யா, காசி' கயா, கல்கத்தா, ஜகந்நாதம் ஸிம்ஹாசலம் ஆக இவ்வளவு ஸ்தலங்களைக் கண்டு மீண்டு காஞ்சியில் ஸ்ரீதேவப்பெருமாளுடைய திருவடிவாரத்திற்கு வந்து சேர்ந்தாயிற்று. இந்த விஷயங்களை யிட்டுச் சிலச்லோகங்களை யெழுதும்படி அந்த ஸ்வாமி நியமித்தார். அப்படியே பத்தெட்டு சுலோகங்களினால் இந்த யாத்ராமார்க்கத்தை முத்ராலங்காரரீதியில் காட்டினேன். ச்லோகங்களின் அமைப்பு எப்படிப்பட்டதென்றால், யாத்திரை விஷயமாக இதில் யாதொன்றும் சொல்லப்படவில்லை: முழுவதும் ஸ்ரீ ராமபிரான் விஷயமான ஸ்தோத்ரமாகவே அமைக்கப்பட்டது. ஸ்ரீராமபிரானுடையதிருக்கல்யாண குணங்களை வருணிக்கும் படியான விசேஷணங்கள் ஒவ்வொருச்லோகத்திலும் அனேகங்கள் இடப்பட்டன. யாத்ராஸ்தோத்ராம்ருத மென்கிறவிது உரையோடும் அச்சிடப்பட்டுள்ளது. .... .... .... *

## — க்ரந்தமாலா ப்ரகாசனங்கள் —

ஸ்ரீமத் காதிஸ்வாமி ஸுதர்சன அச்சுக்கூடம் ஸ்தாபித்து அதில் பலவகைப் பட்ட க்ரந்தங்களை அச்சிட்டருளின விஷயம் ஜகத்ப்ரஸித்தம். அடியேன் பல வருடங்கள் ஸ்ரீஸ்வாமி திருவடிநிழலி லொதுங்கியிருந்து அந்த க்ரந்தப்ரகாசனப் பணியிலும் அந்வயித்திருந்து போதுபோக்கினபடியால் அந்த ஸ்வாமி திருநாட்டுக் கெழுந்தருளினபின்பும் அந்த வாஸனையின் தொடர்பினுல் ஸ்வகீயக்ரந்தப்ரணயந ப்ரகாசனங்களோடு நில்லாமல் பூர்வாசார்ய க்ரந்தங்களையும் தொடர்ந்து அச்சிட்டு வரவேணுமென்கிற ஆஸ்தையினுல் க்ரந்தமாலா கார்யாலய மேற்படுத்தி அதன் மூலமாக அனேக க்ரந்தமாலைகளை ப்ரசுரித்தேன், இற்றைக்கும் பிரசுரித்து வருகிறேன். இந்த க்ரந்தமாலைகள் தமிழ் தெலுங்கு தேவநாகரி ஆகிய மூன்று லிபிகளிலும் பிரசுரமாகி வருகின்றன. ஸ்ரீபகவத் ராமாநுஜக்ரந்தமாலை, பகவத்விஷய க்ரந்த மாலை, ஸ்ரீமத் வேதாந்த தேசிக க்ரந்தமாலை, ஸ்ரீமத் வரவரமுநீந்த்ரக்ரந்தமாலை, பூர்வாசார்யஸ்தோத்ரமாலை—என்றிப்படி பலமாலைகள் அச்சிட்டிருப்பது உலகம் பரவியுள்ளது. வேதாந்ததேசிக க்ரந்தமாலை யொன்றுமட்டுமே பிரதிகள் கைவச மில்லாமலும் மறுபதிப்புச் செய்யவும் ஸௌகரியமில்லாமலுமிருப்பது. மற்ற க்ரந்த மாலைகள் மறுபதிப்புக்களேறி பக்தர்களுக்குக் கிடைக்கக் கூடியவையாகவே உள்ளன. ப்ரகிருதம் மணவாளமாமுனிகளின் அறுநூறாண்டு நிறைவுவிழாவை யொட்டிப் பலபல நூல்கள் பலபாஷைகளில் அச்சிடப்பட்டு வருகின்றனவென்பதை உலகமறியும். சென்னையில் ஸத்க்ரந்தப்ரகாசனஸபையொன்று ஏற்படுத்தி அதன் மூலமாகவும் பல க்ரந்தங்கள் வெளியிடப்பட்டு வருகின்றன.

## — ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீமந்நாராயண ராமாநுஜஜீயர்ஸ்வாமிகள் —

உலகம் நிறைந்த புகழாளரான இந்த மஹாஸ்வாமியின் பரிசயம் பூர்வாச்ர மத்திலிருந்தே மிகவுள்ளதடியேனுக்கு. அதாவது முப்பத்தைந்து வருஷகாலமாக வுள்ளது. ஸ்வாமி செய்தருளும் அதிமாநுஷக்ருத்யங்களை நமது பரதகண்டம் முழுவதும் அறிந்துள்ளது, த்வீபாந்தரங்களு மறிந்துள்ளனவென்னலாம். ஸ்வாமியின் பிரபாவங்களை நமது ஸ்ரீராமாநுஜன் பலகால் வெளியிட்டுள்ளது. எம்பெருமானை ஸத்யகாமனென்றும் ஸத்யஸங்கல்பனென்றும் சொல்லி வருகிறோம். அத்தகைய சக்திவிசேஷத்தை நாம் ப்ரத்யக்ஷமாகப் பார்ப்பது இந்த ஜீயர்ஸ்வாமி பக்கலிலேதான். தற்காலம் அடியேன் செய்துவரும் க்ரந்தமாலா ப்ரகாசனம் இந்த மஹாஸ்வாமியின் அநிர்வசநீயமான உதவியினுலுமென்பதை க்ருதஜ்ஞதையுடன் பிரசுரம் செய்யவேண்டியது அவசியமாகின்றது., இந்த ஜீயர்ஸ்வாமியின் மனோரதங்களும் மனோரதபரிபூரண ப்ரகாரங்களும் அவாங்மநஸ கோசரங்களென்று மட்டும் இப்போது விஜ்ஞாபித்து நிறுத்துகிறேன். மேலேயும் விஜ்ஞாபிப்பேன்.

## — க்ரந்தமாலா கார்யாலய நிர்வஹணமும், அக்காரக்கனி ஸ்வாமியும் —

அடியேனுடைய ஜ்யேஷ்ட ஜாமாதாவாகிய ஸ்ரீமதுபயவே. திருமலை. அனந்தாண்பிள்ளை. அக்காரக்கனி. ஸம்பத்குமாராசாரியர், M.A. என்பவரைப்பற்றி

ஸ்ரீராமாநுஜனில் பலகால் ப்ரஸ்தாவித்திருக்கிறேன். இவர் M.A. பட்டம் பெற்றவராதலால் ஆங்கிலத்தில் பரிபூர்ண ப்ரஜ்ஞையுடையவர் என்பதைப் பலருமறிவர். அதனோடு இவர் ஸம்ஸ்க்ருதத்தில் ஸம்பாதித்திருக்கும் பாண்டித்யம் அளவு கடந்தது. திருநாராயணபுரம் காலேஜிலும் மைஸூர் ஸம்ஸ்கிருத காலேஜிலும் நியாய சாஸ்த்ரத்தையும் வேதாந்த சாஸ்த்ரத்தையும் பரிபூர்ணமாக அதிகரித்துப் பரீக்ஷைகள் கொடுத்துத் தேறியவர். இவருடைய திருத்தகப்பனருடையவும் பெரியதகப்பனருடையவும் ப்ரஸ்தாவம் கீழே (பக்கம் 56ல்) செய்யப்பட்டுள்ளது. அவர்கள் ஸம்பாதித்த சிஷ்ய ஸம்பத்தையும் பரிபாலித்து வருகிறார். அதனால் ஹிந்தி, குஜராத் பாஷைகளிலும் பரிபூர்ண பரிசயம் பெற்றவர். ஆங்கிலம் படித்தவர்கள் உத்யோக பதவிகளில் ப்ரதிஷ்டிதர்களாகிற முறையை இவரும் கைப்பற்றியிருந்தால் இவர் படைத்த ப்ரபல யோக்யதாதிசயங்கள் லோகோபகாரத்திற்கும், விசிஷ்ய அடியேனுடைய கார்யவர்க்க ஸஹயோகத்திற்கும் உரித்தாகாதென்று திருவுள்ளம்பற்றிய எம்பெருமான் இவரை உத்யோகத்தைப்பற்றின உத்யோகத்திலும் சிந்தை செலுத்தவொட்டாமல் முப்பது வருடங்களுக்குமேலாக அடியேனுக்குத் துணைபுரிய அமர்த்திவைத்தருளினன். இவருடைய ஸஹயோக பலத்தினாலேயே அடியேனுடைய க்ரந்தமாலா முத்ரணங்கள் அநாயாஸமாக நடைபெற்று வருகின்றன. அடியேனுக்கு எம்பெருமான் செய்தருளின உபகாரங்களில் இது தலையான மஹோபகாரமென்னத் தட்டில்லை.

## — திவ்யப்ரபந்த ஹிந்தீடீகைகளின் விவரணம் —

திவ்யப் பிரபந்தங்களுக்கு அடியேன் ஸம்ஸ்க்ருத வியாக்கியானங்களெழுதியிருப்பதை ஏற்கெனவே ப்ரஸ்தாவித்திருக்கிறேன். அதனால் உத்தராதி ஸ்ரீவைஷ்ணவர்களுக்குப் பரிபூர்ண த்ருப்தியுண்டாக வழியில்லை. அந்த வியாக்கியானம் ஹிந்தி பாஷையில் வெளிவர வேணுமென்பதே வட நாட்டினரின் முக்கியமான நோக்கமாயிருந்தது. மேலே ப்ரஸ்தாவித்த எனது ஜாமாதாஸ்வாமியினால் அப்பெரிய கைங்கரியம் நிறைவேறிற்று, நிறைவேறி வருகிறது. என்னுடைய ஸம்ஸ்க்ருத டீகையை ஏற்றத் தாழ்வின்றி ஹிந்தியில் அநுவதித்திருக்கிறார் ஸ்ரீ ஜாமாதா. பன்னிரண்டு வருஷங்களுக்கு மேலாக இந்த மஹத்தான கைங்கரியம் நடைபெற்று வருகின்றது. ஏற்கெனவே முதலாயிரத்திற்குப் பூர்த்தியாக ஸம்ஸ்க்ருத வியாக்கியானம் மட்டும் அச்சாகி வெளிவந்திருப்பதைத் தெரிவித்தேன். ஹிந்தீடீகை அவதரிக்கத் தொடங்கியபின் ஆதியிலிருந்தே (அதாவது திருப்பல்லாண்டிலிருந்தே) தொடங்கி புதுரீதியில் அச்சிட ஆரம்பமாயிற்று. ஸம்ஸ்க்ருதடீகையும் ஹிந்தீடீகையும் விரவி இதுவரை அச்சாகியுள்ள பாகங்கள்—திருப்பல்லாண்டு முதல் கண்ணிநுண் சிறுத்தாம்பளவான முதலாயிரம். பெரிய திருமொழியில் 1, 2, 10, 11 பத்துக்கள். இயற்பாவில் திருவெழு கூற்றிருக்கை, சிறிய திருமடல் பெரிய திருமடல், இராமானுச நூற்றந்தாதி. திருவாய்மொழியாயிரத்தில் ஒன்று முதல் ஆறும்பத்து முடிய மிகவிரிவான வியாக்கியானம். உபதேசரத்தினமாலை. ஆக இவ்வளவு பாகம் ஸம்ஸ்க்ருத ஹிந்திடீகைகளுடன் வெளிவந்து உலகம் பரவியுள்ளது. இவற்றுள் ஸஹஸ்ரகீதி யென்கிற திருவாய்மொழிக்கு அமைந்திருக்கும்

வியாக்கியானம் விசேஷித்து நம் நாட்டினராலும் அநுபவிக்கத்தக்கதாயுள்ளது. ஈடு முப்பத்தாறுயிரத்திலுள்ள விஷயங்கள் விடுபடாமலும் அதிகமான விஷயங்கள் சேர்ந்தும் விளங்குவதை ரஸிகஸஹ்ருதயர்கள் அநுபவிக்கவேணும். இந்த பதிப்பு விரைவில் நிச்சேஷமாக முடிவுபெற வேண்டும், அருளாளனருளால் முடிவுபெறும்.

## — மாதாந்தப் பத்திரிகைகளின் பிரசாரம் —

இளமையில் வனமாலிகை என்னும் பெயராலும் ப்ரஹ்மவித்யா என்னும் பெயராலும் தமிழ்ப் பத்திரிகைகள் ஒன்றிரண்டு வருஷம் நடத்தப்பட்டு வந்தன. அதெல்லாம் முப்பது வயதுக்கு உட்பட்ட செய்தி. நாற்பது வயதுக்குமேல், ஸ்ரீரங்கத்தில் உவே. பண்டிதராஜ மெ. ஸுந்தரராஜாசாரியர் தம்முடைய ஸ்ரீவிலாசம் அச்சுக் கூடத்திலிருந்து ஒரு மாதப் பத்திரிகை வெளியிட்டுவரவேணுமென்று விரும்பினபடியால் அம்ருதலஹரீ என்னும் பெயரால் ஒரு பத்ரிகையை மாதந்தோறும் வெளியிடத் தொடங்கி இருபது ஸம்வத்ஸரம் பிரசுரம் செய்து வந்தேன். அதனிடையிலேயே ஸ்ரீராமாநுஜன் என்கிற பத்ரிகையைப் பிரசுரிக்க ஆரம்பித்தேன்; அதற்கு இப்போது இருபத்திரண்டாவது பிராயம் நடந்து வருகின்றது. இது காறும் 255 இதழ்கள் வெளிவந்து உலகம் பரவியிருப்பதை நாம் எழுதவேணுமோ? வைதிகமநோஹரா என்கிற ஸம்ஸ்க்ருத பத்ரிகையும், ஸ்ரீராமாநுஜபத்ரிகா என்கிற தெலுங்கு பத்ரிகையும் ஸ்ரீராமாநுஜனோடு கூடவே ஆரம்பிக்கப்பட்டு அவையும் நடைபெற்று வருகின்றன. நம்முடைய தமிழ் நாட்டினர் ஸ்ரீராமாநுஜனை விலக்ஷணமான விருந்தாகவே மதித்து அநுபவித்து ஆனந்தித்து வருகிறார்கள்.

ஆரம்பத்திலிருந்து நூறு இதழ்கள் வரையில் இப்போது கிடைக்கக் கூடியனவாக இல்லை. நூற்றோராவது இதழிலிருந்து இன்றளவும் வெளிவந்த இதழ்கள் பெரும்பாலும் கிடைக்கக்கூடியவை. இவ்விதழ்களில் "யதிஹாஸ்தி ததந்யத்ர யந்நேஹாஸ்தி ந தத் க்வசித்" என்னலாம்படியாக ஸகல விஷயங்களும் வெளிவந்திருக்கின்றனவென்று அடிக்கடி ஆப்தர்கள் தெரிவித்து வருவதை அநுவதிக்கிறேனத்தனை. எந்த இதழில் எந்த விஷயமுள்ளது என்பதை யாவரும் எளிதாகத் தெரிந்துகொள்ளும்படி இதோ அட்டவணை யொன்று வெளியிடுகிறேன். விஷயங்களை அகராதி வரிசையில் அமைத்திருக்கின்றேன். ஸஞ்சிகையின் லக்கமும் இட்டிருக்கின்றேன். பெரும்பாலும் அந்த ஸஞ்சிகைகள் சேமித்து வைக்கப்பட்டிருப்பதால் அபேக்ஷையுள்ளவர்கள் V.P.P. மூலம் பெற்று வாசிக்க அருமை யிராது. விஷயத்தைக் குறிப்பிடுவதுடன் ஸஞ்சிகையின் லக்கத்தையும் அவர்கள் குறிப்பிடவேண்டும். அடுத்த பக்கத்திலிருந்து அந்த விஷய ஸூசிகை காணத்தக்கது.

ஸ்ரீராமாநுஜனில் சேராமல் தனிப் பதிப்பான நூல்கள் ஏறக்குறைய ஐந்நூறு உண்டு. அவற்றின் பெயர்கள் ஸ்ரீராமாநுஜனில் பலகால் வெளிவந்தவையே. இதிலும் ஒருவாறு வெளிவரும். முப்பது நாற்பது வருடங்களுக்குமுன் அச்சிடப்பட்டவை பெரும்பாலும் அரியவையே. சில மறுபதிப்புச் செய்தும் வெளியிடப்பட்டு வருகின்றன. கியாடலாகுகள் வரவழைத்துக் காண்க.

# ஸ்ரீராமாநுஜன் 101 முதல் 257 வரையில் பிரசுரமாகியுள்ள வியாஸங்களுக்கும் நூல்களுக்கும் அகராதியட்டவணை.

லக்கம்—ஸ்ரீராமாநுஜன் வரிசை லக்கம்


ஸ்ரீசைலேசதயாபாத்ரதிவ்யார்த்தம் 207
ஸ்ரீ ஜயந்தியநுபவம் 128, 129
ஸ்ரீ பாஷ்யச்ருதப்ரகாசிகைகளில் சில திருத்தங்கள் 172
ஸ்ரீ பாஷ்யாதிகரணமெழுபத்தாறு முதல் 221
ஸ்ரீ பெரும்பூதூரில் வித்வத்ஸதஸ்ஸு 222
ஸ்ரீரங்க யுகாதியுத்ஸவம் 135, 136
ஸ்ரீரங்கநாதபாதுகையில் புண்ட்ர சிற்பம் 221
ஸ்ரீரங்கநாத பாதுகா 121, 223, 249
ஸ்ரீரங்கம் தென்னுசார்ய ஸபையின் வெள்ளிவிழாக் கொண்டாட்டம் 210, 211
ஸ்ரீ ராமாநுஜ சரித்ர தத்துவம் 193
ஸ்ரீ ராமாநுஜ ஜயந்தி மலர் 161, 162
ஸ்ரீ ராமாயண கௌஸ்துபம் 181 to 184
ஸ்ரீ ராமாயணத்தில் பதினெட்டு 209
ஸ்ரீ ராமாயணத்தில் ஆராய்ச்சிகள் 116, 117
ஸ்ரீ ராமாயண விசேஷார்த்தமொன்று 157
ஸ்ரீ வசனபூஷணத்தில் பதினெட்டு 216
ஸ்ரீ ராமாயணத்தில் ஆராய்ச்சிகள் 116, 117
ஸ்ரீ ராமாநுஜரைப்பற்றி இருபது 229
ஸ்ரீ ராமாநுஜரைப் பற்றி இருபத்தொன்று 241
ஸ்ரீ ராமாயணமும் சரணாகதிகளும் 232
ஸ்ரீ ஸூக்தி ரத்னாகரஸ்வாமீ 237
ஸ்ரீ ரங்கவ்யவஹாரஸாரம் 237
ஸ்ரீமந் நாராயண ஜீயர் ஸ்வாமீ 241, 242
ஸ்ரீமத் பராங்குசபதாம்புஜ ப்ருங்கராஜம் 242
ஸ்ரீ பெரும்பூதூர் எதிராஜமடம் 242
ஸ்ரீ வில்லிபுத்தூரில் சோகவார்த்தை 242
ஸ்ரீ வசன பூஷணார்த்த விசேஷமொன்று 246
ஸ்ரீ வைஷ்ணவ வுலகுக்கு விருந்து 250
ஸ்ரீ ரங்கஸபை யுபந்யாஸங்கள் 253
ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் பதினெட்டு 216
ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு விருந்து 168
ஸ்ரீ வைஷ்ணவ லக்ஷணம் 167
ஸ்ரீ வைஷ்ணவ வுலகமெல்லாம் குறிக்கொள்ளவேணும் 224
ஸ்ரீ வைஷ்ணவ ஸமாராதனம் 187
ஸ்ரீக்ருஷ்ணன் ஸன்னிதி வைபவம்பற்றி 227
அங்கண்மாஞாலத்தமுது 101
அட்வகேட் அமுதர்ஸம்பாஷணை 185, 186
அத்புதோபந்யாஸமாலை 114, 115
அத்ருஷ்டார்த்த பரமார்த்தம் 119
அத்ருஷ்டார்த்தாநுஷ்டானத்தைப்பற்றி 224
அபத்த பாடங்களின் அநுவ்ருத்தி 128
அபம்ருத்யுவுக்குத் தப்பிப்பிழைத்தது 116
அபயப்ரதான ஸாரார்த்த விசேஷம் 226
அபர்யாப்தாம்ருதரஸாஸ்வாத: (ஸம்ஸ்க்ருதம்) 221
அமுதனின் அமுதம் (ஸத்யமூர்த்தி) 214
அருளிச்செயலுவமையெழுபத்தாறு 220
அரையர்ஸேவையின் அடைவு 218, 219
அஷ்டக்ரஹயோகத்தைப்பற்றி 167
அஷ்டாதசாஷ்டாதச மஹார்த்தநிதி 204
அஹோபில விசேஷங்கள் பதினெட்டு 204
அஹோபிலஜீயரும் வானமாமலையும் 149
அழகுதிகழ்ந்திடுமைப்பசித் திருமூலம் 178
அக்காரக்கனி ஸம்பத் குமாராசாரியர் ஷஷ்டியப்த பூர்த்தி 242
அமுதனுருடைய பெருமை 229
அண்ணங்கராசாரியர் ராஷ்ட்ரபதிவிருது 229
அடியேன் பழங்கதை யொன்று 232
அர்ச்சாவதார பரிபாலனம் 233
அந்தாதிகரணத்தில் அரிய விஷயம் 233
அடியார்க்கென்னை யாட்படுத்த விமலன் 234
அத்யாபகபாடங்களின் அநுவ்ருத்தி 237, 238
அசித்தத்வ நிரூபண ஸாரம் 239, 240
அத்ருஷ்டார்த்த இதிஹாஸ மாலை 240
அண்ணாதுரையின் மறைவு 242
அபூர்வக்ரந்த வெளியீடு 242
அழகிரிசாமியவர்களின் ஆதரம் 242
அந்தவாத் அந்நாதோபவதி 244
அஸூயையை வென்றவர்கள் காண்க 250
அபிமானிகளின் பஹுமானம் 250
அபூர்வக்ரந்த லாபம் 251
அன்பர்களிருவரைப்பற்றி 251
அந்த வகுப்பில் படித்தவர்களில்லையா? 251
அருளிச் செயல் வியாக்கியான நிதி (பட்டர்) 255

ஆப்தர்களின் அறுபதாண்டு பூர்த்தி 229
ஆண்டவன் திருமண் காப்பு 235
ஆண்டாளுடைய ஸேவை 236
ஆளவந்தார் பெருமை 239, 240
ஆழ்வார்களுகந்த தேசிகன் 239
ஆத்மானந்தச் செய்தியொன்று 265
ஆஸ்திக பக்தர்களுககு ஆனந்தச்செய்தி 255
ஆசார்ய சம்பு அபிநந்தனம்
(ஸம்ஸ்க்ருதம்) 187
ஆசார்ய சம்புவின் மதிப்புரை 187
ஆசார்ய ஹ்ருதயத்தில் பதினெட்டு 216
ஆசார்யஹ்ருதய விமர்சம் 168
ஆண்டவன் ஷஷ்டியப்த பூர்த்தி
யுபந்யாஸங்கள் 221
அண்டவன் ஷஷ்டியப்த பூர்த்திமலர்
விமர்சம் 222
ஆண்டவன் முன்பே உபந்யாஸங்கள் 186
ஆண்டவன் பத்ரிகைக்கு அருமையான
விடை யளிப்பு 224
ஆனந்தமில்லை ஆச்சரியமேயுள்ளது 226
ஆராவமுதனும் ஆழ்வாரும்
ஆராவமுதும் அர்த்தபஞ்சகமும்
ஆராவமுதே அநுபவம் } 221
ஆளவந்தரும் எம்பெருமானும் 214
ஆழ்வான் தனியன்களின் அருமை 179
ஆழ்வான் ஸூக்தி பரிஷ்காரம் 183
ஆழ்வானுடைய உக்திசமத்காரம் 179
ஆழ்வார்களின் அவதாரகால நிர்ணயம் 171
ஆழ்வார்களின் பெருமையைப்பற்றி 224
ஆழ்வார்களுகந்த இராமன்-கண்ணன் 173
ஆழ்வார் திருநகரியில் அருளிச்செயல்
நித்யஸேவையின் அடைவு 224
ஆழ்வார் பெண்மையின் தத்துவம் 197, 198
ஆக்ஷேப ஸமாதானங்கள் 227
இதை வாசித்து ரஸிக்க 233
இராவணனுடைய ஆசாரியர்கள் 160
இருநூறு உபந்யாஸங்கள்
(உபந்யாஸ சதத்வயம் என்று
வருமிடம் காண்க)
இளையபெருமாள் அஸத்யவாதியா? 116, 117
ஈச்வரதத்வ நிருபண ஸாரம் 239
ஈட்டில் ஓர் விநோதக் கதை 248
ஈந்தனளியாதவில்லருள் 212, 213
உபய வேதாந்திகளுக்கு விஜ்ஞாபனம் 248
உகந்தருளின நிலங்கள் சிலவற்றின்
விமர்சம் 248
உத்யான பத்ரிகையின் கோளாறு 231
உண்மை ஸ்ரீ வைஷ்ணவர் 224
உத்தமக்ராமஜுர்க்கு உத்தமோபதேசம் 147
உத்தமூர் வியாஸ விமர்சம் 222
உத்தரதேச யாத்திரை விளக்கு 116, 117
உபந்யாஸ விம்சதி 140 to 142
உபந்யாஸ ஸப்தகம் 169
உபந்யாஸ சதத்வயம் 199, 200, 201, 202
206, 207, 208
உபமா காலிதாஸஸ்ய 172
உபயவேதாந்த மணித்திரள்கள் 153, 154,
155, 156, 157
எழுபத்தேழு பெரியார்களின் பெருமை
225 to 286
எம்பெருமானுர் ஸ்ரீஸூக்தி யநுபவம் 238
எம்பெருமானுர் பெருமை 239
எல்லாம் நன்கு நடந்தது ஆனல் 239
எங்கப்பா முதல்"திரையில் அமுது
செய்கிருர் 248
எம்பார்ஜீயர் ஸ்வாமி 249
எச்சூர் பட்டண்ணுவின் மறைவு 250
எம்பெருமானை நோக்கிக் கேள்விகள் 252
எம்பார் ராமாநுஜாசாரியர் 242
எம்பார் வேங்கடாசாரியர் பெருமை 225
எம்பெருமான் ஆராதனைக்கெளியன் 223
எம்பெருமானும் காளியமர்த்தனமும் 167
எம்பெருமானுடைய ஒரு குணநுபவம் 160
"எத்திறமுரலினேடு" அநுபவம் 160
என்னடா காக்கா பிடிக்கிருய்? 188, 189
எழுநூறும் எழுபத்தேழும் 226
எழுபத்துநான்கு நல்வார்த்தைகள் 194
எழுபத்துநான்கு விருந்துகள் 195, 196
எழுபத்தைந்து வினு விடைகள் 211, 212
213
எழுபது நல்வார்த்தைத் திரள் 145, 146
ஐவர் குணநுபவம் 231
ஐப்பசித் திருமூல நன்னுட்சிறப்பு 143
ஐப்பசித்திருமூல மலர் 190

ஒரு மஹா புருஷ ஸம்வாதம் 229
ஓர் அறிவிப்பு (A. K. Satakopan) 226
ஒவ்வில்லாத உழைப்புகள் 237
ஓரெழுத்தினுல் நாலெழுத்து வீண் 223
கலியனும் கண்ணனும் 244
கஜேந்திரன் கதையில் மருமம் 246
கத்யத்ரய ஸூக்தி விசேஷங்கள் 233
கள்ள வேடத்தைக் கொண்டுபோய் 234
கடியாரம் போலிருக்க முடியுமா? 235
கடிதம் (காலக்ஷேப வைபவம்) 2£6
கண்ணனும் ஏலாப் பொய்களும் 236
கண்டீரவாவதாரகாரண நிருபணம் 143
கண்ணனும் திருப்பாணாழ்வாரும் 144
கண்ணபிரானது குணநுபவம் 160
கற்கியின் மதுரவார்த்தை 248
காசுக்குதவாதகளேபரங்கள் 237
கீதா பாஷ்யார்த்த விசேஷங்கள் 231, 243
குணஹாகர ஸூக்தி விசேஷம் 238
குலசேகராழ்வார் பெருமை 239
,, திருமொழியநுபவம் 243
கூரத்தில் நிகழ்ச்சி 234
கூரத்தாழ்வான் பெருமை 239
கூரத்தாழ்வானைதிஹ்யம் 241
கைசிக புராணம் 232
கொப்பரம் நடேச செட்டி 242
கோதை தமிழ் மாலை நறுமணம் 230
கோவிந்தசாமியின் மறைவு 235
கோதார்த்தோஷ விமர்சம் 237
கோயிற் கடிதமொன்று 237
கோஷ்டிபுரம் ஸ்வாமி யநுபவம் 239
கோமடம் சடகோபாசார் ஸ்வாமி 251
சமதமார்த்தவிபர்யய விமர்சம் 231
சரமச்லோகார்த்த ஸாரம் 239
சங்கரஷண்மதமகாநாடு 246
சாரதாவித்யா நிலயோபந்யாஸம் 255
சென்னை நண்பர்களின் சிறந்த மொழிகள் 241
சொட்டை நம்பிவார்த்தை 243
கம்பர்கண்ட கண்டீரவம் 143
கயார்த்த ஸந்தேஹ பரிஹாரம் 116
கரியமாணிக்க மாணிக்கங்கள் 226
கலியனும் கண்ணனும் 120
நாகம் பெற்ற பேறு 187
காமகோடி ஸ்வாமிகள் 226
காளியமர்த்தன விசேஷம் 133, 224
கூரத்தாழ்வானும் சோழராஜனும் 118
கோதை தமிழ்சுவையமுதம் 120
கோதை தமிழும் திருப்பாவை ஜீயரும் 167
சங்கத் தமிழ்மாலை முப்பது 158, 159, 160
சதுர்தச வித்யாபாரங்கதத்வம் 179
சரணாகதியின் பெருமை 221
சாங்கரசிரோபூஷா விபூஷணம் 116, 117
செய்யதமிழ்மாலைகளினுல் தெளிவு 221
ஜடநிர்த்தாரண நிவாரணம் 186
ஜீவாத்மாவின் அந்தரங்க நிருபகம் 233
ஜிக்ஞாஸுவுக்கு விக்ஞாபனம் 243
தாம சாஸ்த்ர ஸந்தேஹ பரிஹாரம் 239
திருமாலிருஞ்சோலைத் தீர்ப்பு 230
திருவாடிப்பூரத்தநுபவம் 236
திவ்யப்ரபந்த பரீக்ஷைகள் 237
திருமலை பெரியஜீயர் 237
திருப்புட்குழி ஸ்வாமியைப்பற்றி 239
திருவயிந்திரபுரமும் தேசிகனும் 239
திருப்பாவைக்கேற்ற அலங்காரம் 242
திருப்பாவை ஸ்வாபதேசார்த்தங்கள் 242
திருப்பாவையில் அர்த்த பஞ்சகம் 242
திருக்கச்சி நம்பிகளநுபவம் 248
திருமலையில் சித்ரகவித்வம் 243
திருவரங்கத்தநுபவம் 258
துஷ்டர்களுக்கு தருமருசியுண்டாகுல் 234
தூப்புல் மலரின் துயக்கு 239
தூயபெருநீர் யமுனைக்கதை 258
தென்னுட்டு யாத்திரை 245
தேசிக சிஷ்யஸம்வாதம் 242, 243
தேசிகனுருவது நூற்ருண்டுவிழா 237
தேவப்பெருநாளுத்ஸவம் 246
தேவப்பெருமாள் திருவருள் 249
த்ரமிடாத்ரேய தர்சனவிமர்சனம் 116, 117
த்ரௌபதீ விதுத்தாரம் 172
தத்வத்ரயத்தில் பதினெட்டு 216
தத்வத்ரயஸாரம் 155, 156
தன்சரிதைச் சுருக்கம் 256
திருக்கோட்டியூர் ஸுப்ரபாதம் 168
திருப்பாவை ஜீயர் 163, 164
திருப்பாவை ராமாயணம் 181
திருமஞ்சனக் கவி பன்னிரண்டு 206, 207

திருவத்யயநோத்ஸவ வைபவதீபிகை 218, 219
திருவரங்கநாதன் திவ்யகுணாநுபவம் 226
திருவல்லிக்கேணியுபந்யாஸமாலை 165
திருவாய்மொழி நூற்றந்தாதின் பெருமை 225
திருவாய்மொழி நூற்றந்தாதி விளக்கம் 106
திருவேங்கடமாலையுரை 153 முதல்
திருவேங்கடமுடையான் சித்ரகவித்வம் 141
திவ்யதம்பதி வைபவவிம்சதி 228
திவ்யப்ரபந்தங்களில் அருமையான 16 கதைகள் 135, 136
திவ்யப்ரபந்தத் திருமகள் வாழ்த்து மாலை 157
துர்க்கந்த துரீகரணம் 143
துஷ்யந்திச ரமந்திச 179
தூது நாலுக்கும் விஷயம் 167
தென்னாசார்யர்களின் கர்மாநுஷ்டானத்தைப்பற்றி 224
தெய்வம்! தெய்வம்! தெய்வம்! 221
தேசிகஸஹஸ்ரநாம விமர்சம் 109. 110, 121
தேசிக ஹ்ருதயம் 141. 142
தேவராஜஸ்வாமி தேவஸ்தானமும் தாததேசிக குடும்பமும் 191, 192
தேவப்பெருமான் ஆடிகருடன் 214
தேவப்பெருமான் ஸந்நிதி விமர்சம் 153
தேவப்பெருமான் ஸுப்ரபாதம் 168
தேவாலய தர்ம பரிபாலனம் 223
த்ருஷ்டிர்ஹ ப்ரியா நிரீக்ஷணம் 147
த்ருஷ்டிர்ஹ ப்ரியாப்ரத்யாக்யாநம் 150
நம்மாழ்வாரந்யாபதேசப் பாக்கள் 224
நற்பொருளெழுநூறு முதலாக 229
நம்முன்னோர் செய்த மூன்று செய்திகள் 232
நம்பாடுவான் சரித்திரம் 232
நாதமுனிகள் மஹோத்ஸவம் 234
நெடுஞ்செழியனோடு P. B. A. 235
நிரீரங்கத்தில் காலக்ஷேபங்கள் 235
நமது இரண்டே வரி 236
நாச்சியார் திருமொழியில் 4 திருமொழிகள் 236
நல்வார்த்தை நானூறு 170 முதல்
நற்பொருளெழுநூறு 227 முதல்
நான்கு தூதுகளின் மருமம் 167
நாம் இருக்கவேண்டியவிதம் யாது? 179
நாராயணனருளால் பெற்றபேறுகள் 217
நினைவுக்கு வருவன நவிலுதல் 225 to 229
நூற்றெட்டுத் திருப்பதிப் பாடல் 218, 219
நூற்றைம்பது நல்வார்த்தைகள் 151, 164
பக்தன் கதையொன்று 157, 185
பகவத்கீதையில் பதினெட்டு 204, 205
பகவத் விஷயத்தில் பதினெட்டு 216
பச்சைப்பசும் பொய்யைப்பற்றி 191, 192
பஞ்சஸப்ததி பரமார்த்த ரத்னம் 211
பட்டர் ஸ்ரீஸூக்தி பரிஷ்காரம் 124, 125
"பணிய விசையில் திசைமுகன்" 119
பதினறு நன்மொழிகள் 191, 192
பராங்குச முனியும் பரகால கவியும் 197, 198
பராபவ வத்ஸர பங்குனி விசாக மலர் (பலவிடங்களில் நடத்திய உபந்யாஸங்களின் ஸாரம் 220-B
பழைய யாத்திரை விசேஷம் 226
பாகவதாபிமானம் 224
பாதுகாஸஹஸ்ர துர்வாதபங்கம் 182, 183
பாதுகாஸஹஸ்ர விசாரம் 184
பாரிஜாதபுஷ்ப துர்நாற்றம் 148
பாரிஜாதாபஹரணம் 135, 136
பிரபந்தஸாரதத்வ ப்ரதிஷ்டா 135, 136
பிரபந்தஸார தத்வஸாரம் 182
''பிரபந்தஸாரம்''பற்றிய—18 204, 206
பிராட்டியை ஸாமான்ய ஜீவனாக நினைத்துப் பேசுகிறார்களென்பது பற்றி 224
புநர்வஸு பரீக்ஷணம் 120
பூதிகந்தி புஷ்பப்ரஹரணம் 147, 148
பூதிகந்தி புஷ்பப்ரஹார ஸப்ததி 147, 148
பூருவாசாரிய க்ரந்தங்களைப் பற்றிய பதினெட்டு 204, 205
பூருவாசாரியர்களின் ஐகமத்யம் 217
பூர்வாசார்ய ப்ரபாவம் 197, 198
பெரியவாச்சான்பிள்ளை வேதாந்த தேசிகர் விஷயமான ஆங்கில வியாஸத்தின் தமிழ் விளக்கம் 217
பெரியாழ்வார் திருமகள் 119
பெரியாழ்வாருடைய அனுபவம் 167
பொய்கையாழ்வார் அஷ்டோத்தரம் 168
போகத்தில் வழுவாத புதுவைக்கோன் 212, 213
ப்ரபத்திப்ரபாவ பரிசீலனம் 222
ப்ரபந்தஸார ஸப்தவிதாநுபபத்திகள் 214
ப்ரபந்தஸாராஸ்வாதிந் ப்ரஹரணம் 126, 136
ப்ரஹ்மவித்யா பத்ரிகையின் அதர்க்கணச்செயல் (வடமொழியிலும்) 167
மத்தினுலோசைபடுத்த தயிரரவம் 109
மதுராந்தகம் வீரராகவாசாரியர்க்கு 226
மதுரோக்தி மஞ்சரி 137, 138
மதுரோபந்யாஸமாலை 110
மநுஸ்ம்ருதியில் பதினெட்டு 204, 205

மருமமான வேதாந்த தத்துவம் 158, 159
மலைநாட்டுத் திருப்பதி யாத்திரை 145, 146
மார்கழி நீராட்டத்தின் மருமம் 218, 219
மிருஜானச் சிறுகுழவியின் மறைவு 143
முப்பதும் தப்பாமே 145
முமுக்ஷுப்படியில் மூன்று—18 216
மூன்றுதத்துவ விமர்சனம் 107, 108
யதீந்த்ரரும் யதீந்த்ரப்ரவணரும் 216, 244
யதோக்தகாரி அஷ்டோத்தரம் 168
யதோக்தகாரி ஸுப்ரபாதம்
யதார்த்தவாதிபஹுஜநத்வேஷீ 234
யஜுர்வேத ஸம்ரம் 244
யாத்திரைகளைப்பற்றி 236
யாதவப்ரகாசரைப்பற்றி 251
ரஹஸ்யார்த்த விசேஷம் 157
ராமசாமி ராமாயணம் 140
ராமாநுஜத்வய காவியமர்தனம் 224
ராமானுஜருக்கும் ராமாநுஜனுக்கும்
ஒற்றுமைகள் பதினெட்டு 204, 205
ரஸ்யரஹஸ்யார்த்தங்களிரண்டு 242
ரத்னவளியைப்பற்றி 242
ராஜகோபாலையங்கார் 60 பூர்த்தி 253
லோகாபிராம நல்வார்த்தைத்திரள் 147, 148
லக்ஷணபத்ததி சிக்ஷணம் 237
லிப்கோ கடிதமொன்று 236
வரவரமுநிசதகவுளிர 191, 192
வளவேழுலகு அநுபவம் 194
வதரி வணங்கிய வரலாறு (அட்வகேட்) 225
வரதாஜய்யங்கார் (R) ஸ்வாமி 226
விசிஷ்டாத்வைத ஸர்வஸ்வம் 137, 138
விண்ணிலமேலாப்பு விசேஷம் 113
வித்யாபரிச்ரம பரீக்ஷா 214
வினவுக்கு உடனே பதில் 224
விப்ரலம்பவித்வம்ஸநம் 135, 136
விமர்சபரீக்ஷா விமர்சனம் 121
விலக்ஷண ஜநதுபகாரம் 214
விசதவாக்சிகாமணிவாக்வைசத்யம் 191, 192
விஷ்ணுகாஞ்சிக் கட்டுரைக்கு விடை 220
விளக்கொளி... வ்யவஹாரத்தீர்ப்பு
(ஆங்கிலம்) 135, 136
விளக்கொளியும் தேசிகனும் 141, 142
வேத ப்ராஹ்மணத்தில் 18 204, 205
வேதபாஷ்ய விமர்சனம் 141, 142
வேதவேதாந்தவர்த்தினீ 226
வேதஸம்ஹிதையில பதினெட்டு 204, 206
வேதாந்தவாரியரின் விபவமும்
அர்ச்சையுப் வேதாந்தவாரியரின்
சரித்திரம் 135, 186
வைசாகோத்ஸவ-உசத்யாஸமாலை 186
வைசாகோத்ஸவ நிகழ்ச்சியில் ஒருவியப்பு 186
வையங்கண்ட வைகாசித் திருநாளில்
கண்டருளும் வாஹனங்களின் நுட்டம் 228
ஷோடசாயுத ஸ்தோத்ரவுரை 191
ஸ்தோத்ரரத்ன பாடபரிஷ்காரம் 133, 134
ஸ்வாபதேச பரமார்த்தம் 126
ஸத்காலக்ஷேபஸபை விருந்து 218, 218
ஸத்ஸம்ப்ரதாய ரக்ஷை 210, 212, 213
ஸதுபந்யாஸ ரத்னவளீ 180
ஸாஹஸோக்த மூலனம் 224, 226
ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்யம் 229
ஸந்தேஹ பரிஹாரம் 217
ஸப்ததி ரத்னம் 147, 148
ஸம்ரக்ஷண ஸமீஹணம் 172
ஸம்ஸ்க்ருத வேதாந்தத்தில் 18 204, 205
ஸர்வஜ்ஞ லோக குருஸூக்தி 171, 178
ஸாத்யபக்தி ஸாதநபக்தி சோதநம் 211
ஸாவித்ரீ சரித்ரம் 155, 156
ஸுபாஷிதங்கள் (உரையுடன்) 223, 224
ஸுந்தரபாஹு ஸுப்ரபாதம் 168
"ஸேவா" பத்ரிகையாராய்ச்சி 221
ஹாஸ்ய பக்திக் கதைகள் 177, 179

— ஆங்கில நூல்கள் —

Apoorva Ramayanam * 214
P. B. A. Swamigal's Life and Aetivities 214
High Court Judgment (Temple) 135, 136
On Bended Knses 184
On Festivals of the Lord and His Devotees 214
On the Glorious Impact of Periyavachan Pillai en Vedanta Desika 217
Sri Vaishnava Samaradhaham 149
Sri Manavalamamunigal Vaibhavam
Sri Vedanta Desika vis-a-vis the Vaishnauite world 227, 228

ஒரு சிறு குறிப்பு :—கீழே பதிப்பித்த அட்டவணையில் ஏறக்குறைய நானூறு வியாஸங்கள் அமைந்திருக்கின்றன. அவற்றில் நூறுவியாஸங்கள் வாத விவாத விஷயங்களாகவேயிருக்கும். அதைப்பற்றித் தெரிவிக்கவேண்டியது மிகவுண்டு. அதை மேலே தெரிவிப்பேன்.

* * * * * *

## — ஆழ்வார்திருநகரியில் ஆசார்ய ஹ்ருதய ப்ரவசனம் —

(இடையில் மதுரைச் செய்திகள்)

அடியேன் ஆழ்வார் திருநகரிக்கு முதல் தடவையாக விடைகொண்டபோது ஸ்வல்பகாலமே அங்கிருக்க நேர்ந்தது. அப்போது அவ்விடத்து வைலக்ஷண்யத்தையநுபவிக்க அனுபவிக்க அவ்விடத்திலேயே ஸ்திரவாஸம் செய்து வாழ்நாளைக் கழிக்கலாமா! என்று தோன்றிற்று. அந்த மனோரதம் நிறைவேறாவிட்டாலும் பலகால் அங்கு விடைகொண்டு வாரக்கணக்கிலும் பக்ஷக்கணக்கிலும் மாதக்கணக்கிலும் தங்கியிருந்து அநுபவிக்கும் பாக்கியம் அடியேனுக்குக் கிடைத்தது. அக்காலத்தில் மதுரையில் சில ஆஸ்திக பக்தர்கள் சரண்யாபிமத விஷ்ணுசித்த ஸபையென்று ஒரு ஸபையை ஸ்தாபித்து அதன்மூலமாக தர்சன ப்ரசாரத்தை விசேஷமாக நடத்திக்கொண்டு வந்தார்கள். ஆண்டுதோறும் வருஷோத்ஸவமென்றும் நடத்திவந்தார்கள். அதில் பலவருடங்கள் அந்வயிக்க நேர்ந்தது. அதில் முதல் தடவையாக அந்வயித்தபோது ஸ்ரீமதுபயவே. திருநாராயணபுரம். திருமலை அனந்தாண்பிள்ளை. கோவிந்தப்பங்கார் ஸ்வாமிகள் அங்கு அந்த ஸபைக்கு அக்ராஸநாதிபதியாக எழுந்தருளினார். அந்த ஸ்வாமி அப்போது தில்லைத் திருச்சித்திரகூடத்திலெழுந்தருளி யிருந்துகொண்டு அனேக ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு பகவத்விஷயாதி ப்ரவசனம் செய்துகொண்டிருந்தகாலம். ஸ்வாமி அவ்விடத்திலிருந்தே மதுரை ஸபைக்கு எழுந்தருளியிருந்தார். அப்போதுதான் அந்த ஸ்வாமியை யறியவும், அவருடைய பரமக்ருபைக்கு இலக்காகவும் ப்ராப்தமாயிற்று. அடியேனுக்கு ஜாமாதா திருநாராயணபுரத்திலிருந்து வாய்ப்பதற்கும் அவரே காரண பூதராயினர்.

அப்போது அந்த ஸ்வாமி "இங்கிருந்து ஆழ்வார் திருநகரி முதலான விடங்களுக்கும் பயணமுண்டோ? உத்தேசமுண்டோ? என்று இதே வாசகத்தில் கேட்டருளினர். "தேவரீரை முன்னிட்டுக்கொண்டு விடைகொள்ள ஆசையுள்ளது" என்றேன். "நான் சித்ரகூடம் விரைவில் சென்று சேரவேண்டியவனாயிருக்கிறேன் ; இதோ என் தம்பி சின்னஸாமி இவ்விடம் வந்திருக்கிறான் ; இவன் எங்கும் துணைபுரிவன், இவனோடுகூட எழுந்தருளலாம்" என்று ஸாதித்தார். இப்போது நம் ஸ்ரீஸூக்திரத்நாகரஸ்வாமியாய் ப்ரஸித்திபெற்று அடியேனுக்கு ஸம்பந்தியாகவும் ப்ராப்தராகி யிருக்கின்ற ஸ்ரீமதுபயவே. இளையவில்லி சடகோபாசார்யஸ்வாமிக்கும், கோயிலில் காலக்ஷேபம் நிர்வஹித்துவருகின்ற ஸ்ரீஉவே. சதாபிஷேக. கோவிந்தநரஸிம்ஹாசாரியர்க்கும் திருத்தகப்பனாராவர் அந்த சின்னஸாமி ஐயங்கார்ஸ்வாமி. நாற்பத்தெட்டு வருஷங்களுக்கு முந்தியசெய்தியை விஜ்ஞாபிக்கிறேனிப்போது. ஸ்ரீஸூக்தி ரத்நாகரஸ்வாமி அவ்விடத்தில் இளையவில்லி திருவம்சத்திற்கு ஸ்வீக்ருதராய் வாழ்ந்து வருகிறார். அப்போது அவர்க்கு பத்து பன்னிரண்டு பிராயமேயிருக்கும். அப்போதங்கு நடந்துகொண்டிருந்த

பாடசாலையில் வித்யார்த்தியாகி "மந்யே தபோதநாநாம் கிஸலயமிவ பாண்டுபத்ராணம்" என்கிற சாகுந்தலச்லோகத்தை நினைப்பூட்டிக்கொண்டு விளங்கிவருகிறுர். ப்ரஸ்துதரான சின்னஸாமி ஐயங்கார் பரமசதுரர், பரமநிபுணர்; ஸர்வபூத ஸுஹ்ருத்து. அவர் அடியேனைப் புத்ரநிர்விசேஷமாக அபிமானித்துவிட்டார். அந்தஸமயம் ஆழ்வார் திருநகரியில் ப்ராஜ்ஞர்கள் பலர் எழுந்தருளியிருந்தார்கள். பெரியார்களெல்லாருடையவும் பரிசயத்தையும் ஸௌஹார்தத்தையும் பரமக்ருபையையும் ஒரேநாளில் உண்டாக்கிவிட்டார் சின்னஸாமி ஐயங்கார். அன்னவர்களில் ஸ்ரீஉவே. மலைப்போற்றிஸ்வாமி, கோவிந்தையங்கார், வாத்யார் ஆழ்வாரையங்கார் என்று ப்ரஸித்தர்களாயிருந்த ஸஹோதரர்கள் மூவரும் அடியேனேடு அதிகமாக நெருங்கிப் பழகினவர்கள்; இந்தச் செய்திகளை அடியேன் தொடர்ந்து எழுதிக்கொண்டு போவதானல் மிக விஸ்தரமாகும். இவர்களுடைய ப்ரேம விசேஷம் காரணமாகவே ஆழ்வார் திருநகரிக்கு அடியேன் அனேக பர்யாயம் விடைகொள்ள நேர்ந்தது. இதுவொரு பரமபாக்யம். ஸ்ரீ ஸூக்தி ரத்னகர ஸ்வாமி ஸம்பந்தியாக வாய்க்கப்பெற்ற பின்புதான் அடியேனுக்கு ஆழ்வார்திருநகரியின் ஸேவை கதாசித் கதாசிதி என்ன வேண்டும்படியாயிற்று. அவரும் கோயில் வாஸமாக வந்து சேரும்படியாயிற்று. இது நிற்க.

கீழேப்ரஸ்தாவித்த வாத்யார். ஆழ்வாரையங்கார் ஸ்வாமி தமது மூத்த குமாரனை சிரஞ்சீவி (குன்றமேந்தி) திருவேங்கடத்தானையும் மற்றும் சில பிள்ளைகளையும் அடியேனுடைய பாடசாலைக்கு வித்யார்த்திகளாக அனுப்பியிருந்ததிலிருந்து அவருடைய ஸந்நிகர்ஷமும் ப்ரேமஸமாசாரங்களும் அதிகரிக்கத் தொடங்கவே, அடியேனைத் திருநகரியிலேயே சிலகாலம் வந்திருந்து ப்ரவசனங்கள் நடத்த வேணுமென்று நிர்ப்பந்தித்து வந்தார். ஒரு ஸமய விசேஷத்தில் இசைய நேர்ந்தது. ஆசார்யஹ்ருதயப்ரவசனமொன்று மட்டும் நடத்துவதாக இசைந்தேன். ஸ்ரீகோச மூலமாக வியாக்கியான பங்க்திகளையும் ஸேவித்துக் கொண்டு நடத்துவதானல் ஆறேழு மாதகாலமாவது செல்லும். அவ்வளவு அவகாசம் எளிதாகாதென்று உபந்யாஸ ரூபமான பத்ததியை இசைந்தேன். இது 1938ஆம் ஆண்டில். அப்போது அடியேன் சென்னையுபந்யாஸ ஸபையில் அந்வயித்திருக்கிற காலம். அவ்விடத்து ப்ரவசன விச்சேதத்தை ஸஹித்துக் கொண்டு கார்த்திகை மாதம் பூர்த்தியாகத் திருநகரியில் விடைகொண்டிருந்து ஆசார்ய ஹ்ருதய ப்ரவசனம் நடத்தினேன். அப்போது இரண்டு ப்ரகரணங்கள் மட்டுமே முடிந்தன. அடுத்தது மார்கழித் திங்களல்லவா! மீண்டும் ஒருமுறை விடைகொள்வதாகச் சொல்லிவிட்டுச்சென்று மறுமுறை மாசி மாதம் பூர்த்தியாக விடைகொண்டிருந்து மூன்று நான்கு ப்ரகரணங்களின் ப்ரவசனத்தைத் தலைக்கட்டியாயிற்று. இந்த ப்ரவசனம் நடந்த நாட்கள் அறுபது. தினப்படி காலையிலும் மாலையிலும் அவிச்சேதேந நடந்து வந்தபடியால் நூற்றிருபது வேளைகள். ப்ரவசனத்திற்கு ஸன்னிதிக்குள்ளே பாங்கான இடமேற்படுத்திக் கொடுத்தும், ஸன்னிதியில் நடைபெறவேண்டிய கார்யக்ரமங்களை இதற்கு அவிரோதேந நடத்தும்படி செய்துவைத்தும் திருநகரி வாஸிகளடங்கலும் அபிமானித்திருந்தது "நால்பஸ்ய தபஸ: ப்பலம்" என்னத் தக்கது. இப்போது வானமாமலை மடம் ஆஸ்தானத்தை அலங்கரித்தருளாநின்ற

[வித்வான். வானமாமலை ஐயங்கார்ஸ்வாமியென்று ப்ரஸித்தரான] ஸ்ரீமத் பரம ஹம்ஸேத்யாதி. ஸ்ரீஸ்வாமி [அப்போது க்ருஹஸ்தாச்ரமத்தை யலங்கரித்திருந்து] அந்த ப்ரவசன கோஷ்டியை அனுக்ரஹித்தருளியிருந்தது விசேஷித்துக் குறிப் பிடத்தக்க தனிப்பட்ட பாக்யம். ... ... ... ... *

## — ஸ்ரீகாஞ்சியில் நம்பிள்ளை ஸன்னிதி ப்ரதிஷ்டாபனம் —

கீழே விஜ்ஞாபித்த ஆழ்வார்திருநகரிச் செய்தி 1938ஆம் ஆண்டின் முடிவிலும் 39ஆம் ஆண்டின் முதலிலுமாகும். அப்போது அடியேன்பெற்ற ஆழ்வார் திருவருளின் பலனேபோலும் அதே ஆண்டில் காஞ்சியில் நம்பிள்ளை ஸன்னிதி ப்ரதிஷ்டாபனம் பெற்றது. அவரவர்களது வாழ்க்கைகளில் நெஞ்சிலும் நினையாதவையும் நினைக்கவுமொண்ணாதவையுமான பலஸம்பவங்கள் நேர்படுவது தத்ததநுபவைகவேத்யம். அடியேன் வேதவேதாந்த வைஜயந்தீ பாடசாலாபவன நிர்மாணம் பண்ணினபோது அதிலேயே நம்பிள்ளையை ஏறியருளப் பண்ணலாமா? என்று நெஞ்சில் ஒருமூலையில் எண்ணமிருந்ததுண்டு. ஸ்திரமாக நிர்வஹிக்க இயலாதென்றறுதியிட்டு அவ்வாசையை அறவே அகற்றிக்கொண்டபின்பு "தேவ்யேவம் ஸமஜாயத" என்கிற முறையிலே வாய்த்தவிது அவாங்மனஸ கோசர மத்தனை. (காலஞ்சென்ற) புதுச்சேரி கிருஷ்ணமாசாரியரென்பவர் தேவப் பெருமாள் ஸன்னிதியின் திருமுன்பே தம்மதாயிருந்த திருமாளிகையை விற்பனை செய்ய விரும்பி, தனக்கு அத்யந்தம் அபரிசிதனுயிருந்த என்னிடத்திலே அவர் தாமாக வந்து "பெருங்கடனாளியாய்ப்போன என்னுடைய க்ருஹத்தை தேவரீர்தான் விற்பனை செய்து தரவேணும்" என்று வலிந்து கூறினதும், அதை யறிந்த பலர் ஆந்தனையும் இதற்கு இடையூறு விளைக்கப் பிரபல ப்ரயத்னங்கள் செய்ததும், அந்த முயற்சிகளெல்லாம் அநாயாஸமாகப் பழுது பட்டதும், வருஷக் கணக்கில் நடைபெறவேண்டிய நிர்மாண காரியங்கள் அதிஸ்வல்ப காலத்தில் நிறைவேறிய தும், நம்பிள்ளை தமது இருசிஷ்யர்களோடும் தாமாகவந்து குடிபுகுந்ததும், அப்ரதிம ப்ரபாவம்பொலியத் திருப்ரதிஷ்டைநடந்தேறியதும், ஆசந்த்ரார்க்கம் நித்யோத்ஸவ மாஸோத்ஸவ ஸம்வத்ஸரோத்ஸவாதிகள் குறையற நடந்தேறுவதற்குப் பாங் காகச் சேமநிதி ஏற்பட்டதும் நின்று நினைக்கில் "இருகரையுமழிக்கும் க்ருபா ப்ரவாஹ முடையவன்" என்னப் பெற்ற பேரருளாளனுடைய திருவருட் பெருக்கைப் போற்றவேண்டியதொன்று தவிர வேறென்றும் நானறியேன்.

முன்புறத்தில் நம்பிள்ளை ஸ்ன்னிதியும், பின்புறத்தில் "ஸர்வாத்ம ஸாதாரணநாத கோஷ்டீபூரேபி துஷ்பூரமஹாவகாசம்" என்கிற பட்டர் ஸ்ரீஸூக் தியை நினைப்பூட்ட வல்லதான நம்பிள்ளை நிலயமும், இவற்றைப் பரிபாலிப்பதற்குப் பல மஹநீயர்கள் கூடி "சென்னபுரீ ஆஸ்திக ஸ்ரீவைஷ்ணவ ஸமிதீ" என்னும் பெயரால் ஏற்படுத்தியுள்ள சாச்வதநிதிஸ்தாபனமும் பேரருளாளனுடைய பேரருளுக்கு விஜய த்வஜங்களா மத்தனை. ... ... ... ... •

## — மதுரை. ஸத்ஸம்ப்ரதாய ஸபை —

கீழே நிகழ்ந்த ஆழ்வார்திருநகரி ப்ரவசன ப்ரஸ்தாவத்தில் மதுரையில் நடந்துவந்த சரண்யாபிமத விஷ்ணுசித்த ஸபையைப்பற்றி ப்ராஸங்கிகமாக எழுதி

யிருந்தேன். அந்த ஸபை சிலபல வருஷங்கள் நடந்து நின்றுபோனதாக நினைவு. அதன் பிறகு ஸத்ஸம்ப்ரதாயஸபையென்று ஏற்பட்டுப் பலவாண்டுகள் மிக்க சிறப்புடன் நடந்து வந்தது. நடந்துவந்ததென்று இறந்தகாலமாக எழுதமனமில்லை. ஸபை உயிரோடிருப்பதுதான். இந்த ஸபையின் அங்கத்தினராகப் பல மஹான்கள் அந்வயித்திருந்தாலும் அடியேனுக்கு இருமஹான்களே நெஞ்சில் ஊறிக்கிடப்பவர்கள். மநீஷிமாந்ய. ராவ்பகதூர். நரஸிம்ஹய்யங்கார் ஸ்வாமியும், அட்வொகேட் S. ஸுந்தரராஜய்யங்கார் ஸ்வாமியும். இவ்விருவருள் முதல்வர் பத்தெட்டு ஸம்வத்ஸரங்களுக்கு முன்னம் பரமபதித்து விட்டார். இரண்டாமவர் ஆஸ்திக ஸ்ரீ வைஷ்ணவ குலதிலகராய் மதுரையில் பாங்காக எழுந்தருளியிருக்கிறார். சக்ரவர்த்தி திருமகன் தன்பால் அன்பு பூண்டவர்களைப்பற்றிச் சொல்லி வருமொரு ஸந்தர்ப்பத்தில் "உபகாராய ஸுக்ரீவோ ராஜ்யகாங்க்ஷி விபீஷண:" என்று இருவரைச் சொல்லிவிட்டு திருவடியைப்பற்றிச் சொல்லுகையில் "**நிஷ்காரணாய ஹநுமாந்**" என்றார்; அதுபோலே அடியேன்பால் அன்புகொண்டவர்களில் தனிப்பட்ட ஸ்தானம் பெற்றவராகப் பரிகணநீயர் இந்த ஸுந்தர ராஜையங்கார். முதல்வராக ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஸ்ரீ நரஸிம்ஹய்யங்காரும் இவரை யொத்தவரே. அவர் கீர்த்தி சேஷராய்விட்டார். அவரொருவரேயல்லர்; மதுரையிலும் மதுரை ஜில்லாவிலும், தத்பரிஸரமான இராமநாதபுரம் ஜில்லாவிலும் ப்ரக்ருத ஸத்ஸம்ப்ரதாய ஸபை நிமித்தமாக அடியேன்பால் அன்பு பூண்டிருந்தவர்களில் ஒருநூறு திருநாமங்களுக்கு மேற்பட்டவர்களை நாளடைவில் இழக்க நேர்ந்திருக்கிறது. "தஸ்மாதபரிஹார்யேர்த்தே ந த்வம் சோசிது மர்ஹஸி" என்கிற கீதாவசனம் போன்ற பலவசனங்கள் பரோபதேசத்திற்குப் பயன்படுமேயொழிய ஸ்வானுஷ்டானத்திற்குப் பயன்படாவன்றோ. இழந்த பெரியார்களை ஒவ்வொருவரையும் நினைக்கும்போது—காலம் பல சென்றாலும் ஆற்றவொண்ணாத் துயரமே யாகின்றது. பட்டப்பா ஸ்வாமி, சிங்கப்பெருமாள் ஸ்வாமி, ஆஸூரி மஹாஸ்வாமி, வேதவாத்யார்ஸ்வாமி, ரா. ராகவையங்கார் ஸ்வாமி, செந்தமிழ்ப் பத்திராதிபர். திருநாராயணையங்கார் ஸ்வாமி, தேசி.வரதாசார்யஸ்வாமி, நடாதூர். கிருஷ்ணமாசார்ய ஸ்வாமி, நவநீதம் கிருஷ்ணமாசார்ய ஸ்வாமி, எம்பார் கிருஷ்ணமாசார்ய ஸ்வாமி, திருநாங்கூர் பிரதிவாதி பயங்கரம் இரு க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமிகள், ஸ்ரீவில்லிபுத்தூர் மேலை வாத்யார் திருமலை ஐயங்கார் ஸ்வாமி, விஞ்சிமூர் ஆழ்வார் ஸ்வாமி.. ...இப்படிப்பட்ட மஹான்களைப் பதேபதே நினைப்பவனடியேன். தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலையில் "உண்டிராக் கிடக்கும்போதும் உடலுக்கே கரைந்துநைந்து" என்கிறார்; அடியேன் இராக்கிடக்கும்போது, இந்நிலவுலகுக்குத் திலகபூதர்களாக வாழ்ந்த மஹாஸ்வாமிகளையே நினைந்து நைந்து உள்கரைந்துருகுமவன். ஏற்கெனவே பலபல பெரியார்களின் திருவருளைப் பெற்றிருந்தேனாயினும், ப்ரக்ருத (மதுரை) ஸத்ஸம்ப்ரதாய ஸபைக்குப் பலகால் விடைகொள்ள நேர்ந்த பாக்கியத்தினால் நமது ஸம்ப்ரதாயஸ்தர்களோடு மட்டுமன்றிக்கே அத்வைதிகள் முதலானாரோடும் விசேஷேண கலந்து பழக வாய்ப்பு ஏற்பட்டது. "பழையன கழிதலும் புதியன புகுதலும், வழுவல காலவகையினானே" என்று நன்னூலாசிரியர் கூறின கணக்கிலே பழையவர்கள் கழிந்தாலும் புதியவர்கள் விரளமாகவாவது தோன்றிக்கொண்டிருப்பதனால் ஒருவாறு தேறுவதற்கிடமுள்ளது. ... .... ●

## — அடியேன் மதித்த ப்ரவசன கர்த்தாக்களைப்பற்றி —

"சதேஷு ஜாயதே சூர: ஸஹஸ்ரேஷு ச பண்டித:, வக்தா சதஸஹஸ்ரேஷு" என்பது ப்ரஸித்தமான வசனம். பண்டிதர்களுக்கு அருமையிராது. வக்தாக்களுக்கு மிகமிக அருமையுண்டு. கீதையில் "தத் வித்தி ப்ரணிபாதேந பரிப்ரச்நேந ஸேவயா, உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞானம் ஜ்ஞாநிநஸ் தத்வதர்சிந:" என்று பணித்தபடியே ஜ்ஞானிகளும் தத்வதர்சிகளுமான உபதேஷ்டாக்கள் எம்பெருமானருளால் தோன்றி உபதேசாதிகளாலே உலகத்தை வாழ்வித்து வருகின்றார்கள். கீர்த்திசேஷர்களான உபதேஷ்டாக்களைப்பற்றி ஸ்ரீராமாநுஜனில் பலகால் விஜ்ஞாபித்திருக்கிறேன். இப்போது யசஸ்விகளாய் வாழ்ந்துகொண்டிருக்கின்ற மஹான்களைப்பற்றி ஸ்வல்பம் விஜ்ஞாபிக்கிறேன். ஆத்மத்ருப்திக்காக.

### — ஸ்ரீமத் பரமஹம்ஸ. ஸ்ரீமந்நாராயண ராமாநுஜ ஜீயர்ஸ்வாமிகள் —

ஸ்ரீ ஜீயர்ஸ்வாமியை யறியாதவுலகமுண்டோ? நம்மாழ்வார் பெரியதிருவந்தாதியில் எம்பெருமானை நோக்கி "ஒன்றுண்டு செங்கண்மால்! யானுரைப்பது, உன்னடியார்க்கு என்செய்வனென்றே யிருத்திநீ" என்கிறார். எம்பெருமான் அடியார்களுக்கு எத்தனையோ நன்மைகள் எல்லையின்றிச் செய்திருந்தும் ஒன்றுஞ் செய்யாதவன்போல் குறைவாளனாய் 'என்ன செய்வோம்! என்ன செய்வோம்!' என்றே அலமந்திருப்பதாக இப்பாசுரத்தில் ஆழ்வார் கண்டறிந்து கூறுகின்றார். இத்தகைய அலமாப்பு எம்பெருமானுக்குள்ளதென்பதை ஆழ்வார் எங்ஙனம் தெரிந்துகொண்டாரென்னில், •செங்கண்மால்!• என்று விளித்திருக்கையாலே எம்பெருமானை ஸாக்ஷாத்கரிக்கப்பெற்ற ஆழ்வார் அவனது திருக்கண்ணோக்கத்திலிருந்து தெரிந்துகொண்டாரென்பது அறியக்கிடக்கின்றது. அதேபோல, நம் ஸ்ரீமந்நாராயண ஜீயர்ஸ்வாமியும் ஏறக்குறைய இருபத்தைந்து வருஷகாலமாக ஆங்காங்கு விசிஷ்டாத்வைத ப்ரசாரக ஸங்கங்களை ஏற்படுத்துவது முதலிய திகந்த விச்ராந்தங்களான பலபல அதிமாநுஷ க்ருத்யங்களைச் செய்தருளியிருந்தும் த்ருப்தி பெறாதவராய் தற்காலம் ஒரு அபூர்வ ஸங்கல்பம் செய்தருளியிருக்கின்றார். அதாவது,

"ஆதியிலே அரவரசையழைத்தரங்கர் அவனியிலே யிருநூருண்டிருநீயென்னப்
பாதியிலே உடையவராய்வந்துதோன்றிப் பரமபதம்நாடியவர் போவேனென்ன,
நீதியாய்முன்போல நிற்கநாடி நிலுவைதனை நிறைவேற்றிவாருமென்னச்
சாதாரணமெனுமா வருடந்தன்னில் தனித்துலாமூலநாள் வந்தார்தாமே."

என்று மாமுனிகளின் திருவடிகள் பணித்தபடியே அஸாதாரணமென்னும்படியான ஸாதாரண ஸம்வத்ஸரத்திலே ஜகதப்யுதயைக மூலமான ஐப்பசித் திருமூலத்து அவதரித்தருளின மணவாளமாமுனிகளுக்கு ஆறுவது சதாப்த பூர்த்திக் கொண்டாட்ட மஹோத்ஸவத்தை ஆடம்பரமில்லாமல் லோகாபிராமமாக நடத்தியருளத் திருவுள்ளம்பற்றி, பிறரிடத்தில் ஒரு காகணிகாமாத்ரமும் பெற விரும்பாதே, சிஷ்யர்களால் திருவடிக் காணிக்கையாக ஸமர்ப்பிக்கப்படும் த்ரவ்யத்தையேகொண்டு,

மணவாளமாமுனிகளின் பூர்வாவதாரமான பகவத் பாஷ்யகாரரருளிச்செய்த ஸகல க்ரந்தங்களையும் தெலுங்கு லிபியிலும் தேவநாகர லிபியிலும் ஸுபரிஷ்க்ருதமாக அச்சிடுவிக்கவும், ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர க்ரந்தமாலையை முப்பது வருடங்களுக்கு முன்பு அடியேன் தெலுங்கு லிபியில் அச்சிடுவித்தது பத்து வருடங்களுக்கு மேலாக துர்லபமாய் விட்டபடியாலே அதைத் தெலுங்கு லிபியிலேயே அச்சிடுவிக்கவும், அதற்கு ஸம்ஸ்க்ருத ஆந்த்ர பாஷைகளில் தாத்பர்யாநுவாதங்கள் அச்சிடுவிக்கவும் திடமாக ஸங்கல்பித்தருளி அடியேன் மூலமாக முத்ரணத்தை நடப்பித்தருளாநின்றார். பெரும்பாலும் முடிவுபெற்றன. நாமறிந்த காரியங்களிவை; இன்னமும் ஸ்வாமி திருவுள்ளத்தில் அநுக்ஷணம் தோன்றும் மனோரதங்களையும் அவற்றின் கங்குகரையற்ற ப்ரவாஹ பரீவாஹங்களையும் ஆரேயறியவல்லார். ஸ்ரீவைஷ்ணவ மடாதிபதிகள் பலதிசைகளிலும் பலருளர். ஒவ்வொருவரும் இங்ஙனே சிரத்தைகொண்டு பணிபுரிந்தால், "நான் ஆளவந்தாரோடு சேர்ந்திருந்தேனாகில் பரமபதத்திற்குப் படிகட்டியிருப்பேன்" என்று எம்பெருமானார் பணித்தருளினதாக ப்ரஸித்தமாயுள்ள வார்த்தை நமது காலத்தில் ஈடேறுமென்னக் குறையில்லை. ஸ்ரீ ஜீயர்ஸ்வாமி எம்பெருமானாரைப்போல் இந்நிலவுலகில் நீடூழி வாழ்ந்தருளி ஸ்ரீவைஷ்ணவவுலகுக்கு அபூர்வ விலக்ஷண மஹோபகாரங்களைச் செய்துகொண்டும் செய்வித்துக்கொண்டும் விளங்கவேணுமென்று பேரருளாளன் திருவடிகளில் பிரார்த்திக்கின்றேன். ஜீயர்ஸ்வாமி தமிழ் தெலுங்கு ஹிந்தி ஸம்ஸ்க்ருதம் முதலிய பல பாஷைகளிலும் இமவந்தந்தொடங்கி இருங்கடலளவும் சொல்லமுதமொழி பொழிந்துவருவது பேரின்பவெள்ளம். ப்ரவக்தாக்களில் ப்ரதமபதவி ஸ்வாமியினுடையதேயாம்.

## — ஸ்ரீமத் பரமஹம்ஸ திருமலை பெரிய ஜீயர் ஸ்வாமி —

ஸ்ரீ வில்லிபுத்தூரில் திருவவதரித்து ஸ்ரீ பெரும்பூதூரில் ஸ்ரீமத் ஆஸூரி ஸ்வாமியிடபக்கலில் நியாய வேதாந்தங்களை யதிகரித்து மதுரையிலும் திருவல்லிக்கேணியிலும் விசேஷமாக ப்ரவசனங்கள் செய்து போந்து திருவேங்கடமுடையானுடைய அத்தாணிச் சேவகத்தில் ஆஸ்தைகொண்டு ஆச்ரம ஸ்வீகாரம் செய்தருளிச் சில வருஷங்கள் சிறிய ஜீயர் ஆஸ்தானத்தை அலங்கரித்தருளிப் பத்து வருஷங்களுக்கு மேலாகப் பெரிய ஜீயராஸ்தானத்தில் அபிஷிக்தராய் விளங்குகின்ற இந்த மஹா ஸ்வாமியின் பாண்டித்யப்ரபாவமும் ப்ரவசன ப்ராவீண்யமும் ஜகத்ப்ரஸித்தம். உபய வேதாந்தங்களையும் வரியடைவே பலகால் ப்ரவசனம் செய்தருளி "அதீதமத்யாபிதமார்ஜிதம் யச:" என்கிறபடிக்கு முக்கியலக்ஷ்யமாக ஸேவை ஸாதித்தருளா நின்றார். * பொலிக பொலிக பொலிக *

## — ஸ்ரீமத்பரமஹம்ஸ. திருக்குடந்தையாண்டவன் —

பூர்வாச்ரமத்தில் திருக்குடந்தை கண்ணன் ஸ்வாமி யென்றே வழங்கப்பட்டு வந்து, இப்போது ஆண்டவன் ஆஸ்தானத்தில் அபிஷிக்தராய் விளங்காநின்ற ஸ்வாமி உலகம் நிறைந்த புகழாளராய் எழுந்தருளியிருப்பது ஜகத் ப்ரஸித்தம். பூர்வாச்ரமத்தில் தமது திருவவதார ஸ்தலமான திருக்குடந்தையிலே ப்ரவசனமே போதுபோக்காக எழுந்தருளியிருந்து, சென்னை வாஸிகளான பக்தர்களால்

"சென்னையிலேயே ஸ்திரவாஸமாக எழுந்தருளியிருந்து காலக்ஷேபம் ஸாதித்து வரவேணும்" என்று ப்ரார்த்திக்கப்பட்டு சென்னைக்கெழுந்தருளி இருபது வருஷங்களுக்கு மேலாகப் பலபேட்டைகளிலும் இதிஹாஸ புராணங்களையும் ஸம்ப்ரதாய க்ரந்தங்களையும் மிகமிக ரமணீயமான ரீதியில் ப்ரவசனம் செய்துபோந்தார். ஸ்ரீமத் ஆண்டவன் பரம்பரையில் ஸ்ரீமத் பரமஹம்ஸ. தென்பரையாண்டவன் திருநாட்டுக் கெழுந்தருளியபின் அந்த ஆஸ்தானத்தை அலங்கரித்தருள ஸர்வப்ரகாரத்தாலும் அர்ஹதையுடையவர் இந்த ஸ்வாமியேயென்று அறுதியிட்டவர்கள் நெடுநாளாகக் கொண்டிருந்த தங்கள் மனோரதத்தை நிறைவேற்றிக்கொண்டார்கள். ஸ்வாமீ இவ்வாஸ்தானத்தை அலங்கரித்தநாள் முதலாக இற்றைநாள் வரையில் இடையறாமல் ப்ரவசனமே போதுபோக்காக எழுந்தருளியிருக்கிறபடி. உபயவேதாந்தங்களும் ஸ்வாமியிட்ட வழக்காகையாலே ஸ்வாமியின் ப்ரவசனங்களின் சிறப்பைப்பற்றித் தெரிவிக்கவேண்டியதுமுண்டோ? நியாய வ்யாகரண சிரோமணியன்றோ ஸ்வாமி.

## — ஸ்ரீமதுபயவே. காரப்பங்காடு வேங்கடாசார்ய ஸ்வாமி —

அடியேனுடைய எழுபத்தைந்து பிராயப் பூர்த்திக்கு நினைவுமலராக அடியேனே யெழுதி வெளியிட்டுக்கொண்ட மலர்கள் ஐந்து; அவை உலகம் பரவியவை. அவற்றுள் முதலதான ஸ்ரீ வைஷ்ணவ ஹஸ்தபூஷணம் ஸ்ரீராமாநுஜன் வெளியீடாகவே "விச்வாவஸு பங்குனி விசாக விசேஷமலர்" என்னும் பெயர் புனைந்து 5-3-66ல் வெளிவந்துள்ளது. தொண்ணூறு பக்கங்களும் எழுபத்தைந்து உபந்யாஸங்களுங் கொண்ட அம்மலரில் எழுபத்துமூன்றாவது உபந்யாஸத்தை காரப்பங்காடு ஸ்வாமியின் வைபவமாகவே அமைத்திருக்கின்றேன். அந்த உபந்யாஸத்தையே இங்கு வெளியிடுகிறேன்.

"சென்னை மாநகரில் ப்ரஸித்த ப்ரவக்தாவாக விளங்கிவரும் ஸ்ரீமதுபயவே. காரப்பங்காடு வேங்கடாசார்ய ஸ்வாமியை யறியாத ஸ்ரீவைஷ்ணவர்களில்லை. ஏறக்குறைய இருபத்தைந்து ஸம்வத்ஸரமாக ஸ்வாமியின் ப்ரவசனங்கள் சென்னை மாநகரில் பல பேட்டைகளில் நடைபெற்றுவருகின்றன. சென்னையில் மட்டுமன்று; பாம்பே, கோவை, சேலம், சித்தூர் முதலான பல வெளிநகரங்களிலும் கோயில் ஸ்ரீவில்லிபுத்தூர் மதுரை வானமாமலை திருநாராயணபுரம் முதலான அனேக திவ்ய தேசங்களிலும் ஸ்வாமியை யெழுந்தருள்வித்து ப்ரவசனங்கள் கேட்டு க்ருதார்த்தரானவர்கள் எண்ணிறந்தவர்கள். பரமஸாத்விகமான முறையில் பிரவசனம் செய்யவல்லவர் இந்த ஸ்வாமியொருவரேயாவர். வீண் வம்புப் பேச்சுக்களையும் ஹாஸ்யக்கதைகளையும் புகவிடாமல் பூருவாசாரியர்களின் ஸ்ரீஸூக்தி ரேகையை அணுமாத்ரமும் கடவாமல் "நாமூலமுச்யதே கிஞ்சித் நாநபேக்ஷிதமுச்யதே" என்னும்படியாக உபந்யஸிக்கவல்ல ஸ்வாமியின் ப்ரவசனங்களுக்குத் தனிச்சிறப்புண்டு. ஸ்வாமியின் மாதாமஹரும் பித்ருஸ்தாநீயருமான கீர்த்திமூர்த்தி சிங்கப்பெருமாள் ஸ்வாமியோடு அடியேனுக்கு நெருங்கிய பழக்கமிருந்தது. அந்த ஸ்வாமியினுடைய ப்ரபாவம் அத்விதீயமானது. திலீப சக்கரவர்த்திக்குப் பிறகு ரகுமஹாராஜன் அரசுபுரியும்படியைச் சொல்லுகின்ற காளிதாஸ மஹாகவி "திநாந்தே நிஹிதம் தேஜஸ் ஸவித்ரேவ ஹுதாசந:" என்று வைதிகமான த்ருஷ்டாந்தத்தை எடுத்துக் காட்டினார். ஸூரியன் அஸ்தமித்த பிறகு அவனுடைய ஒளியைப்பெற்று அக்நி

பகவான் ஜ்வலிக்குமாபோலே யென்றுர். அதே ரீதியில் சிங்கப்பெருமாள் ஸ்வாமி யின் தேஜஸ்ஸைத் தம்மில் கொண்டுள்ள ஸ்வாமி மிகமிக விளங்கிவருவது வியப் பன்று. இக்காலத்திற்குரிய உபந்யாஸாநுக்ரஹத்தோடு நில்லாமல் ப்ராசீந பத்ததி யையும் விடாமல் உபயவேதாந்த க்ரந்தங்களைக் காலக்ஷேபமாகவும் நடத்திவரும் ஸ்வாமிக்கு உலகமெல்லாம் பல்லாண்டு பாடக் கடமைப்பட்டுள்ளது. நிகழும் பங்குனித்திங்களில் புநர்பூச நக்ஷத்ரத்தில் ஸ்வாமிக்கு ஷஷ்டியப்த பூர்த்திமஹோத் ஸவம் ப்ராப்தமாகின்றது. இதுபற்றி உலகமெல்லாம் உகக்கவேண்டுமாயினும் "வையம்மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே" என்கிற நம்மாழ்வா ருடைய ஆசாஸனத்திற்கு முக்கிய லக்ஷ்யமான எம்பெருமானுரைப்போலே யெழுந்தருளியிருக்க வேண்டிய ஸ்வாமிக்குப் பிராயத்தில் பாதிபாகம் கழிந்ததா கிறதே யென்கிற மனக்கேதம் அடியேன்போல்வார்க்குள்ளது. எம்பெருமானுரைப் போலவே ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயோடு நெடுங்கால மெழுந்தருளியிருந்து ஆழ்வாரெம் பெருமானுர் மணவாளமாமுனிகளின் திவ்ய ஸூக்தி திவ்யார்த்த ப்ரவசன துரந்தர ராய் நீடூழி விளங்கவேணுமென்று பெருந்தேவி மணவாளனுன பேரருளாளன் திருவடிகளிலே பிரார்த்திக்கின்றேன். இந்த ஸமய விசேஷத்தில் **உபயவேதாந்த வித்யாநிதி** யென்னும் விருதை ஸ்வாமிக்குச் சூட்டுகின்றேன்."

## — காரப்பங்காடு ஸ்வாமியின் அந்தேவாஸிகள் —

மேலே குறித்த காரப்பங்காடு ஸ்வாமியின் திருவருளால் உபயவேதாந்தங் களிலும் ப்ரவீணர்களாகிச் சிறந்த ப்ரவக்தாக்களாகவும் விளங்கி வருபவர்கள் நால்வர்;—1. திருமலை அனந்தாண்பிள்ளை. சதாபிஷேக. கோவிந்த நரஸிம்ஹா சாரியர். 2. வாகம்ருதவர்ஷி. வேளுக்குடி K. வரதாசாரியர். 3. பிள்ளைலோகம். பாஷ்யகாராசாரியர். 4. காரப்பங்காடு. தேசி. ரங்கராஜாசாரியர். இவர்கள் நால் வரும் "தீர்த்தகரராய் எங்குந்திரிந்து ஜ்ஞானஹ்ரதத்தைப் பூரித்துத் தீங்கின்றி வாழ நிதிசொரிந்து" என்று ஆசார்யஹ்ருதயத்தில் அருளிச்செய்தபடியே வாழ் பவர்கள். இவர்களுள் முந்தியவரான சதாபிஷேகாசாரியர் திருவரங்கம் பெரிய கோயிலில் நித்யவாஸம் செய்துகொண்டு ப்ரவசனநிரதரா யிருந்துவருவதைப்பற்றிப் பலகால் ஸ்ரீராமாநுஜனில் வெளியிட்டிருக்கிறேன். கோயிலில் எம்பெருமானுர் ஸன்னிதி, மணவாளமாமுனிகள் ஸன்னிதி முதலான விடங்களில் இவருடைய ப்ரவசனம் இடையருமல் நடைபெற்று வருவதாம். சென்னை முதலான விடங் களிலும் ஸமயங்களில் பிரார்த்திக்கப்பட்டுவந்து உபந்யஸிக்கிருர். ஜயது ஜயது.

## — ஸ்ரீஉவே. இளையவில்லி சடகோபாசார்யஸ்வாமி —

ஆழ்வார்திருநகரியிலிருந்து நம்பெருமாள் ஸந்நிதிக்கு வந்துசேர்ந்த இந்த ஸ்வாமி அடியேனுக்கு ஸம்பந்தியாக வாய்ப்பதற்கு முன்னமே—நாற்பது வருடங் களுக்கு முன்னமே ஸஹோதரப்ராயர். கோயிலிலும் திருச்சியிலும் இவருடைய ஸ்ரீஸூக்திவர்ஷங்கள் நடைபெற்று வருகின்றன. இவர் ஸாதாரணமாக யோக க்ஷேம ஸமாசாரக் கடிதங்களெழுதினுலும் ஆசார்யஹ்ருதயமாகவே யிருக்கும். அதையிட்டே இவர்க்கு **ஸ்ரீஸூக்திரத்நாகர** பிருது மிகப்பொருத்தமாக அமைந்தது.

ஸமீபகாலத்தில் திருப்பாவைக்கடல்மணியென்னும் விருதும் பெற்றிருக்கிறர். இவரு டைய ஸ்ரீஸூக்தி ரசநாசைலியை உலகமறியவேணு மென்பதற்காகவே இவருடைய உபந்யாஸ வியாஸமொன்று இதில் சேர்க்கப்பட்டுள்ளது. அது மேலேகாணலாகும்.

**— ஸ்ரீமான். ஆயுஷ்மாந் இளையவில்லி. பூவராஹன் M.A. —**

மேலே ப்ரஸ்தாவித்த ஸ்ரீஸூக்திரத்நாகரஸ்வாமியின் மூத்த திருக்குமாரர் E. S. பூவராஹன் என்பவர். இவர் M.A. பட்டம் பெற்றவராதலால் ஆங்கிலத்தில் உத்தீர்ணரென்பது தெரிந்ததே இளமையிலேயே ஸம்ஸ்க்ருதப் பயிற்சியும் நன்கு பெற்றிருந்தபடியால் அந்த ஞானத்தை க்ரமேண அபிவிருத்தி செய்துகொண்டு உபந்யாஸங்களும் உயர்ந்தரீதியில் நடத்திவருகிறர். பெங்களூர் காலேஜில் உபாத்யாய பதவியில் அமர்ந்திருக்கின்றவிவர் அவ்விடத்திலேயே ஸமயோசித ப்ரவசனங்களும் செய்துபோருகின்றர். இவர்க்கு விருது ' ஸம்ப்ரதாய ஸுதாநிதி ".

**— உத்தரமேரூர் வாஸுதேவாசாரியர் —**

மதுராந்தகம் ஸம்ஸ்க்ருதகாலேஜில் வியாகரணேபாத்யாயராக விளங்கி வரும் இந்த ஸ்வாமி வியாகரண வேதாந்தங்களில் தெளிந்த ஞானம்பெற்று ஸங்கீதத்திலும் நிபுணராய் ஆங்காங்கு ப்ரவசனங்களும் செய்துபோருகிறர். டில்லி பாம்பே முதலான விடங்களிலுஞ் சென்று உபந்யாஸங்கள் செய்து ப்ரக்க்யாதி பெற்றிருக்கிறர். திருக்கோட்டியூர் ஸ்வாமியென்று வ்யபதிஷ்டரா யெழுந்தருளியிருந்த கோஷ்டிபுரம் ஸௌம்யநாராயணசார்ய ஸ்வாமியின் திருவருளுக்கு இலக்கானவராதலால் ஸம்ப்ரதாய பேதத்தையோ மதபேதத்தையோ கொண்டு வைஷம்யபுத்தி வஹியாமல் ஸர்வபூதஸுஹ்ருத்தாய் விளங்குபவர். இவரோடு இருபது ஸம்வத்ஸரங்களாகவுள்ள பரிசயத்தினுலும் அஸக்ருத் நேரும் ஸம்பாஷணங்களினுலும் நான் கண்டறிந்த குணவிசேஷமீது. ... ... •

**— ஸ்ரீஉவே. நவநீதம். ஸ்ரீராமதேசிகாசாரியர் —**

உப்பிலியப்பன் ஸன்னிதியில் எழுந்தருளியிருந்த வித்வச்ச்ரேஷ்டரும் சிஷ்டாக்ரேஸரருமான நவநீதம் கிருஷ்ணமாசார்யஸ்வாமியின் மூத்த திருக்குமாரரான ஸ்ரீராமதேசிகாசாரியர் ஒரு விலக்ஷணவ்யக்தி. வடமொழி தென்மொழிகளிரண்டிலும் ஸமமான ஞானம்பெற்று வித்வான் பட்டமும் சிரோமணி பட்டமும் பெற்றவர். அருளிச்செயலிலும் ப்ரவணராகையாலே ரஸகனமான உபந்யாஸங்கள் செய்து மகிழ்விப்பவர். அனேக வியாக்கியானங்களுமெழுதிப் புகழ்படைத்தவர். இவர் பத்தாவது பிராயம் முதலாக என்னுடைய அபிமானத்திலொதுங்கியிருப்பவரென்பதை இங்கு நான் எழுதிக்கொள்ளாமலிருக்க முடியவில்லை. ஆயுஷ்மந் அபிவர்த்தஸ்வ என்று ஆசாஸிக்கிறேன். இதை நான் எழுதினவன்று அவர் இங்கு நேரில் காட்சி தந்தது அற்புதம். தெய்வவசம். ... ... •

**— ஸ்ரீஉவே. நடாதூர் ராகவாசாரியர் —**

திருநறையூரென்கிற நாச்சியார்கோவிலில் ப்ரஸித்தவித்வன்மணியாக விளங்கினவர் நடாதூர் கிருஷ்ணமாசாரியர்ஸ்வாமி. அவர் ராஜபூஜிதராகவும் விளங்கினவர். அவருடைய மூத்த திருக்குமாரரான ராகவாசாரியர் நெடுநா

ளாகவே குளித்தலையில் வைகநல்லூரில் வாழ்ந்து வருகிறார். சிறந்த வித்வான். உயர்ந்த ப்ரவக்தா. அவ்விடத்தில் வெகுகாலம் ஸம்ஸ்க்ருதோபாத்யாய பதவியை அலங்கரித்திருந்து விச்ராந்தராய் வாக்மியாயெழுந்தருளியிருக்கிறார். •

## — ஸ்ரீஉவே. புத்தூர் (அட்வகேட்) கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் —

திருவரங்கம் பெரியகோயிலுக்கு ஸந்நிஹிதமான புத்தூர் அக்ரஹாரத்தில் ஸ்ரீமதுபயவே. ஸ்ரீநிவாஸய்யங்கார்ஸ்வாமி யென்கிற பெரியார் லௌகிக வைதிக வித்யாபரிச்ராந்தராய் லக்ஷ்மீகடாக்ஷச் சிறப்பும் பெற்றிருந்தவர், 35 ஆண்டுகட்கு முன்பு ஸ்வயார்ஜிதமான தனத்தை நிதியாகவைத்து ஸம்ப்ரதாயக்ரந்த ப்ரகாசனம் பண்ணத் தொடங்கினார். விசேஷித்துப் பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகளை மறுபதிப்புச் செய்யவும் ப்ரவர்த்தித்தார். தமது இருப்பிடமான புத்தூரிலேயே ஸ்ரீநிவாஸ அச்சுக்கூடம் என்ற முத்ராசாலையும் ஸ்தாபித்து ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனமென்கிற மாதாந்தப் பத்திரிகையும் ப்ராரம்பித்து அதன் மூலமாகவும் தனிப்படவும் அனேக ஸம்ப்ரதாய நூல்களை ப்ரசுரித்து வந்தார். அந்த ஸ்வாமி கீர்த்திசேஷரானபின்பு அவருடைய மூத்த திருக்குமாரரான ஸ்ரீஉவே. S கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் திருத்தகப்பனார் தொடங்கின நற்காரியங்களை ஒன்று பத்தாகவும் அழகாகவும் நடத்தி வருவது மிகமிகப் பாராட்டத்தக்கது. இதுதவிரவும் ஸமயோசிதமாக அனேகஸபைகளில் ஆஹூதராயெழுந்தருளிச் செவிக்கினிய செஞ்சொற்களையும் பொழிந்து வருகிறார். இவருடைய பதிப்புப்பணி மேன்மேலு மோங்கவேணும்.

## — திருவல்லிக்கேணி வானமாமலைமடம் கோபாலையங்கார் —

திருவல்லிக்கேணி வானமாமலை மடத்தில் எழுந்தருளியிருப்பவரான இந்த ஸ்வாமி இளமையிலேயே 'ரஹஸ்யாதிகளை அதிகரித்து பகவத்விஷயாதிகாரியாகி சென்னையில் பலவிடங்களிலும் ப்ரவசனங்கள் செய்துபோருகின்றார். ஏறக்குறைய முப்பத்தைந்து வருடங்களுக்கு முன்பு அடியேனுடைய வேதவேதாந்த வைஜயந்தீ பாடசாலையில் நவராத்ரி ஸதஸ்ஸென்று ஆண்டுதோறும் ஒன்பதுநாள் பண்டித பரிஷத்து நடத்திவந்தேன். அதில் ஸம்ப்ரதாயக்ரந்த பரீக்ஷையும் ஒரு சாகையாக வைக்கப்பட்டிருந்தது. ஒரு ஸம்வத்ஸரம் இந்த ஸ்வாமி அதில் பரீக்ஷ்யராக அந்வயித்து ஸம்ப்ரதாயக்ரந்தங்களில் நல்ல உபஸ்திதி யுடையவரென்று புகழ் பெற்றார். திருவல்லிக்கேணியிலும் சென்னையிலும் இவருடைய உபந்யாஸங்கள் நடைபெற்று வருவது நல்லோர்கட்கு நல்லுணவு. ... ... ... •

## — ஸ்ரீமான் புரிசை வரதாசாரியர் —

P. R. வரதாசாரியர் (அல்லது) பரவஸ்து வரதாசாரியர் என்பவர் இருபத்தைந்து வருஷங்களுக்கு மேலாக சென்னையிலும் சிறுபான்மை வெளியூர்களிலும் ப்ரவசனங்கள் செய்துபோருவது அவரவர்கள் அநுபவித்து வருவதேயாகும். இவர் ஆங்கிலத்திலும் தமிழிலும் வல்லமை பெற்றிருப்பதோடு ஸம்ப்ரதாயக்ரந்தங்களிலே போதுமான பரிசயமுடையவர். ஸாராஸார விவேக சக்தியுள்ளவர்; பரம ரஸிகராய்ப் பேசவுமெழுதவும் வல்லவர். பஹுச்ருதராகையாலே விஷயங்களை விளக்கமாக எடுத்துரைக்கவல்லவர். இவருடைய புகழ் மேன்மேலுமோங்குமாக. •

— ஸ்ரீமதுபயவே. கோயம்புத்தூர் பட்டர்ஸ்வாமி —

கோயம்புத்தூரில் ப்ரஸித்த ப்ராஜ்ஞராக ஸேவை ஸாதித்தருளாநின்ற ஸ்ரீமத் வேதவ்யாஸபட்டர் திருமலை ஐயங்கார் ஸ்வாமி, அவ்விடத்திலெழுந்தருளியிருந்த ஸ்ரீசைல சக்ரவர்த்யாசார்ய ஸ்வாமி பக்கலில் வேதாந்த ச்ரவணம் பண்ணி ஸ்வரூப க்ரந்தங்களும் ஸேவித்து அவ்விடத்தில் ப்ரவசந நிரதராக எழுந்தருளியிருக்கிறார். இந்த ஸ்வாமி அடியேனுக்கு *பஹி: ப்ராண இவாபர:. அடியேனுடைய தக்ஷிணோத்தரதேச யாத்திரைகளில் சில பர்யாயங்கள் ஸஹாந்வயித்திருந்து பரமஸநிக்தரானவர். காஞ்சிக்கும் சென்னைக்கும் அடிக்கடி யெழுந்தருளி பந்து நிர்விசேஷமாக அநுக்ரஹிப்பவர். அனேகமாக மார்கழி மாதங்களில் சென்னைக் கெழுந்தருளி உசாத்துணையாயிருந்தவர். இந்த ஸ்வாமி சிஷ்யஸம்பந்நராகையாலே ஸ்வஸ்தானத்தில் அனேகமாக ஸ்வரூபக்ரந்தங்களின் ப்ரவசனமே போது போக்காக எழுந்தருளியிருக்கிறார். இந்த ஸ்வாமிக்கு ஆங்கில பாஷையிலும் பரிபூர்ண ப்ரவேச முண்டாகையால் இவருடைய யோக்யதை காலாநுகுணமாக மிகவும் பரிமளிக்கின்றது. ஸஹவாஸ யோக்யரான வ்யக்திவிசேஷமிவர். ... *

— ஸ்ரீமதுபயவே. பாதூர். ராகவாசார்ய ஸ்வாமி —

ஸ்ரீமதுராந்தகத்திலுள்ள ஸ்ரீமதஹோபில மடத்து ஸம்ஸ்க்ருத காலேஜில் வ்யாகரணோபாத்யாய பதவியை அலங்கரித்தருளாநின்ற இந்தஸ்வாமி ப்ரபல வித்வத்கோஷ்டியில் பரிகணிதராய் விளங்குபவர். வ்யாகரண சாஸ்த்ர ஸாகர பாரத்ருச்வா. அந்த சாஸ்த்ரத்தைப் பலகால் ப்ரவசனம்செய்து பலவித்யார்த்திகளை உத்தீர்ணராக்கினவர். ஸரஸகவியென்று விருதுபெற்றவர். ஸ்வரூபக்ரந்த ப்ரவசனத்திலும் நிஷ்ணாதர். எதிலும் பரிநிஷ்பந்நமான ஞானமுடையவராதலால் அடியேன் மிகவுகக்கப்பெற்றவர் ; பரம சாந்தர். .... ... .... *

— ஸ்ரீமதுபயவே. நல்லான். ராமக்ருஷ்ணையங்கார் —

ஆழ்வார்திருநகரியில் தோன்றி மதுரையில் கலைபயின்று செந்தமிழும் வடகலையும் திகழ்ந்த நாவலராய் சென்னையில் பலவாண்டுகளாக ப்ரவசனங்களினால் பலரையும் வாழ்வித்து வருபவர். சிறந்த க்ராந்திகருமாவர். தமிழ்க்கவி யியற்றும் பெற்றி வாய்ந்தவர். டில்லி பாம்பே முதலானவிடங்களிலுஞ் சென்று உபந்யஸித்துப் புகழ்பெற்றவர் ; நீடூழி வாழ்க. ... ... ... ... *

— ஸ்ரீமதுபயவே. கோமல். சேஷாத்ரியாசார்யஸ்வாமி —

புதுக்கோட்டை ஸம்ஸ்தான தானாதிகாரி. ஸ்ரீமதுபயவே. காளி. ரங்காசாரியர் ஸ்வாமி ஸன்னிதியில் க்ரந்த சதுஷ்டயமுமதிகரித்து ஸ்ரீராமாயண பூஷணாதி பிருதாலங்க்ருதராய் விளங்குமிந்தஸ்வாமி நெடுநாளாகவே ப்ரவசனப்ரவீணர். ஸங்கீத ஸாஹித்ய ஸம்பத்தோடு பரிமளிக்கும் இவருடைய ப்ரவசனங்கள். விசேஷித்து ஸ்ரீராமாயணார்ணவ கர்ணதார:; பலவாண்டுகளாக சென்னையில் வஸித்துக்கொண்டு அடிக்கடி பலவிடங்களிலும் ப்ரவசனம் செய்து போருகிறார். வைஷம்ய வைதேசிகரென்று அடியேன் கொண்டாடநிற்பவர். பல்லாண்டு பல்லாண்டு. ... *

— ஸ்ரீமதுபயவே. தெ. கம். கோபாலாசார்யஸ்வாமி —

இந்த ஸ்வாமி கோதாவரீமண்டல மண்டனராய் நியாயவேதாந்த வித்வத் வரிஷ்டராய் ஸ்ரீமந்நாராயண ராமாநுஜ ஜீயர்ஸ்வாமிக்கு தக்ஷிணபாஹுவாய் விளங்குபவர். இவருடைய ப்ரவசனங்கள் பலவிடங்களில் வியாபிக்குமவை. பலகால் சென்னையிலும் நிகழ்ந்தவை. ஆங்கிலபாஷையிலும் நிபுணர் எனக்கு ஆந்த்ர மண்டல ஸஞ்சாரமேற்படுவதற்கு இந்த ஸ்வாமியும் ஒரு காரணபூதர். முப்பது வருடங்களுக்கு மேலாகப் பரமஸ்நிக்தராயிருப்பவர். ஜயது ஜயது •

— ஸ்ரீமதுபயவே. ப்ரஹ்மதேசம் - ராமாநுஜாசார்யஸ்வாமி —

ஸ்ரீகாஞ்சியில் அடியேனுடைய வீதியிலேயே யெழுந்தருளி யிருப்பவரான இந்த ஸ்வாமி ஸ்ரீமத் பரமஹம்ஸ. இஞ்சிமேட்டழகியசிங்கர் திருவடிகளில் பஹுச்ருதர். சிறந்த வித்வான். உயர்ந்த விவேகி. ப்ரவசனங்களை ஸமஞ்ஜஸமாக நடத்துபவர். தமது திருக்குமாரரையும் தம்மைப்போலக் கடாக்ஷித்திருப்பவர். •

— ஸ்ரீவில்லிபுத்தூர். விஞ்சிமூர். கே. ஸ்ரீநிவாஸாசாரியார் —

எண்டோமெண்டு போர்டு மூலமாக நெடுநாளாகவே ஆங்காங்கு ப்ரவசனங்கள் செய்துபோருமிவர் சில மாதங்களாய் மதுரையில் கூடலழகப்பெருமாள் ஸன்னிதி பரிஸரத்தில் பகவத்விஷய ப்ரவசனத்தை வரியடைவே நடத்தத் தொடங்கி யிருக்கின்றார். உபயபாஷா விசாரதர். இந்த ப்ரவசனம் மேன்மேலு மோங்குமாக. ... ... ... ... ... •

— ஸ்ரீமதுபயவே. T. K. V. N. ஸுதர்சநாசார்யஸ்வாமி —

திருப்பதியில் ஸ்ரீவேங்கடேச்வர ஓரியண்டல் காலேஜில் ப்ரின்ஸிபால் பதவியை அலங்கரித்திருப்பவரும், 'தர்சன ஸார்வபௌம' இத்யாத்யநேக பிருதாவளீபூஷிதருமான ஸ்ரீஸுதர்சநாசார்யஸ்வாமி சிறந்த சாஸ்த்ரஜ்ஞரும் உயர்ந்த ப்ரவக்தாவுமாய் விளங்கிவருகிறார். திருப்பதியென்று நினைக்கும்போதே ப்ரவசந ப்ரவீணர்களான பலவித்வான்கள் நினைவுக்கு வருகிறார்கள். தசரத சக்ரவர்த்தி துஞ்சினபிறகு மாதுல குலத்திலிருந்து பரதாழ்வானை யழைத்துவரச் சென்ற தூதர்கள் புறப்பட்டுப் போனபடியைப் பேசுகின்ற வான்மீகி முனிவர் "ஸராம்ஸி ச ஸுபுல்லாநி நதீச் ச விமலோதகா:, நிரீக்ஷமாணாஸ் தே தூதா ஜக்மு: கார்யவசாத் த்ருதம்" என்றார். இங்கு நம்பிள்ளை [நிரீக்ஷமாணா ஜக்மு:] என்று ப்ரதீகமெடுத்து "பாராதே போனார்களென்கை" என்று வியாக்கியான மருளியிருக்குமழகு அற்புதமானது. 'பார்த்துக் கொண்டே போனார்கள்' என்றெழுதவேண்டியதற்குப பர்யாயமாக 'பாராதே போனார்கள்'' என்றருளிச்செய்தார். அதேபோல, அடியேன் பல வித்வான்களை அநுஸந்தித்துக்கொண்டே போகிறேன். உண்மை வித்வான்களின் உயர்வை உள்ளபடியறிந்து உகந்திருக்குமடியேன் ஸகல வித்வான்களின் ப்ரசம்ஸையையும் ஸஹ்ருதயமாகச் செய்ய விருப்பமுடையேன். அதற்கென்று தனியேயொரு நூலமைக்கவும் அபிநிவேசமுடையேன். ஆழ்வார் திருக்குடந்தையை "செழுமாமணிகள் சேருந் திருக்குடந்தை" என்றார். இப்போது "செழுமாமணிகள் சேருந் திருப்பதி' என்னவேணும். 'மணி, மாமணி, செழுமாமணி, செழுமாமணிகள்' என்றதற்குச் சேர தற்காலம் திருப்பதியில் நான்கு வித்யாரத்னங்களை ஸ்மரித்து மேலே போகிறேன். உபயவேதாந்த ப்ரவர்த்தகர்களான, கச்சிக்கிடாம்பி யாமுநா

சார்யர், திருமலை அனந்தாண்பிள்ளை. க்ருஷ்ணமாசார்ய கோபாலாசார்யர்கள், கிடாம்பி ஸ்ரீநிவாஸவரதாசாரியர்—ஆகிய இந்நால்வரும் வேங்கடத்தைப் பதியாகக் கொண்டு மாமுத்த நிதிசொரியும் மாமுகில்களாய் விளங்காநிற்பவர்கள். பொலிக பொலிக. ... .... ... ... .... *

— ஸ்ரீமதுபயவே. கொடவர்த்தி சடகோபாசார்யஸ்வாமி —

ஸ்ரீபெரும்பூதூரில் பலவாண்டுகள் எழுந்தருளியிருந்து நியாயசாஸ்த்ர ப்ரவசனம் செய்துபோந்து உபயவேதாந்த ப்ரவசனதுரீணராக விளங்குமிந்த ஸ்வாமி கோதாவரீ தீரத்தில் பலைபூடி யென்னுமக்ரஹாரத்தில் சிறந்த ப்ரவக்தா வாக விளங்கி வருகிறார். நம் ஸ்ரீமந்நாராயணஜீயர்ஸ்வாமி மதித்த வித்வந்மணி இவர். ... .... ... .... ... *

— ஸ்ரீமதுபயவே. கிடாம்பி வேங்கடநரஸிம்ஹாசாரியர் —

நூஜிவீடு ஸம்ஸ்தானத்தில் நெடுநாள் ஆஸ்தான பண்டிதராக எழுந்தருளி யிருந்த மங்களம்பாடி. கோபால க்ருஷ்ணமாசார்யஸ்வாமியின் ஜ்யேஷ்ட குமாரன விவர் வியாகரண வேதாந்தங்களில் நிஷ்ணாதராய் ஸ்ரீபாஷ்ய பகவத்விஷயாதி காரியாய் நெல்லூர் ஸம்ஸ்க்ருத காலேஜில் சாஸ்த்ரோபாத்யாயராய் விளங்கி வருகிறார். சிறந்த ப்ரவக்தா. நெல்லூரில் ஸ்ரீரங்கநாயகன் ஸந்நிதியில் பல ஸம்வஸ்த்ஸரங்களாக ஸம்ப்ரதாய க்ரந்தங்களையும் இதிஹாஸ புராணங்களையும் நிரந்தரமாக ப்ரவசனம் செய்து வருபவர். பரம ஸாத்விக ப்ரக்ருதி. .... *

— ஸ்ரீமதுபயவே. ஈயுண்ணி, சேஷசிங்கராசார்யஸ்வாமி —

கோதாவரி ஜில்லா. நரஸாபுர ஸமீபத்தில் அந்தர்வேதி பாளையமென்னும் அக்ரஹாரத்தில் எழுந்தருளியிருக்கின்ற இந்த ஸ்வாமி திருப்பதி ஸம்ஸ்க்ருத வித்யா லயத்தில் ஸாஹித்ய சாஸ்த்ரங்களை வாசித்து உபயவேதாந்தங்களையும் ரஹஸ்யங் களையும் வரியடைவே கற்று மிகச்சிறந்த வித்வானாக விளங்கிவருகின்றார். அருளிச்செயற்கடலில் ஆழ்ந்தவர் என்னுஞ் சிறப்புப் பெற்றவர். பரம ஸாத்விக ரான இந்த ஸ்வாமியை அடியேன் நாடோறும் நினைப்பவன். .... .... *

— ஸ்ரீமதுபயவே. கரி. ராமாநுஜாசார்யஸ்வாமி —

ஸிம்ஹாசல க்ஷேத்ராபிஜநரான இந்த ஸ்வாமி வியாகரண சாஸ்த்ர ப்ரவசனத் தில் அத்விதீய ப்ரக்க்யாதிபெற்றவர். மஹாபாஷ்யாந்த பண்டிதர். நல்ல நிருபண சக்தியும் விமர்ச வைசாரத்யமும் வாய்ந்தவர். இவருடைய ப்ரவசனத்தினல் உத்தீர்ணர்களான வித்வான்கள் பலபேர்கள். ஆந்த்ரமண்டலத்திற்கு அணி விளக்காக விளங்கி வருகிறார்கள். இப்போதுமிவர் குண்டூர் ஜில்லா நரஸராவு பேட்டையில் வ்யாகரண சாஸ்த்ர ப்ரவசனம் செய்துபோருகிறார். நாற்பது வருஷ மாக அடியேனுக்குப் பரமஸ்நிக்தர். ... .... .... *

— முடிவாகத் தெரிவிக்கும் வ்யக்தி விசேஷங்கள் —

பண்டைக்காலத்து இதிஹாஸங்களில் ஆத்ரேயி மைத்ராயணீ ஸாவித்ரி முதலான சில ஸ்த்ரீவ்யக்திகளைப்பற்றி ஓதியிருப்பதைக் காண்கிறோம். அத்தகைய வியக்திகள் ஆங்காங்கு க்வசித் க்வசித்தென்கிற கணக்கிலே இற்றைக்கும் தோன்றி வருகிறார்கள். ஸ்ரீவில்லிபுத்தூரில் அத்துழாயென்னும் பெயர்புனைந்த அஷ்டகோத்ரம் திருவேங்கடத்தம்மா இந்த ப்ரவக்த்ருச்ரேணியில் பரிகணிக்கத் தக்கவளென்று கருதுகின்றேன். தமிழில் மட்டுமன்றிக்கே ஸம்ஸ்க்ருதத்திலும் ஆழ்ந்த ப்ரஜ்ஞையுடையவள். சாஸ்த்ரமர்யாதைகளுமறிந்தவள். இவ்வம்மையின் செவியில் விழாத ஸம்ப்ரதாயார்த்தமில்லை. ப்ரவசனமே போதுபோக்காயுமிருப்பது அஸூயையற்றவர்கள் புகழ்தற்குரியது. இத்தகைய மற்றொருவ்யக்தி மதுரபாஷிணீ யென்னும் பெயரோடே சென்னையிலும் விளங்குவதுண்டு. ... ... *

## — தொண்டுபூண்டமுதமுண்டு எண்டிசைக்கும் விளக்காகி நிற்பார் —

திருவாய்மொழி முதற்பத்தின் முடிவு பாசுரம் "**தணிவிலர் கற்பரேல் கல்வி வாயுமே**" என்று தலைக்கட்டுகின்றது. "கல்வி வாய்ப்பதாவது - கைங்கர்ய பர்யந்தமாகை" என்று வியாக்கியானம் செய்தருளுகிறார்கள். கற்ற கல்விக்குப் பலன் கைங்கரியமேயாகும். திருமாலையில் * தண்டுழாய் மாலைமார்பன் தமர்களாய்ப் பாடியாடித் தொண்டுபூண்டு அமுதமுண்ணுத் தொழும்பர் சோறுகக்குமாறே * என்று கைங்கர்ய ஸாம்ராஜ்ய தரித்ரர்கள் க்ஷேபிக்கப்படுகிறார்கள். பெரியாழ்வார் பல்லாண்டு பாடுகையையே பரம புருஷார்த்தமாக அறுதியிட்டு * வாழாட்பட்டு நின்றீருள்ளீரேல் வந்து மண்ணும் மணமுங் கொண்மின் * என்று கைங்கர்ய ரஸிகர்களை ஆதரித்தழைக்கிறார். அவ்வாழ்வார்தாமே கண்ணபிரான் செய்த கிரீடைகளையெல்லாம் * வெண்ணெய் விழுங்கி யென்கிறவொரு திருமொழியினாலநுபவித்துப் பலன் சொல்லி நிகமிக்கையில் * கொண்டிவை பாடிக் குனிக்க வல்லார் கோவிந்தன் தன் அடியார்களாகி **எண்டிசைக்கும் விளக்காகி நிற்பார்** * என்கிறார். மேலே கண்ணனுடைய வேணுகானப் பதிகமொன்று கூறி அதற்குப் பயனாக * குழலைவென்ற குளிர் வாயினராகிச் சாதுகோட்டியுட் கொள்ளப் படுவாரே * என்கிறார். இத்தகைய பாசுரங்களுக்கு மேலாகப் பிள்ளை லோகாசார்யர் முமுக்ஷுப்படியில் ஸ்ரீவைஷ்ணவாதிகாரி லக்ஷணங் கூறும் பெரியதொரு சூர்ணையில் "இருக்கும் நாள் உகந்தருளின நிலங்களிலே ப்ரவணனாய் குணாநுபவ கைங்கர்யங்களே பொழுது போக்காகையும்" என்றருளிச் செய்கிறார். அவ்விடத்து மணவாளமாமுனிகளின் திவ்ய ஸூக்திகள்—"பரமபதத்திலே போய் பகவதநுபவ கைங்கர்யங்களைப் பண்ணுகையாகிற பேற்றில் த்வரை நடவா நிற்கச் செய்தேயும் இச் சரீரத்தோடே யிருக்கும் நாள் * தானுகந்தவூர் * என்கிறபடியே ஸர்வேச்வரன் உகந்து வர்த்திக்கிற திவ்ய தேசங்களிலே ப்ராவண்யத்தை யுடையனாய் அவ்வோ திவ்ய தேசங்களிலே நிற்கிறவனுடைய கல்யாண குணாநுபவமும், அது அடியாகக் கரணத்ரயத்தாலும் அவன் விஷயத்திற் பண்ணும் கைங்கர்யமுமே காலக்ஷேப விஷயமாம்படி யிருக்கை"— என்பவை.

ஸ்ரீவசனபூஷணத்தில் ப்ரபந்நதிநசர்யை கூறும் பெரியதொரு சூர்ணையில்— "உகந்தருளின நிலங்களில் ஆதராதிசயமும் மங்களா சாஸனமும்" என்றருளிச் செய்யப்படுகிறது. ஆசார்ய ஹ்ருதயத்தில் "ஸாதநஸாத்யங்களில் முதலும் முடிவும் வர்ணதர்மிகள் தாஸவ்ருத்திகளென்று துறை வேறிடுவித்தது" என்பது பரம விலக்ஷணமான ஸ்ரீஸூக்தி விசேஷம். ஆக இவற்றை யெல்லாம் நெஞ்சிற் கொண்டு "**தொண்டு பூண்டமுதமுண்டு எண்டிசைக்கும் விளக்காகி நிற்பார்**' என்று மகுடமிட்டு நெஞ்சு கனிந்து எழுதும் பரிச்சேதமிது.

கீழே 33 முதலிய சில பக்கங்களில் ப்ரசம்ஸிக்கப்பட்டுள்ள ஸ்ரீமதுபயவே. மாம்பள்ளம் ஸுதர்சநாசார்ய ஸ்வாமியின் திருவருளுக்கு இலக்காகி வேத வேதாந்த வைஜயந்தீ பாடசாலையின் மூலமாக உத்தீர்ணர்களாகி "**கைங்கர்ய**

நித்யநிரதைச் பவதேக போகை:'' என்கிற ஆழ்வான் ஸ்ரீஸூக்திக்கு இலக்காகி யுள்ள வர்களும் பேரருளாளன் பதவிணையில் கொண்டு பூண்டமுத முண்பவர்களுமான விலக்ஷணுதிகாரிகளை முன்னமநுபவிக்கிறேன். ... ... .... •

1. **திருமலை சர்சம்பாடி சடகோபாசார்யர்.** இவர் உபய வேதாதிகாரியாய் வயோவ்ருத்தருமாய் கைங்கர்ய நிரதராயிருப்பவர். விசேஷித்து இவர் ஒரு பெருமை பெற்றவர். (அதாவது) தேவப்பெருமாள் ஸன்னிதி மணவாள மாமுனிகள் ஸன்னிதியில் மஹாமண்டப நிர்மாண கைங்கரியத்தை நிர்வஹித்ததேயாகும். நமது பாடசாலைக்குத் திலகமாய் விளங்கின மாமண்டூர் குரவி. நரஸிம்ஹாசாரி யரும் இத்திருப்பணியில் ஸஹயோகம் பெற்றிருந்தவர். அவரைச் சிலவாண்டு கட்கு முன்பு அநியாயமாய் இழந்து விட்டோம். அவரை நினைத்து வருந்துவதை நிறுத்திக்கொள்ளுகிறேன். வாழ்ந்திருப்பவர்களை நினைத்து. .... ... •

2. **திருமலை விஞ்சிமூர். சிங்காராசார்யர்.** மாதாமஹஜீயர் ஸ்வாமியென்று அடியேன் பலகால் ப்ரஸ்தாவிக்கும் மஹாஸ்வாமிக்கு அடியேனைப்போல இவருமொரு (பூர்வாச்ரம) தௌஹித்ரர். ஜீயர்ஸ்வாமி ஸன்னிதியிலேயே பணிந்து பலவும் பயின்று பழுத்தவர். பிறகு மாம்பள்ளம் ஸ்வாமி பக்கலிலே க்ரமாந்தம் வேதமோதி னவர். காவ்ய நாடகாலங்கார பரிச்ராந்தர். உபய வேத கண்டீரவபிருது பெற்றவர். பரமைகாந்தி குடும்பஸ்தர். பேரருளாளனுடைய நித்யகைங்கர்ய துரந்தரராய் விளங்கி வருகிறார். நித்யஸ்ரீர் நித்யமங்களம். .... ... ... •

3. **பிரதிவாதிபயங்கரம். அனந்தாசார்யர்.** தேவப்பெருமாள் ஸன்னிதி ஸ்தலா சார்ய புருஷர்களில் ஒருவரானவிவர் பலவாண்டுகட்குமுன் ஸ்ரீபெரும்பூதூர் ஸம்ஸ்க்ருத காலேஜில் உபாத்யாய பதவியை அலங்கரித்திருந்தவரும் பிறகு சோளஸிம்ஹபுரத்தில் ஸ்வயம் ஸம்ஸ்க்ருதகாலேஜ் நடத்தினவருமான ஸ்ரீஉவே. ப்ர. க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியின் திருக்குமாரர். ஸ்ரீபெரும்பூதூர்க் கலாசாலையில் நியாயசிரோமணியாகிப் பிறகு வேதாந்த சிரோமணியாய் ''அதீதமத்யாபிதமார் ஜிதம் யச:'' என்னப் பெற்றவர். சிலவாண்டுகளாக நிஜநிலயமான காஞ்சியிலேயே வஸித்துக்கொண்டு பேரருளாளன் திருவடிகளிலே அருளிச்செயல் வல்லமையை அந்வர்த்தமாக்கிக்கொண்டு போருகின்றார். ஆழ்ந்த ஞானமும் விமர்ச சக்தியும் வாய்ந்தவர் * பதியே பரவித்தொழும் தொண்டர் • ... .... *

4. **கோயில் பிரதிவாதிபயங்கரம் ராமாநுஜாசார்யர்.** கண்ணமாசாரியரென்றும் வ்யபதேசிக்கப் பெறுமிவர் சிறந்த தமிழ்வித்வான்; உயர்ந்த ஸம்ப்ரதாயஜ்ஞர். பகவத் விஷயாதிகாரி. ப்ரவசன ப்ரவீணர். அருளிச்செயல் வல்லவர். நெடுநாளா கவே காஞ்சீ ஸ்திரவாஸியாய் கைங்கர்ய ரஸிகராய் விளங்குபவர். சிறந்த மேதாவி.

5. **திருமலை அனந்தாண்பிள்ளை. குன்றபாக்கம். (ஸ்ரீசைல) க்ருஷ்ணமாசார்யர்.** அடியேனெழுதியுள்ள ''எழுபத்தேழு பெரியார்களின் பெருமை'' என்னும் நூலில் குன்றபாக்கத்து வித்வான்கள் நால்வரை ப்ரஸ்தாவித்திருக்கிறேன். (நெ. 57) ஸ்ரீமதுபயவே. தி. அ. ராமாநுஜாசார்யஸ்வாமி; அந்தஸ்வாமி நியாயவேதாந்த வித்வத் வரிஷ்டராய் ஸ்ரீபெரும்பூதூரில் ப்ரவசனநிரதரா யெழுந்தருளியிருந்தார். அவருடைய பௌத்ரரான இந்த க்ருஷ்ணமாசாரியரும்ஸ்ரீபெரும்பூதூர் கலாசாலையில்

இளமையில் காவ்யநாடகாதிகளையும் நியாயப்ரகரணத்தையுமதிகரித்து, நாற்பது வருஷங்களுக்கு முன்பு காஞ்சீவாஸியாக வந்துசேர்ந்து நமது வைஜயந்தியில் அந்வயித்து வித்யாபிவிருத்தி ஸம்பன்னரானார். பகவத் விஷயாதிகாரி. ஸ்ரீமதுபயவே. மாம்பள்ளம் ஸ்வாமிக்கு இவர் பாகிநேயராதலால் வேதமுமோதினார். அருளிச்செயல் வல்லவரானார் ப்ரவசனத்திலும் ப்ரவீணர். பேரருளாளன் திருவடிகளில் தொண்டுபூண்டமுதமுண்கிறார். ... ... ... *

6 மாம்பள்ளம். திருமலை விஞ்சிமூர் பாஷ்யகாராசாரியர். ஸ்ரீபெரும்பூதூரில் வேதமோதி வேதபாராயண கோஷ்டியைக் காத்தவர்களில் ஒருவராக ப்ரஸித்திபெற்றிருந்த மாம்பள்ளம் சிங்கராசார்யஸ்வாமியின் மூத்த திருக்குமாரரானவிவர் ஸ்ரீபெரும்பூதூரிலேயே வேதத்தை க்ரமாந்தமாகவோதி ஸாஹித்யமுமதிகரித்து அவ்விடத்திலேயே நெடுநாள் வேதபாராயண கைங்கர்ய நிஷ்ணாதராயிருந்துவந்தவர். தேவப்பெருமாள் திருவடிவாரத்திலே நித்யவாஸத்தில் அபிநிவிஷ்டராய் இவ்விடம் வந்து சேர்ந்து அருளிச்செயலுமோதி கைங்கர்யநிரதரா யிருந்துவருகிறார். இவர் கர்மகாண்ட க்ரியாகலாப மர்மஜ்ஞர். பூர்வாபரப்ரயோகப்ரவீணர். .... .... *

7. கோயில் கந்தாடை அண்ணன் (ஜடப்ரோல்) ராகவாசாரியர். இவர் சிலவாண்டுகளாக மயிலையில் கேசவப்பெருமாள் ஸன்னிதியில் வேதபாராயண கைங்கர்ய நிரதராய் வாழ்ந்து வந்தாலும் காஞ்சீபுரஸ்தரே. இவர் யோக்யதைகள் ஸம்பாதித்ததெல்லாம் நமது வேதவேதாந்த வைஜயந்தியிலே. நெடுங்காலம் இவ்விடத்திலேயே கைங்கரியம் செய்துபோந்தவர். இப்போதும் ஸமய விசேஷங்களில் வந்து செய்து போருமவர். .... ... .... .... ... •

8, 9, 10. அடியேனுடைய தௌஹித்ரர்களும், கநிஷ்ட ஜாமாதாவும். கநிஷ்ட துஹிதாவின் குமாரனாய் ஸ்வீக்ருதனான (செல்வமணியென்கிற) சி. ரங்கநாதனும் ஜ்யேஷ்ட துஹிதாவின் குமாரனான சி. அனந்தாழ்வானும், அருளிச்செயற் கடலில் அவகாஹனம் பெற்றுக் கைங்கர்ய துரந்தரர்களாய் விளங்குமவர்கள். கநிஷ்ட ஜாமாதாவான (ஸ்ரீபெரும்பூதூர்) மணவாள திருமலாசாரியர் க்ரமாந்தம் வேதமோதி உபயுக்தமான அருளிச்செயல்களையு மதிகரித்து கைங்கர்ய நிஷ்ணாதராயிருப்பவர்.

11. காழியூர். தீ த. சேஷாத்ரியாசாரியர். காழியூரில் பட்டப்பாஸ்வாமி யென்று ப்ரஸித்தரா யெழுந்தருளியிருந்த மஹாஸ்வாமி தம்முடைய திருக்குமாரர்கள் நால்வர்க்கும் அத்புதமான யோக்யதையைக் கற்பித்திருந்தார். அவர்களில் மூத்தவருடைய திருக்குமாரரானவிவர் பிதாமஹரிடத்திலும் பிதாவினிடத்திலும் மிகச் சிறந்த யோக்யதைகளை ஸம்பாதித்தவர். ஆழ்வாராசார்ய ஸ்ரீஸூக்திகளிலும் மிகத்திடமான உபஸ்திதியுள்ளவர். தம்முடைய குமாரர்கள் மூவரையும் தம்மையேயொக்க அருள்செய்திருப்பவர். பகவத் விஷயாதிகாரி. லௌகிகோத்யோகம் வியாஜமாய் இவ்விடத்தில் கைங்கர்ய நிஷ்ணாதர். .... .... ... .... •

12. மடவளாகம். தீ. அ. கோபாலாசாரியர். இவ்விடத்தில் ப்ரஸித்த அத்யாபகராக எழுந்தருளியிருந்த ஸ்ரீ உவே. தேசூர் ரங்கஸாமி ஐயங்கார் ஸ்வாமிக்கு ஜாமாதாவாய் மடவளாகமென்னும் அக்ரஹாரத்திலிருந்து இவ்விடம் ஸ்திரவாஸங்கொண்டவிவர் மாமனாரைப்போல் அருளிச்செயல் விரகராய் கைங்கர்ய

நித்யநிரதராய் விளங்கி வருகிறார். இவருடைய இரு திருக்குமாரர்களுங்கூட யோக்யதைபெற்று ஸமய விசேஷங்களில் கைங்கர்ய ச்ரத்தாளுக்களாயிருப்பவர்கள்.

13. **காழியூர். ஸ்ரீ த பாஷ்யகாராசாரியர்.** காழியூர் அக்ரஹாரத்தில் ஜனித்தவர்களுக்கு அருளிச்செயல் யோக்யதை ஜன்மஸித்த மென்னவேணும். இவர் விலக்ஷணுதிகாரி. தர்சன நிர்வாஹ கைங்கர்யத்திலுமீடுபட்டவர். திருக்குமாரர்களையும் கைங்கரியத்தி லீடுபடுத்தியுள்ளவர். .... .... ... *

14. **சாத்துப்படி. திரு. வரதாசாரியர்.** இவர் இளமையில் நெடுநாள் நமது வேத வேதாந்த வைஜயந்திவித்யார்த்தியாயிருந்து யோக்யதை ஸம்பாதித்திருந்தும் இடையில் சில பலவாண்டுகள் ஸ்ரீயதோக்தகாரி யெம்பெருமானுக்குத் தொண்டு பூண்டிருந்தார். தேவப்பெருமாள் ஸன்னிதியில் இவர் படைத்திருக்கும் பரம்பரைச் செல்வம் நிகரற்றது. அதனால் தேவப்பெருமாள் இவரை விட்டுக் கொடுக்க மாட்டாமல் தம்மிடத்திலேயே அத்தாணிச் சேவகமளித்து ஆட்கொண்டிருக்கிறார். பேரருளாளன் திருவுள்ளத்திற்கும் என்னுள்ளத்திற்கும் இவருடைய கைங்கர்யம் மிகவும் ரஸித்திருப்பதாம். ... .... .... ... *

15. **கோயில் கந்தாடை அண்ணன் ரங்கராஜாசாரியர்.** இவர் நமது பாடசாலையின் மூலமாகவே அனேக யோக்யதைகளை ஸம்பாதித்தவர். ஆந்திர ப்ரதேசங்களில் சிஷ்யஸம்பத்தியுள்ளவர். ஊரிலிருக்கும் நாட்களில் தவறாது அருளிச்செயல் கைங்கர்ய துரந்தரராயிருப்பவர். ஆழ்வாராசார்ய ஸ்ரீஸூக்திகளனைத்திலும் வல்லவர்.

16. **திருமலை. விஞ்சிமூர் நரஸிம்ஹாசாரியர்.** காஞ்சியில் ப்ரதிஷ்டிதராக எழுந்தருளி யிருந்த ஸ்ரீ உவே. விஞ்சிமூர். பாஷ்யகாராசார்ய ஸ்வாமியின் இளைய திருக்குமாரரானவிவர் வெகுகாலம் காஞ்சீபுரியிலேயே வாழ்ந்து அருளிச்செயல் வல்லவராயினர். உத்யோக நிமித்தமாகத் திருவல்லிக்கேணியில் வாழ்ந்து வந்தாலும் பேரருளாளனுடைய கிங்கரரேயிவர். ... .... ... ... *

17. **அவந்தேசி. கந்தாடை. ஸ்ரீநிவாஸாசாரியர்.** இவரும் இப்போது திருவல்லிக்கேணியில் வாழ்ந்து வந்தாலும் காஞ்சீநிகேதனரேயாவர். நெடுநாளைக்கு முன் திருவல்லிக்கேணியில் நடந்து வந்த வேத பாடசாலையில் வேத மோதத் தொடங்கியிருந்தார். அதைப் பூர்த்தி செய்து கொண்டதும் திவ்யப்ரபந்தமோதினதும் காஞ்சியிலேயே; ஆகவே இவர் காஞ்சீ கிங்கரர்களிற் சேர்ந்தவரே. சிறந்த வைதிகர்.

18. **காவல்கழனி திருமலை விஞ்சிமூர் அனந்தாசாரியர்.** இவரும் இப்போது திருவல்லிக்கேணியில் ப்ரதிஷ்டிதராயிருந்தாலும் காஞ்சீபுரஸ்தரே. பெரும்பாலும் யோக்யதை ஸம்பாதித்ததும் காஞ்சீபுரியிலேயே. இவருடைய திருத்தகப்பனார் ஸகுடும்பராகக் காஞ்சீபுரிக்கே வாஸமாக வந்து சேர்ந்து மங்களாசாஸனபரராயெழுந்தருளியிருந்தவர். இவர் ஸம்பாதித்திருக்கிற விலக்ஷண யோக்யதைக்கு மூலம் தேவப் பெருமாளுடைய திருவருளேயாம். பெரிய திருமொழியில் திருவெள்ளக்குளப் பதிகத்தில் " கல்லின் மலிதோள் கலியன் சொன்னமாலை, வல்லரேன வல்லவர் வானவர் தாமே ' என்றவிடத்தை ஸேவிக்கும் போதெல்லாம் அடியேன் இவரையே நினைப்பவன். இவர்க்கு உத்யோகம் வியாஜம்; கைங்கர்யமே போதுபோக்கு.

* * * * * *

— ஸ்ரீகாஞ்சியில் சிறப்பாக வாழும் ஐவரைப்பற்றி —

இங்ஙனே இன்னும் பல வ்யக்தி விசேஷங்களை இங்கு அடியேன் எடுத்து மிகமிக விளக்க வேண்டியதுண்டு. நூல் விரிவுக்கஞ்சி நிற்கின்றேன். இறுதியாக ஐவரை நினைத்து க்ருதார்த்தனாகிறேன். ஸ்ரீமதுபயவே. திருமலை ஈச்சம்பாடி வரதாசாரியர் ஸ்வாமி ஞானசில வயோவ்ருத்தராய் இந்த திவ்ய தேசத்திற்கு அணி விளக்காய் விளங்கி வருகிறார். * ஸ்ருஷ்டஸ் த்வம் வநவாஸாயபோலே கைங்கர்யத்திற் கென்றே ஸத்தை பெற்றிருப்பவர். வையம் மன்னி வீற்றிருக்கவேணும். மணவாளமா முனிகள் ஸன்னிதி மஹாமண்டப நிர்மாணத்திற்குப் பெருமதிப்பான நன்கொடையளித்த வள்ளல் இப்பெரியார். மணவாளமாமுனிகள் ஸன்னிதி நிர்வாஹகரான ஸ்ரீஉவே. வானமாமலை திருவேங்கடாசார்ய ஸ்வாமியும், ஆழ்வார் ஸன்னிதி நிர்வாஹகரான ஸ்ரீஉவே. திருமணி ஸ்ரீநிவாஸவரதாசாரியர் ஸ்வாமியும், தர்சன துரந்தரர்களான ஸ்ரீஉவே. நல்லப்பா. ஜீயப்பங்கார், திருமலை யீச்சம்பாடி விஜயராகவாசாரியர்களும் பேரருளாளன் திருவுள்ளவுகப்புக்காக நீடூழி வாழ்க.

---

## — ஸௌமநஸ்யமும் வைமநஸ்யமும் —

நம்மாழ்வார் திருவாய்மொழியில் (6-3) விருத்தஸமுச்சயப் பதிகத்தில் **"வெல் பகையும் நட்பும் விடமு மமுதமுமாய்"** என்றருளிச் செய்தார். மானிடப் பிறவியர்க்கு நட்பும் பகையும் மாறி மாறித்தான் வரும். " உயர் நீதிபதி. கனம் திரு. அழகிரிசாமியவர்கள் 13-1-69 திருப்பாவை சாத்துமுறை கோஷ்டியில் நிகழ்த்திய உரை" என்னும் மகுடம்புனைந்தவொரு கட்டுரை ஸ்ரீராமாநுஜன் 242ல் வெளிவந்துள்ளது. அதில்—**"நம் ஸ்வாமி (P. B. A) எந்த யாரிடம் தவறு இருந்தாலும் சிறிதும் தயங்காமல் அதை யெடுத்துச் சொல்லி விடுவர். பயம் என்பதே அவரிடம் கிடையாது. அதற்குக் காரணம் அவருடைய தெளிந்த ஞானந்தான்"** என்று அப்பெரியார் பேசியிருப்பதை உலகம் கண்டிருக்கிறது. "அதற்குக் காரணம் அவருடைய தெளிந்த ஞானந்தான்" என்கிற வார்த்தை ஜட்ஜ் அவர்களின் அன்புமிகுதியாலானதென்று வைத்துக் கொள்வோம். அதற்கு முற்பட்ட வார்த்தைகள் ஸர்வாத்மநா ஸத்யம். அதனால் சிலபல பெரியார்களிடத்தில் ஸௌமநஸ்யம் மாறி வைமநஸ்யம் தோன்றியதை நிருபிக்கப் புகுந்தால் மெய்யே அதுவொரு பாரதமாகும் உயர்ந்த அறிவாளிகளாயிருந்து அவர்கள் வைமநஸ்யம் கொள்ள நேர்ந்தால் அது நீடித்திருப்பது கிடையாது. பழையபடி ஸௌமநஸ்யமே தலைசிறந்து நிற்கும். இதற்கு என்னுடைய வாழ்க்கையில் வாய்த்த பல வ்யக்திகளில் சில வியக்தி விசேஷங்களை மட்டும் இங்கு நிதர்சனமாகக் காட்ட விரும்புகிறேன். .... ... .... .... •

— (1) ராவ்ஸாஹிப், மு. ராகவையங்கார் —

**(செந்தமிழாராய்ச்சியென்னும் எனது நூல் உலகம் பரவியுள்ளது.)** சிறந்த தமிழ்ப்புலவராயிருந்த மு. ராகவையங்கார் (ராமநாதபுரம்) அவர்கள் திவ்யப்பிரபந்தங்களைப்பற்றியும் நம் ஆழ்வார்களைப்பற்றியும் சில ஆராய்ச்சிகளை மதுரைச் செந்

தமிழ்ப்பத்திரிகையில் வெளியிட்டார். அவை பெரும்பாலும் நம்முடைய ஸதாசார்ய ஸத்ஸம்ப்ரதாய ஸரணிக்குச் சேராதவையென்னு முண்மையை வெளியிடவேண்டியது அவசியமாயிற்று. அந்த ஸந்தர்ப்பத்தில் வெளிவந்தது செந்தமிழாராய்ச்சி. நான்முகன் திருவந்தாதியில் *தரித்திருந்தேனுகவே தாராகணப் போர், விரித்துரைத்த வெந்நாகத்துன்னை* என்ற பாசுரத்தின் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தை மறுக்கப் புகுந்து "வெந்நாகத்து" என்கிற பாடத்தை "என்னுகத்து", என்று ஸ்வதந்திரமாகத் திருத்திச் சில எழுதியிருந்தார். அது ஸர்வாத்மநா அஸங்கதமென்று மூதலிக்க முதன்முதலாக இறங்கினேன். அதிலிருந்து பல விஷயங்களை விமர்சிக்க நேர்ந்தது. அந்த விமர்சங்களெல்லாம் தமிழுலகில் ஸுப்ரஸித்தங்கள். ஞூ 1929ல் நான் வடதிசை யாத்திரை சென்றிருக்கையில் அந்த ராகவையங்கார் வடமதுரையில் என்னோடு ஸந்தித்து புஷ்கரம் த்வாரகை முதலான சில க்ஷேத்திரங்களை என்னோடு கூடவே ஸேவித்தார். தேவியாருடனும், சேஷாத்ரியென்கிற திருக்குமாரருடனும் யாத்திரையாக வந்திருந்தார். 10, 15 நாள் ஸஹவஸிக்க நேர்ந்தது. யாத்திரையிலும் நான் பலகாரியங்கள் வைத்துக்கொண்டிருந்தேன்; அவருமப்படியே. ஆகவே லோகாபிராமமாக இருவரும் ஸம்பாஷிக்க நாடோறும் இரண்டொருமணி காலமே கிடைக்கும். இரண்டொருநாள் வார்த்தையிலேயே அவர் பூர்வாசார்ய பக்தி தரித்ரரென்பதைத் தெரிந்துகொண்டேன். ஒவ்வொரு நாளும் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்திலிருந்து ஏதாவது பேசிக்கொண்டிருந்தார். இத்தகைய பேச்சுக்களைக் கேட்டுக்கொண்டு நான் பொறுமையோடிருப்பவனல்லேனுதலால் ஒருநாள் நேரில் சொன்னேன்—"உம்முடைய பெயர் மு. ராகவையங்காரென்று காண்கிறது; முட்டாள் ராகவையங்காரென்றே முழுமூடம் ராகவையங்காரென்றே நீரே கையெழுத்திடும்படி இந்த யாத்திரையிலேயே செய்துவிடுகிறேன்" என்றேன். ஆசார்யபக்தியே வடிவெடுத்தவளான அவரது தேவி அவரில்லாத ஸமயத்தில் வந்து 'ஸ்வாமீ! எஜமானர் பெரியார்களின் ஸ்ரீபாத தீர்த்தத்தை ஒருநாளும் பருகினவரல்லர்; என்ன துஸ்ஸஹவாஸபலனே தெரியவில்லை; என்னுடைய தகப்பனுரிடத்திலும் மாமனுரிடத்திலும் இவர் சிலநாளாவது பழகியிருந்தால் இப்படியெல்லாம் பேசவேமாட்டார்; திருப்பல்லாண்டுகூட தெரியாதிவர்க்கு; இந்த யாத்திரையில் எதிர்பாராதபடி எங்கள் பாக்யவசமாக ஸ்வாமியினுடைய சேர்க்கை ஏற்பட்டது; ஸ்வாமி எப்படியாவது எஜமானரைத் திருத்திப் பணிகொள்ளவேணும்; திருமலைநம்பி எம்பாரைத் திருத்திப்பணிகொண்டது ஸ்வாமிக்குத் தெரியாததன்றே' என்று பலவும் சொன்னுள். ஆனலும் அப்போது அவர் திருந்தவில்லை. அவர் தாம் அச்சிட்டவொரு புத்தகத்தில் ஓரிடத்தில் (புட்நோட்டில்) என் பெயரை வெகு சிறப்பாகக் குறிப்பிட்டு "இந்த ஸ்வாமியும் இப்படி திருவுள்ளம் பற்றுகிருர்" என்றெழுதியிருந்தார். [இது முகுந்தமாலை விஷயத்திலென்று நினைக்கின்றேன்.] அதை அப்போது அவர் [மு.ரா.] எடுத்துக்காட்டி 'ஸ்வாமியிடத்தில் அடியேன் மிகவும் ப்ரதிபந்நன்; சென்னையில் லெக்ஸிகனில் பணி செய்யும்போதும் ஸ்வாமியின் நூல்களை ஆதாரமாகக்கொண்டு பல விஷயங்களில் தெளிவுகாட்டியிருக்கிறேன்" என்முர்; அப்போது அவர்க்கு நான் பதில்சொன்னது, 'இந்த தோத்திரங்களினுல் அடியேன் மயங்கிவிடமாட்டேன். ஸர்வஜ்ஞர்களான பூர்வா

சார்யர்களின் ஸூக்திகளை அவமதித்து என்பால் பக்திகொண்டாலென்ன? விப்ரதிபத்தி கொண்டாலென்ன?' என்று.

அந்த யாத்திரைக்குப் பிறகு, அவர் வெளியிட்டவற்றையெல்லாம் வரவழைத்துப் பார்த்து ஒன்றையும் உபேக்ஷியாமல் அவருள்ளம் தெளிவுபெறப் பல வியாசங்களெழுதியுள்ளேன். அப்போது ஸ்ரீராமாநுஜன் தோன்றியிராமையால் அம்ருதலஹரியில் வெளியிட்டுவந்தேன். கோயிலில் வாழ்பவரும் அம்ருதலஹரி மானேஜிங் எடிடருமான ஸ்ரீ உ. வே. பண்டிதராஜ மெ. ஸுந்தராசார்ய ஸ்வாமிக்கு அந்த மு. ராகவையங்கார் தேஹாநுபந்திகளில் சேர்ந்தவர் என்பது அப்போது தெரிந்தது அந்த ஸ்வாமிக்கு இந்தக் கண்டனங்கள் அப்ரியமாயிருக்குமோ! என்றுகூடப் பாராமல், உண்மையுரையில் ஒருவர்க்கும் அஞ்சவேண்டியதில்லையென்கிற அத்யவஸாயத்துடன் கடமையைச் செலுத்திவந்தேன் இதன் முடிவைத் தெரிவிக்கவேணுமே; அவர் சரமகதிக்கு முன்பு சிலகாலம் திருவனந்தபுரத்தில் யூனிவர்ஸிடியில் பணியாற்றிவந்தார். அப்போது நான் பல அன்பர்களுடன் மலைநாட்டுத் திருப்பதி யாத்திரை புறப்பட்டு அவ்விடம் சென்றேன். நாலைந்துநாள் அங்கிருந்து ஸன்னிதியில் உபந்யாஸங்கள் நடத்தினேன். அவரும் (மு ரா.) கூடவிருந்து களித்து முடிவில் தேவியாருடனேயெழுந்து அங்கிருந்த வைதிகர்களை கனம் சொல்லச்செய்து தம்முடைய ஸம்பாவனையாக ரூ. 1 ய்ம் சால்வையுமளித்துப் பலரறியப் பேசினவை பத்ரிகைகளில் ப்ரஸித்தமானவை. ... ... *

(2) திருவயிந்திரபுரம், சேட்லூர் நரஸிம்ஹாசாரியர்

(3) R. V. கிருஷ்ணமாசாரியர், குடந்தை.

(4) A. V. கோபாலாசாரியர், திருச்சி.

இங்குக் குறித்த மூவரும் சிறந்த வித்வான்களாயும் ப்ரதிஷ்டிதர்களாயும் விளங்கினவர்கள். இவர்களுள் R V. கிருஷ்ணமாசாரியார் அத்விதீய வித்வான். A. V. கோபாலாசாரியர் வேதாந்த வித்யாநிதி யென்று விருது பெற்றவர். சேட்லூர் நரஸிம்ஹாசாரியர் "பகவத் விஷயம்" என்று டைடல் பெற்றவர். இம்மூவரும் அடியேனுக்கு இளமையிலிருந்தே பரமஸ்நிக்தர்களாயிருந்தவர்கள். ' சைத்யம் ஹி யத் ஸா ப்ரக்ருதிர் ஜலஸ்ய என்னப்பெற்ற தண்ணீரும் ஔபாதிகமாகத் தன்னுடைய தன்மை தவிரக் காண்கிறோமன்றோ? அதே ரீதியில் இம்மூவர்க்கும் விபர்யயம் விளைந்தது. அதுவொரு வியப்பான ஸம்பவமே. ப்ரஹ்லாதாழ்வானும் ஒருகால் எம்பெருமானோடு எதிரம்புநோக்கநேர்ந்ததென்று நூல்களில் வாசிக்கிறோம். அதனை உண்மையென்று யாரும் நம்பார். நன்கு நம்பும்படி பண்ணி விட்டார்கள் இம்மூவரும். இவர்களுக்காக மட்டும் மறுப்புரைகளெழுதி யச்சிட இரண்டாயிரம் ரூபா வரையில் செலவு செய்ய நேர்ந்து விட்டது. பிறகு மூவரும் அநுதாப பத்ரிகைகள் விடுத்து " தானும் யானுமெல்லாம் தன்னுள்ளே கலந்தொழிந்தோம், தேனும் பாலும் நெய்யுங் கன்னலு மமுது மொத்தே " என்னும்படியான விருத்தாந்த விசேஷங்கள் உலகப் பிரசித்தம். எல்லாம் ஏடேறிக்கிடப்பனவாதலால் சிறு பிராயத்தவர்களுக்கு மட்டும் இவை அபூர்வச்ரவணமாயிருக்கும். R. V. கிருஷ்ணமாசாரியர்

ஸ்வாமி மட்டும் அக்காலத்தில் திருக்குடந்தையிலிருந்து வெளி வந்து கொண்டிருந்த ஆர்யதர்ம பத்ரிகையில் மிகுந்த அநுதாபத்துடன் தமது ப்ரேமப்ரவாஹங்களைப் பிரசுரஞ் செய்தார், மற்றை யிருவரும் "ஏழைமை யாற்றவும் பட்டோம் இனி யென்றும் பொய்கைக்கு வாரோம்" என்ற கோபிகளை யநுகரித்து "இனியென்றும் உம் ஜோலிக்கு வாரோம்" என்று உலகறிய வெழுதி ஓய்ந்தவர்கள். .... •

## — மதபேதங்களில் அடியேனுடைய ப்ரதிபத்தி —

திருவிருத்தத்தில் *வணங்குந் துறைகள் பலபலவாக்கி மதிவிகற்பால் பிணங்குஞ்சமயம் பலபலவாக்கி * என்று ஆழ்வாரருளிச் செய்திருப்பதை அடியேன் இளமையிலேயே ஊன்றி நோக்கினவன். உலகில் மதபேதங்கள் இல்லாமலிருக்க முடியாது. உலகுக்கெல்லாம் பாஷை ஒன்றேயாகவுள்ளதோ? இல்லையே. ஒரு க்ராமத்துக்குள்ளேயே ஒன்பது பாஷைகள் நடையாடக் காணுநின்றோமன்றோ? அப்படியே பலபல மதங்கள் தோன்றியிருப்பதும் ஸஹஜமே. ப்ராஹ்மணஸமுதாயத்தில் ஊர்த்வபுண்ட்ரதாரிகளை யெடுத்துக்கொள்வோம். புண்ட்ர உபாதான த்ரவ்யத்தில் எத்தனை பேதங்கள்? புண்ட்ராகார ஸந்நிவேசத்தில் எத்தனைபேதங்கள்? இவை இன்று நேற்று ஏற்பட்டவையா? சந்திரஸூர்யாதிகளோடு கூடவே இவையும் தோன்றியவை யென்பதை யாரேனும் மறுக்கமுடியுமா? இதை அடியேன் நன்கு உணர்ந்தவன். ஆகவே எந்த மதத்திலும் எந்தபுண்ட்ரத்திலும் அடியேன் வெறுப்போ பகையோ கொண்டவனல்லேன். கொள்பவர்கள் அவிவேகிகளே யாவர். நமது பூருவாசாரியர்கள் ஆதரித்திருந்த புண்ட்ராகாரம் எது? விசிஷ்ய வேதாந்ததேசிகன் அணிந்துகொண்டிருந்த புண்ட்ராகாரம் எது? என்பதைமட்டும் அடியேன் விமர்சிப்பவனாதலால் அந்த விமர்சங்களை வெளியிடுவது கொண்டு அடியேனை மத்ஸர க்ரஸ்தனாகச் சிலர் எண்ணுவது தகுதியற்றது.

ஸம்ப்ரதாயார்த்தங்களில் தேசிகனுக்கு அபிமதமல்லாதவற்றை அவர்க்கு அபிமதமாக ஏறிட்டு, தேசிக ஸம்ப்ரதாயமென்றும், தேசிகதர்சனமென்றும் புதுப் பெயர்களைப் புனைந்து சிலர் ப்ரசாரம் செய்துவருவதும் மிகத் தவறு என்னுங் கொள்கையை அடியேன் சிக்கெனக் கொண்டவன். இதுகாறும் அடியேனெழுதி வெளியிட்டுள்ள எண்ணூறு நூல்களில் நூற்றுக்கு மேற்பட்டவை இந்த விசாரத்திலேயே பரந்திருக்கின்றன. இருநூறு வருடங்களுக்கு உட்பட்ட காலத்திலேயே தேசிக ஸம்பந்தத்தை வலிந்து நலிந்து ஏறிட்டுக்கொண்டவர்கள் ஏற்கெனவே தாங்கள் கொண்டிருந்த கொள்கைகளை தேசிகனுடையவையாக ப்ரசாரம் செய்துவருகிறார்களென்பதை அடியேன் சோம்பாமல் பலநூல்களால் நிரூபித்து வருகிறேனென்பதையும், பிறர் இதை மறுக்க நெஞ்சாலும் நினைக்ககில்லாமல் வாளா இருந்து வருகிறார்களென்பதையும் உலகமுழுது முணர்ந்திருக்கின்றது. அடியேன் எதையும் ஆதாரமின்றி ஆக்ரஹத்தா லெழுதபவனல்லேன். "வாய்த்திறக்கவுண்டோவழி" என்று பல பெரியார்கள் துணிந்து எழுதியுள்ளபடியேதான் ஒவ்வொன்றையு மெழுதியிருக்கிறேன், எழுதிவருகிறேன்.

சிலர் இலேசாக மறுப்புக் கூறிவிடுவதுண்டு; (அதாவது) "இவர் (P.B.A.) ஏற்கெனவே சிலபலவாண்டுகளுக்கு முன்பு தாம் இசைந்திருந்தவற்றையும் ஏதோ பிடிவாதங்கொண்டு தாமே மறுக்கிறார்; தன்னைத்தானே கண்டித்துக் கொள்ளு கிறார்" என்று. இதைப்பற்றி நான் பலகால் விரிவான விடைகள் விடுத்திருந்தாலும் இப்போது இங்குச் சுருக்கமாகத் தெரிவிப்போம்.

— சில விமர்சங்கள் தோன்ற உண்மைக்காரணம் நிரூபித்தல் —

"நமக்கு உபதேசரத்தினமாலை யிருப்பதுபோல் அவர்களுக்குப் பிரபந்தசாரம்; நமக்கு ஸ்ரீசைலேசதயாபாத்ர மிருப்பதுபோல் அவர்களுக்கு ராமாநுஜதயாபாத்ரம்; ................." என்றிங்ஙனேதான் நெடுநாள் நினைத்திருந்தேன். இப்போதும் இங்ஙனே பலர் நினைத்திருப்பதுண்டே. ஹரிதிந திலகம் தேசிகன் ஸாதித்தது—என்று எத்தனை வடகலை வித்வான்கள் எத்தனை வருஷகாலமாக எண்ணியிருந்தனர் தெரியுமோ? யார்க்கும் எதிலும் ப்ரமம் நீங்குவதற்கு ஒரு காலவிசேஷமோ ஹேது விசேஷமோ உண்டாகிறதன்றோ. அதுநிற்க. திடீரென்று ஒருஸமயம் *ராமாநுஜ தயாபாத்ரத் தனியன்தோன்றி அறுநூறுவருடமாயிற்றென்று ராமாநுஜதயாபாத் ரோத்ஸவமென்று இங்கே கொண்டாடத் தொடங்கினார்கள். அப்போதுதான் விமர்ச முதிக்க அவகாசமேற்பட்டது ஸ்வாமிக்கு ஸ்ரீமாந்வேங்கடநாதார்ய: என்கிற தனியன் பரம கம்பீரமாயும் எஞ்ஞான்று மெங்கும் சிறப்புப் பெற்றதாயும் விளங்காநிற்க அதை உபேக்ஷித்து, அவதாரஸ்தலத்திலுங்கூட வாயால் சொன்னாலும் தண்டனை, நெஞ்சால் நினைத்தாலுங்கூட தண்டனை என்னநின்றவொரு ச்லோகத்திற்கு உத் ஸவம் என்றால் இதைப்பற்றி விவேகிகளுக்கு விமர்சம் விளையாமலிருக்க முடியுமா? தனியனுக்கு உத்ஸவம் என்பதே விசித்திரம்; அதிலும் தோன்றின நாள் முதல் பங்கப்பட்டே வருகின்றவொரு தனியனுக்கு உத்ஸவமென்றால் ஈச்வரன் கொடுத்த விவேகசக்தியை யுடையவன் விவேகியாமலிருக்க முடியுமா? க்ருஹிணியாக வந்த நாள்முதல் ஸ்வைரிணியென்று ஒதுக்கப்பட்டிருந்த வொருத்தியை ஒருநாள் திடீரென்று பல்லக்கிலேற்றி வீதிவலம் வருவித்தால் விசாரம் தோன்றாமலிருக்குமா வென்று பாருங்கள்

*ஸ்ரீமான்வேங்கடதனியனுக்கு உத்ஸவமென்றால் ஒருவாறு இசைந்திருக்கும். அதை தேசிகனுடைய அவதார ஸ்தலத்திலேயே அவருடைய திருமுன்பே நடத்த வுங்கூடும். அதைவிட்டு, அஸக்ருத்ப்ராப்தபாதுகாஸஹஸ்ரபஹுமானத்தனியனுக்கு உத்ஸவமென்பதும், அதுதானும் புதிதாகக் கட்டினவொரு க்ருஹத்திலென்பதும் எவ்வளவோ விமர்சத்தை யுண்டாக்காதா? உண்டான விமர்சத்தை சதச: ஸஹஸ்ரச: வெளியிட்டேன். "கீழ்நாட்களில் ஒப்புக்கொண்டிருந்து இப்போதாக மறுக்கிறாரிவர்" என்று சொல்லிவிட்டால் இது ஸமாதானமாகுமோ?

— ஸ்ரீகோஷ்டீபுரம் ஸ்வாமியின் விலையுயர்ந்த வார்த்தை —

அக்காலத்தில் ஸ்ரீமத் திருக்கோட்டியூர் ஸௌம்ய நாராயணாசார்ய ஸ்வாமி காஞ்சியில் ஸ்திரவாஸமாக எழுந்தருளியிருக்கிறார். ஸ்ரீமத் பரம. இஞ்சிமேட்டு ஸ்வாமிபோலவே இவரும் விஷயங்களை கோபதாபமில்லாமல் கேட்பதும் சொல்லு வதுமாயிருந்த படியால் என்னுடைய விமர்சங்களையெல்லாம் அவரிடம் ஸமர்ப்

பித்தேன். முழுதும் கடாக்ஷித்துவிட்டு ஸாதித்தது இவ்வளவே; ஏதோ வொரு பத்ததி நடந்து வந்ததென்பதும் இடையில் மாறுபாடு நேர்ந்ததென்பதும் வாஸ்தவம். இதுவும் ஏறக்குறைய நூறுவருஷ காலமாக நடந்து வருகிறதென் பதை தேவரீரும் இசைந்திருக்கிறது. எங்களுக்கு ப்ரவேசமுள்ள சில கோவில் களிலும் மடங்களிலும் ஒருவிதமான வழக்கம் வந்துவிட்டது; தேவரீருடைய விமர்சத்தைக்கண்டு இதையெல்லாம் மாற்றிக் கொள்வதென்பது ஸாத்யமா? உங்களுடைய பத்ததியை இனி நாங்கள் பரிக்ரஹிக்க முடியுமா? ஒருவிதமாக வந்துகொண்டிருக்கிற ஆசாரத்தை நாங்கள்தான் விடமுடியுமா? விட்டால் ஸ்மார்த்த மாத்வாதிகளைப் போலே மணியை ஆட்டிக் கொண்டுதானே யிருக்க வேண்டும் ஏதோ பகவத் ஸங்கல்பத்தினால் நடந்து வருகிற லீலைகள் என்றிருக்க வேண்டியது. நியாயாலய வியவஹாரங்களுக்கு இடமளித்தது அநீதியே—இத்யாதி. இது ப்ராமாணிகமும் ஸாத்விகமுமான வார்த்தையென்று உகந்தேன். ... •

## — அடியேனுடைய நூல்களைப்பற்றி —

இதுகாறும் அடியேனெழுதி வெளியிட்டிருக்கிற நூல்களுக்குப் பதின்மூன்று துறைகள் வகுத்திருப்பது ப்ரஸித்தம். அவற்றுள் பரபக்ஷப்ரதி க்ஷேபத்துறை யென்பது ஒன்று. அதாவது இதரர்களுடைய வாதங்களைக் கண்டித்தெழுதிய பாகம். இதைப்பற்றி இந்நூலில் ஸாரமாகச் சிலவிஷயங்கள் தெரிவிக்க விரும்புகிறேன். ஒரு ஸமயம் எழுதியிருக்கிறேன்—"வம்புச் சண்டைக்குப் போகமாட்டேன், வந்த சண்டையை விடமாட்டேன்" என்று. இந்தத் தன்சரிதைச் சுருக்கத்தில் (பக்கம் 23ல்) "திருக்குடந்தையில் விவாதத் தொடக்கம்" என்று தொடங்கி இரண்டரைபக்கம் எழுதியிருப்பதை ஸஹ்ருதயர்கள் மீண்டு மொருமுறை வாசித்துப் பார்ப்பது. அந்த உபக்ரம முஹூர்த்தத்தின் வன்மையை எம்பெருமானே அறியவேணும். அதிலிருந்து விவாத க்ரந்த லேகனங்கள் தொடர்ந்து கொண்டே வருகின்றன. எடுத்துக்கொண்ட இவ்விஷயத்தை ஆப்தர்களும் அநாப்தர்களும் அடியே தொட்டுத் தெரிந்து கொள்ளவேண்டியது ஆவச்யகமென்றெண்ணிச் சிறிதுவிவரிக்கிறேன்.

## — காஞ்சீபுரம். சாமா - திருமலை தாதாசாரியர் —

இவர் மாதாமஹஜீயர் ஸ்வாமியின் அந்தேவாஸிகளில் ஒருவர். தலைவர் என்றுஞ் சொல்லலாம். சடகோப நிலயமென்கிறகோவில் பாடசாலையில் நான் வித்யார்த்தியாகச் சென்றபோது சிலமாதங்கள் இவரிடத்திலும் வித்யார்த்தியாக இருக்க நேர்ந்தது. இவர் அங்குள்ள பெரியோர்களோடு பேசுவதெல்லாம் பெரும் பாலும் கலாபேதவைஷய்ய விஷயமாகவே யிருக்கும். பாம்பேயில் ப்ரஸித்தமான நிர்ணயஸாகர அச்சுக்கூடத்திலிருந்து காவ்யமாலா ஸீரீஸ் பலவாண்டுகள் வெளி வந்து கொண்டிருந்ததைப் பண்டித வுலகம் மறந்திராது. அந்த மாலையில் பாதுகா ஸஹஸ்ரம் வியாக்கியானத்தோடு வெளியிடப்பட்டது. அதற்கு இந்தத் திருமலை தாதாசாரியர் ஒரு பூமிகையை யெழுதி யனுப்பி ஸதுபாயத்தினால் அதை அத்தோடு சேர்த்து வெளியிடுவித்தார். அதில் தென்னாசார்ய தூஷணைகள் மலிந்திருக்

கின்றன. அப்புத்தகம் இற்றைக்கும் பலரிடமுள்ளதே. அந்த பூமிகையை நானும் பார்க்க நேர்ந்தது. உண்மைக்கு மாருக எழுதப்படும் விஷயம் எதுவானுலும் என் கண்ணில் பட்டுவிட்டால் "பாறிப் பாறியசுரர்தம் பல்குழாங்கள் நீறேழ்" என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தின்படியாகு மென்பதை இந்நிலவுலகில் தெரிந்து கொள் ளாதார் ஆருமில்லை. அந்த பாதுகா ஸஹஸ்ர பூமிகைக்கு ப்ரத்யக்ஷரகண்டன மாக 'பாதுகாஸஹஸ்ராவதாரத்வம்' என்கிற நூலை வடமொழியில் எழுதி அத்துடன் தமிழ்மொழி பெயர்ப்பையும் சேர்ந்து அச்சிட்டு வெளியிட்டேன்.

### — வடகலை வித்வான்களின் வஞ்சனைச் செயல்கள் —

வடகலை வித்வான்களுக்கும் அடியேனுக்கும் தோன்றிய பலவகைப்பட்ட விவாதங்களுக்குப் பாதுகாஸஹஸ்ராவதார விஷயமான விவாதமே மூலகந்த மானது. இதிலிருந்தே சாகோபசாகமாகப் பல விவாதங்கள் வளர்ந்தன. தேசிகன் பாதுகாஸஹஸ்ரம் பணித்தற்குக் காரணத்தை முன்னோர்கள் உள்ளபடி யெழுதி வைத்திருக்கச் செய்தேயும் வீணாகத் தென்னுசாரியர்களைப் பழிப்பதையே முக்கிய மான குறிக்கோளாகக் கொண்டு, தேசிக சரித்திரமெழுதுவதாக ஒரு வியாஜமிட்டுக் கிளர்ந்து கைபோனபடியும் மனம்போனபடியும் எழுதிக்கொண்டிருந்தார்கள். அழகிய மணவாளப்பெருமாள் நாயனுரென்னுமாசாரியர் தேசிகனுடைய பெருமை யைப் பொறுக்கமாட்டாமல் அவரோடே போட்டியிட்டுச் சண்டையிட்டதாகவும் அவரை வெல்வதற்காக ஓரிரவில் ஒருயாமத்தில் பாதுகாஸஹஸ்ரமிட்டதாக வொருவர் எழுதுவது, வாதிகேஸரி அழகியமணவாளச்சீயரென்பவர் சண்டை யிட்டதாகவும் அவரை வெல்வதற்காகப் பாதுகாஸஹஸ்ரமிட்டதாக மற்ருெருவர்.... ...........இப்படி தங்களைத் தாங்களே கண்டனம் செய்துகொண்டு "த்டியெடுத்தவ னெல்லாம் வேட்டைக்காரன்" என்னும்படி எழுதிக்கொண்டிருந்தார்கள். ஒவ் வொருவரும் உண்மையுணர்ந்துங்கூட ஸதாசாரியர்களை தூஷிக்கவேண்டியதற் காகவே இதுபோன்ற வீண் சர்ச்சைகளை வளர்த்திக்கொண்டிருந்தார்கள். இதில் தலையிட்டு பங்கப்படாத வித்வான் ஒருவருமில்லை.

.... ... *

### — ஸ்ரீமதுபயவே. D. ராமஸ்வாமி ஐயங்காரின் கட்டுரைகள் —

இச் சிறுநூலில் கீழே (பக்கம் 48ல்) "ஸ்ரீமான் D. ராமஸ்வாமி ஐயங்கார் கண்டறிந்த தத்துவம்" என்ற மகுடத்தின்கீழ் அப்பெரியார் கண்டறிந்த தத்துவத் தைத் தெரிவித்துவிட்டு, "இவரைப்பற்றி மேலே விரிவாகத் தெரிவிப்பேன்" என் றெழுதிவிட்டிருக்கிறேன். இவர் மிகச்சிறநத பெரியார். இவரிடத்தில் ஹ்ருதய பூர்வகமான மதிப்புடையே னடியேன். இவர்க்கு "ஸஹ்ருதய ரஸிகமணி" என்கிற விருதும் சூட்டியிருக்கிறேன். அடியேனுடைய வாத விவாத நூல் வளர்ச் சிக்கு இவரும் (அல்லது) இவரே பிஜபூதர் என்னவேண்டியிருக்கிறது இதைச் சிறிது விவரிக்கிறேன். முன்னம் ப்ரஸ்தாவித்த சாமா திருமலை தாதாசாரியர் தொடங்கியிருந்த தென்னுசார்ய தூஷணையை இந்த D R பெரியவரே மிகமிக வளர்த்தினவர். இவர் தாம் மூலாதாரமொன்றுமின்றியே தாந்தோன்றியாக எழுதத் தொடங்கின தேசிக சரித்திரத்தில் அப்பப்ப! அய்யய்ய! எவ்வளவு தென்னுசார்ய தூஷணை! விவேகியாயும் அட்வொகேட்டாயு மிருக்கிற வொருவர் இப்படி ஸதா சார்ய தூஷணைகளுக்கென்றே தீக்ஷைகொண்டிருப்பது மிக வெறுக்கத் தக்க தல்லவா! என்னுடைய வாழ்நாளில் இனி இந்த D R பெரியாரைப்பற்றி யெழுது வதில்லையென்று பிரதிஜ்ஞை செய்துகொண்டு முடிவாகச் சில எழுதி முற்றுப்புள்ளி யிடுகிறேன். அதை மேலே அநுபந்தத்தில் காண்பது.

... ... •

## — அடியேனுடல்நிலை யுணர்த்துதல் —

உதாஸீனர்கள், ஆப்தர்கள், பரமாப்தர்கள் என மூன்று வகுப்பினருளரே. ஸ்ரீராமாநுஜனைப் பெற்று வாசிப்பவர்களையெல்லாம் அடியேன் பரமாப்தர்களாகவே கருதியிருப்பவன். அன்னவர்கள் பலர் அடிக்கடி என் உடல்நிலையைப்பற்றிக் கவலைகொண்டு விசாரிப்பவர்களாயிருப்பதால் ஒவ்வொருவர்க்கும் பதில் கடிதம் தனித்தனி விடுக்க முடியாமல் அனைவருமறிந்துகொள்ள விஜ்ஞாபிக்கிறேனிங்கு. 21-2-1964 என்னுந் தேதியைப் பலர் நினைவில் கொண்டுள்ளார்கள். அன்று தான் அடியேனுக்கு ஹ்ருதய கோசக் கோளாறு ஏற்படத் தொடங்கிய நாள். உயிர்ப்பிச்சை பெற்ற நாளுமதுவே. உடலில் வியாதியொன்றுமில்லை. அன்று முதலாகவே அளவுகடந்த அசக்தி விளைந்தது. மருத்துவர்களின் பலவகைக் கட்டளைகளுக்கு உட்பட நேர்ந்தது. படியேறி யிறங்கக்கூடாதென்பது முதற் கட்டளை. அதனால் க்ருஹவாஸத்தைவிட்டு (ஸ்வகீய) வித்யாபவனத்தைச் சேர்ந்த ராமாநுஜகூடத்தில் வாஸத்தை ஏற்றுக்கொள்ள நேர்ந்தது. ஒருவகையில் இது இனிதாகவேயாயிற்று. இங்ஙனே ஆறு ஸம்வத்ஸரங்கள் கடந்துவிட்டன, சென்னையில் வாரந்தோறும் இரண்டுநாள் (1931ஆு முதலாக) நடத்தப்பட்டு வந்த உபந்யாஸங்களை நிறுத்திக்கொள்ள நேர்ந்தது. மார்கழியுபந்யாஸம்போன்ற நைமித்திகோபந்யாஸங்கள் தவிர்க்கமுடியாமல் ஏதோ நடத்தப்பட்டு வருகின்றன. நாற்பத்தேழு ஸம்வத்ஸரகாலம் அவிச்சின்னமாக நடத்தப்பட்டுவந்த நித்யப்ர பாதத் திருவீதி வேதபாராயண கோஷ்டியையும் அவிச்சின்னமாக நடத்தமுடியாத நிலைமை ஏற்பட்டிருக்கிறது.

உபந்யாஸார்த்தமாக வெளியூர்ப்பயணங்களை அறவே நிறுத்தியிருந்தும் சில சமயங்களில் அவர்ஜநீயமாக ப்ராப்தமாய்விடுவது பகவத் ஸங்கல்பாதீனமத் தனை. மூன்று வருஷகாலம் வெளியூர்ப் பயணத்தை நெஞ்சால் நினைக்கவு மாகாதபடி அசக்தி மிக்கிருந்தது. அதன்பிறகு ஸமய விசேஷங்களில் நிர்ப்பந்தவ சாத் நிஜாமாபாத், ஹைதராபாத், ஸகிந்தராபாத், பெங்களூர் என்றிப்படி சில நகரங்களுக்குச் சென்றுவரவும் நேர்ந்துவிட்டது. ப்ருந்தாவனம் டில்லி ஹரித்வாரம் முதலிய நெடுந்தூரதேசப் பயணமும் சென்றவாண்டில் ப்ராப்தமாய்விட்டது. ஒவ்வொரு ஸமயத்திலும் "நம்முடைய வாழ்நாளில் இதுதான் கடைசிப் பயணம்" என்று நினைத்துக்கொள்வேன். "அந்யோஹி அயந்யச் சிந்தயதி ஸ்வச்சந்தம் விததாம்யஹம்" என்று துணிந்து கூறியுள்ள எம்பெருமானுடைய திருவுள்ளத்தை யாரேயறிவார். ஏதோ நல்லபடியாகவே காலம் கடந்துவருகின்றது.

ஸமீபகாலத்தில் திருவரங்கம் பெரியகோயிலில் நேற்றைய தக்ஷிணாயனத்தி லும், திருவல்லிக்கேணியில் கடந்தவாரத்திலும் நிகழ்ந்த உபந்யாஸமாலைகள் உள்ளங் குளிர நின்றன. அடியேனுடைய வாழ்நாளில் ஸ்ரீரங்கம் விடைகொண்டு ஸேவித்தது எண்பது பர்யாயமாகும். விடைகொள்ளும் போதெல்லாம் ப்ரவசனமென்கிற ப்ரஜல்பனம் நடந்தே தீரும். இப்போது கடைசியாகச் சென்ற ஸமயத்தில் ஆறு நாள் உபந்யாஸங்கள் அடைவே நடைபெற்றன. இவ்வுபந்யாஸ கோஷ்டியை மிகுந்த ச்ரத்தையுடனும் தகுந்த வ்யவஸ்தைகளுடனும் நடத்திவைத்தவர்— ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன பத்ராதிபரும் புத்தூர் வக்கீல்ஸ்வாமியென்று ப்ரஸித்தரு மான ஸ்ரீமதுபயவே. S கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமியாவர். அவர்தாமே தமது ஸுதர்சன பத்ரிகையின் 23—1. இதழில் எழுதிப் பிரசுரம் செய்திருந்ததை இதன் கீழே தருகிறேன்; ஏற்கெனவே ஸ்ரீராமாநுஜனில் வெளிவந்ததேயிது.

## — "ஸ்ரீரங்கம் ஸபையில் உபந்யாஸங்கள்" —

(ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன பத்ரிகை வெளியிட்டது.)

சென்ற இதழ்களில் அறிவித்தபடி ஸ்ரீரங்கம் மேலச்சித்திரை வீதி (நிர் 65) பாரதீய பூர்வசிக ஸ்ரீவைஷ்ணவ சபா கிருஹத்தின் ஆதரவில் ஸ்ரீகாஞ்சீ மஹா வித்வான் ஸ்ரீ உ. வே. ப்ர. ப. அண்ணங்கராசார்ய ஸ்வாமி அவர்களால் 9-12-69



முதல் 14—12—69 ஈருக ஆறு நாட்களில் இரவு 7-30 முதல் பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளின் அனுபவபரீவாஹரூபமான உபந்யாஸங்கள் நிகழ்த்தப் பெற்றன. முதல் நாள் "பக்தாம்ருதம்" என்னும் ச்லோகத்தில் நாதமுனிகள் ஆழ்வாரையும், திருவாய்மொழியையும் அனுபவித்திருக்கும் ப்ரகாரமும், இரண்டாவது நாள் ஸ்தோத்ரரத்னத்தில் ஆளவந்தார் ஆழ்வார்களை அடியொற்றியிருக்கும் ப்ரகாரமும். மூன்ருவது நாலாவது நாட்களில் எம்பெருமானுர் தமது திவ்யக்ரந்தங்கள் அனைத்திலும் நம்மாழ்வாரை அடியொற்றியிருக்கும்படியும், ஐந்தாவது நாளில் ஆழ்வானும். பட்டரும் திவ்யப்ரபந்தப் பெருங்கடலில் குடைந்தாடியிருக்கும் பெற்றியும் விரிவாக ஸ்வாமியால் அநுபவிக்கப் பெற்றன. ஆருவது நாள் மணவாள மாமுனிகளின் வைபவம் பரக்க உபந்யஸிக்கப் பெற்றது. ஆழ்வார்களுடையவும். ஆசார்யர்களுடையவும் திவ்யஸூக்திகள் ஸ்வாமிக்கு வாசோவிதேயமாயிருக்கிறபடியால் உபந்யாஸங்கள் கடல் மடை திறந்தாற்போலே ச்ரோதாக்களை ஸ்ரீஸூக்த்யம்ருத ஸாரக் கடலிலே திளைக்கவைத்தன. ஒவ்வொரு நாளும் இரவு பத்து மணிக்கு மேலும் பரந்து சென்ற உபந்யாஸங்களை ஸ்வாமியின் திருமேனி பாங்கைக் கருத்தில் கொண்டு அன்பர்கள் பலகால் நினைவுறுத்தி நிறுத்தவேண்டியிருந்தது. எம்பெருமானுர் ஆழ்வார்களோடு ஸம்பந்தமில்லாதவர் என்று சிலர்

அவிசாரிதரமணீயமாகக் கூறுவது மூன்ருவது நாலாவது உபந்யாஸங்களில் அடியோடு தகர்க்கப்பட்டது. மாமுனிகளின் ஆருவது நூற்ருண்டையொட்டியமைக்கப்பெற்ற இவ்வுபந்யாஸத் தொடரின் கடைசியுபந்யாஸம் ஸ்ரீசைலேசத் தனியனின் அபூர்வார்த்தங்களையும் மாமுனிகளின் வைபவத்தையும் விரிவாக விளக்குவதாய் உபந்யாஸங்களுக்கெல்லாம் சிகரமாய் அமைந்தது. அன்று, பூர்வாசார்ய க்ரந்த ப்ரகாசந கைங்கர்யத்திற்காக ஸ்வாமியிடம் ஸ்ரீரங்கம் திருச்சி மஹாஜனங்களின் கிஞ்சித்காரமாகப் பொற்கிழியொன்று அளிக்கப்பட்டது. எங்களாழ்வானுடைய ஸ்ரீவிஷ்ணுசித்தீயமென்னும் ஸ்ரீவிஷ்ணுபுராண வ்யாக்யானத்தை உடனடியாக அச்சிடத் தொடங்குவதாக நிச்சயிக்கப்பட்டது. இதற்கு சென்னையிலிருக்கும் Dr. ஸம்பத் அவர்கள் ஓர் கணிசமான தொகை அளிக்க முன்வந்துள்ளார். இவ்வண்ணமாகவே நிதி வசதி படைத்த ஆஸ்திகர்கள் அனைவரும் எவ்வளவு இயலுமோ அவ்வளவு தொகையை ஸ்வாமிக்கு அனுப்பி, வருகிற ஐப்பசித் திருமூலத்திற்குள் துர்லபமான ஆசார்யக்ரந்தங்கள் அனைத்தையும் அச்சேற்றுவதற்கு ஸ்வாமியை மேன்மேலும் உத்ஸாஹப்படுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிருேம்.'



அடியேன் P.B.A. செய்யும் விண்ணப்பம், மேலே ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஸுதர்சன பத்ராதிப ஸ்வாமியின் பெருமுயற்சியினுல், தற்காலம் நாம் மேற்கொண்டிருக்கும் பூர்வாசார்ய க்ரந்த ப்ரகாசன கைங்கரியத்திற்கு எண்ணூறு ரூபாயும், கீர்த்திமூர்த்தியான சிங்கமையங்கார் ஸ்வாமியின் தென்னாசாரிய உபய வேதபாடசாலையில் ஒரு நாள் உபந்யாஸத்தின் மூலமாக 125 ரூபாயும் ப்ராப்தமாயிற்று. சென்னையில்வாழும் ஸ்ரீ உ.வே. Dr. ஸம்பத்ஸ்வாமி ஆயிரம் ரூபாய் அளிக்கத் திருவுள்ளம்பற்றி 500 ரூபாய் அட்வான்ஸாக அளித்தருளி மஹோத்ஸாஹத்தை ஊட்டியுள்ளார் P.B.A.

— திருவல்லிக்கேணியில் ஸ்ரீராமநவமி யுபந்யாஸ விசேஷங்கள் —

ஆண்டுதோறும் ஸ்ரீராமநவமி ஸந்தர்ப்பத்தில் பத்தெட்டு நாட்கள் ஸ்ரீராமாய ணோபந்யாஸங்கள் நடத்த ஆப்தர்களின் கோரிக்கைக்கிணங்க ப்ராப்தமாவதுண்டு. 22—2—1964 என்று தேதி குறிப்பிட்டுக் கீழே தெரிவித்த அஸ்வாஸ்த்ய ஸம்பவம் முதலாக இதை அறவே நிறுத்திக்கொண்டாயிற்று. கோருகின்றவர்கள் தாங்களும் விரக்தியடைந்து விட்டார்கள். அப்படியிருந்தும், இவ்வாண்டு ஸ்ரீராம நவமி மஹோத்ஸவக் கொண்டாட்டம் திருவல்லிக்கேணியில் 6—4—70 தேதியி லிருந்து 16—4—70 தேதியளவும் ஸ்ரீராம ஸமாஜ ஸபையாரால் இதுகாறும் எங்கும் கண்டுங் கேட்டுமிராத முறையில் பலவகை நிகழ்ச்சிகளோடு லோக விலக்ஷ ணமாக ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அந்த நிகழ்ச்சிகளில் அடியேனுடைய ஸ்ரீராமாயணோபந்யாஸ நிகழ்ச்சியுமொன்றுயிருந்து நடந்து இனிது தலைக்கட்டிற்று. இடையில் உடல் நலக்குறைவினால் இரண்டு நாள் தடை படவும் நேரிட்டது. அதுவும் மங்களாசாஸன பீஜமென்று கருதப்பட்டது. இந்நிகழ்ச்சிகள்பற்றிப் பல மஹான்கள் கட்டுரைகள் எழுதியனுப்பிப் பிரசுரிக்கக் கோரியுள்ளார்கள். ஆயினும் ஆப்தர்களிருவருடைய கட்டுரை மட்டுமே ஈண்டு ப்ரசுரிக்கப்படுகிறது. அதற்கு முன்னே பங்குனி விசாக நிகழ்ச்சியின் சார்பாகக் கிடைத்த இரண்டு அன்புரைகள் பிரசுரிக்கப்படுகின்றன. அவற்றை அடுத்தபடி காண்க. .... ... *

# ஸம்பந்த ஜ்ஞான ஸம்ப்ரம ஸம்மோதம்

ஸ்ரீஸூக்தி ரத்நாகரம்—ஸ்ரீமதுபயவே. இளையவில்லி. சடகோபாசார்யர்.

(ஸௌம்ய மீன விசாகத்தன்று திருமாளிகையில் உபந்யஸித்தது)

மணவாள மாமுனிகள் "உண்டோ வைகாசி விசாகத்துக் கொப்பொருநாள்" என்று, பிரபன்ன ஜனகூடஸ்தராய்த் திகழ்ந்த நம்மாழ்வார் திருவவதாரம் செய் தருளிய திருவைகாசித் திருநன்னாளைக் கொண்டாடினார் உபதேசரத்தினமாலையில். அதுதன்னிலேயே "ஆழ்வார்கள் தாங்கள் அவதரித்த நாள்களிலும் வாழ்வான நாள் நமக்கு மண்ணுலகீர்! ஏழ்பாருமுய்ய எதிராசருதித்தருளும் சித்திரையில் செய்ய திருவாதிரை" என்று எம்பெருமானார் திருவவதாரத் திருநன்னாளைப்பற்றி அருளிச்செய்திருப்பதால் நமக்கு வாழ்வளிப்பதில் ஆழ்வார்களிலும் மாறனடிபணிந் துய்ந்தவராகிய எதிராசர் திருவவதாரநாளுக்குள்ள சிறப்பை நிலைநாட்டியதாகிறது. இந்த வழியை அடியொற்றிப் பார்த்தால் யதீந்த்ராவதாரத்திலுங் காட்டில் யதீந்த்ர ப்ரவணராகிய மணவாள மாமுனிகளின் திருவவதார நன்னாள் நமக்கு வாழ்வளித்த லில் சிறப்புடையது என்பது 'மணவாளமாமுனி வந்திலனேல் ஆற்றில்கரைத்த புளியல்லவோ தமிழாரணமே" என்கிற பெரியோர் திருவாக்கினாலே நன்கறியப்படும்.

அதேபோல நம் அண்ணங்கராசார்ய ஸ்வாமி இக்காலத்தில் யதீந்த்ர ப்ரவண ப்ரவணர் என்கிற வைபவத்துக்குரியவராய்த் திருவவதாரம் செய்தருளா திருந்தால் உபயவேதாந்தங்களும் கடலில் கரைத்த கற்கண்டாய்விடும் என்பதை நாடு நகரமும் நன்கறிந்திருக்கிறது. இப்படிப்பட்ட ஸ்வாமியினுடைய திருவவதாரத் திருநன்னாளை நாம் "உண்டோ இம்மீனவிசாகத்துக் கொப்பொருநாள், உண்டோ நம்மண்ணங்கர்க்கொப்பொருவர்" என்று கொண்டாடும் நெஞ்சுடையராய் கூடியாடி விழாச்செய்து கோத்துக் குழைத்துக் குணலையாடித்திரிய வேண்டியது நமக்குப் பணியாகும்; ஸ்வரூபஸித்தியுமத்தாலேயாம்.

திருப்பாவையில் "செல்வச்சிறுமீர்காள்" என்னுமிடத்தில் கண்ணன் திருவவதரித்த ஸமகாலத்திலே பிறந்தும், ஆண்களாயும் வயதுசென்ற பெண்களாயும் அல்லாமல் ஒத்த பருவத்திற் பெண்களாகப்பெற்ற பாக்யவதிகாள்! என்று கொண்டாடினுப்போலே ஸ்வாமியுடன் ஸமகாலத்திலே பிறக்கப்பெற்றும் கண்ணன் காலத்திலே கம்ஸசிசுபாலாதிகளைப்போலே "அவஜாநந்தி மாம் மூடா:" என்று வெறுக்கத்தக்கவர்களாகப் பலர் இருந்தாப்போலே ஸ்வாமியுடன் எதிரம்பு கோத்து நீங்கும் விரதத்தை ஏறிட்டுக்கொண்ட கூட்டத்துடன் சேராதே "அன்பாவாய் ஆரமுதமாவாய் அடியேனுக்கின்பாவாய் எல்லாமும் நீயாவாய்" என்று உள் கலந்து உலகங்கட்கெல்லாம் ஒருயிராகிய ஸ்வாமிக்குப் பல்லாண்டு பாடுமவர்களாகப் பெற்றுேமே! என்கிற பேற்றை நினைந்திருந்தே சிரமம் தீர்ந்தேன். இப்படிப்பட்ட ஸ்வாமியுடன் ஏதாவது ஒரு ஸம்பந்தம் நமக்கமைய வேணுமென்று பலநாளழைத் தேற்கு பொருத்தமுடைய ஸ்வாமியே தான்புகுந்து «என்றன் கருத்தையுற வீற்றிருந்தான் கண்டுகொண்டே» என்று தானுெட்டிவந்து என்கிறபடி ஸஹார்த்த ப்ரஸாதத்தை ஒருமடை செய்து "அஹம்வோ பாந்தவோ ஜாத:" என்று கண்ணன் இடையர்களுக்கருளியதுபோல நம்முடன் உறவு கொண்டாடி நெய்யிடை நல்லதோர் சோறும் நியதமும் அத்தாணிச் சேவகமும் கையடைக்காயும் கழுத்துக்குப் பூணுெடு காதுக்குக் குண்டலமும் மெய்யிட நல்லதோர் சாந்தமும் தந்து என்னை வெள்ளுயிராக்கவல்ல ஸ்வாமியுடன் நமக்குள்ள உறவுமுறையை அறிந்து பேசுவது ரஸாவஹமானது. அதில் எம்பெருமானுக்கும் ஜீவாத்மாவுக்கும் உள்ள உறவு முறைகளில் முக்கியமாக நவவிதமான ஸம்பந்தங்கள் மூலமந்திரமாகிய திருவஷ்டாக்ஷரத்தின் வழியாக அறிவிக்கப்பட்டிருக்கின்றன. அவைகளில்,

(பிதாச) தகப்பனும் மகனுமான உறவும் (ச) என்று தாயும் சேயுமான உறவும் "என்னைப்பெற்ற அத்தாயாய் தந்தையாய் அறியாதன அறிவித்த அத்தா நீசெய்தன அடியேனறியேனே' என்று ஆழ்வார் அருளிச்செய்த உபகார ஸ்மிருதிக்காகவே அமைந்த திருவாய்மொழியில் என்னைப்பெற்ற தாயார் தகப்பன் என்கிற அளவிலே நில்லாமல் "அறியாதன அறிவித்த அத்தா" என்று அஜ்ஞாத ஜ்ஞாபன முகத்தாலே ஆசார்ய சிஷ்ய ஸம்பந்தத்தைத் தலைசிறந்த தஞ்சமாகிய தந்தை தாயாகக் கொள்ளப்பட்டிருப்பதைச் சேர எடுத்துக் காட்டியருளினபடியே இங்கும் நம் ஸ்வாமியிடம் நம்போலியர்க்கு ப்ரியபரதையினுல் தாயாகவும் ஹித பரதையினுல் தமப்பனுராகவும் பத்ரிகை பிரசுரங்கள் உபந்யாஸங்கள் வழியாக ஜ்ஞான ப்ரதாநத்தாலே ஆசார்யத்வமும் ஒருங்கே அமைந்திருப்பதை நாமறிய வேண்டியது அவசியம்

அடுத்தது (ரக்ஷக:) ரக்ஷ்யரக்ஷகபாவமானது தன்கப்பிலே கிடக்கும்போது ஸ்வாமி ரக்ஷகர் நாம் ரக்ஷ்யவர்க்கம். ரக்ஷகரான நம் ஸ்வாமி இடுமேயினிய சுவர்க்கத்தில்....என்கிறபாசுரப்படி சரணுகதர்களை விட்டுக்கொடாதே. காத்தளிக்க வல்லவர். ப்ரேம தசையில் தட்டு மாறி நாம் ரக்ஷகரானுல் ஸ்வாமிக்குப் பல்லாண்டு பாட வல்லோமாய் ஸ்வரூப லாபத்தைப் பெற்று வாழ்ந்து மகிழ்வெய்துவோம்.

(சேஷீ) சேஷத்வம் நம்மிடமும் ஸ்வாமியிடம் சேஷித்வமும் ப்ரகாசிப்பது (ராஜ்யஞ் சாஹஞ்சராமஸ்ய) என்றபரதாழ்வானைப்போலே நாமும் ஸ்வாமிக்கு சேஷ

மாக நம்மை அநுஸந்தித்தால் (ததோப்யஷிஞ்சத்பரதம்மஹாத்மா) என்று புவனி முழுதாளீரோ என்று நம்மையே உபய விபூதி நாதனுக்கிவைக்க வல்லவராகிறார். இதுக்கு மூலம் (வீதயச்ச) என்கிற பரமாசார்ய வசனமும் அதுக்கு மூலமான • அது நமது விதி வகையே • என்கிற ஆழ்வார் திருவாக்குமே யாகும்;

(பர்த்தா) ஸ்வாமி பர்த்தா நாம் பார்யை. இந்த உறவு அமைந்திருக்கு மழகு ஸ்வாரஸ்யம். ஸ்ரீவசந பூஷணத்தில் திநசர்யாப்ரகரணத்தில் "சிஷ்யனைக் கண்டால் அபிமத விஷயத்தைக் கண்டாற்போலேயும்" என்னுமதுக்குச் சேர • ஸத்புத்திஸ்ஸாதுஸேவீ என்கிறபடியான பரிபூர்ண சிஷ்ய லக்ஷணம் நம்மிடமில்லாதிருந்தாலும் தோல்கன்றுக்கிரங்கும் தாய்ப்பசுவைப்போலே. "இத்தனையடியரானார்க்கிரங்கும் நம் அரங்கனாய பித்தனை" என்கிறபடியே புறமே புறமே யாடிய நம்மிடம் அபிமத விஷயத்தைப் போலே ஆதரம் பெருக வைத்தருள்வதைக் கண்டோமுக்கு இந்த உறவு ஸுஸ்பஷ்டம்.

(ஜ்ஞேய:) ஆரறிவுபடைத்தவர்களாயின் ஸ்வாமியுடைய வைபவத்தை அறிந்து "ஒண்டாமரையாள் கேள்வனொருவனையே நோக்கு முணர்வு" என்கிறபடியே ஸ்வாமியை அறியாதார் அறியாதாரேயாய் அறிவிலிகளே யாவர். ஸ்வாமியுடைய குணங்களையே "உளங்கனிந்திருக்கும் உன்னையே பிதற்றும்" என்கிறபடி த்யேய விஷயமாக்கிக் கொள்ளவேணுமே யாம்.

(ஸ்வாமீ) ஸ்வம் நாம் (ஸ்வாமித்வம் ப்ரஹ்மணிஸ்திதம்) என்பதுபோலே செயற்கரிய செய்பவராகிற பெருமையால் ப்ருஹத்த்வம் ஸ்வாமியிடமிருப்பதால் ஸ்வாமித்வம் இங்கும் விளங்கக் குறையில்லை. ஆகவே தான் ஸ்வாமி என்றே உலகில் ப்ரஸித்தமாய் விட்டது என்பது ஒன்றே யமையும்.

(ஆதார:) எம்பெருமானார் தர்சன ஸ்தர்களுக்கு ஸ்வாமி யல்லது ஆதார பூதர்களில்லை என்பதை பன்னியுரைக்குங்கால் பாரதமாம். பலர் அதை யுணராதவன்றும் ஸ்வாமி விட்டுக்கொடாதே ஸத்தையை நோக்கித் தருமவராய் இருந்தது. (செறுவாரும் நட்பாகுவர்) என்பதை கட்கூடாக்கி வைக்குமழகு ஸர்வாதார பூதனான ஈச்வரனிடமும் உண்டோ இல்லையோ இங்கே உஜ்ஜ்வலம்

(ஆத்மா) உயிர். உயிருக்கு உள்ளதாவது தன் உடலில் ஆசை. ஸ்வாமிக்கு உடல் தம் திருமேனி யல்ல. நம் போன்றவர்களைப் பேணுவதிலேயேயாசை. அதாவது "ஆசார்யன் உஜ்ஜீவனத்திலே ஊன்றிப்போரும்" என்கிறபடி நமக்காகத் திருமேனியை நோக்காதே அல்லும் பகலும் உழைத்து வளர்ப்பதால் சரீரபடும் பாட்டை ஸ்வாமியிடம் ஸுஸ்பஷ்டமாகக் காணலாம்.

(போக்தா) ஸ்வாமி நம்மைத் தம்மைப் போலேயாக்கிப் பயிற்றிப் பணிசெய்யக்கொண்டு இந்தத் திருநக்ஷத்திர மஹோத்ஸவ வ்யாஜத்தாலே செஞ்சொற்களைப் பாடுவித்து இன்பம்பயக்க விருந்து வானவர் போக முண்பதேயாகும். .... •

ஸௌம்யமீன விசாகோபந்யாஸஸாரம் முற்றிற்று.

—:o:—

ஜகதாசார்ய சிம்மாசனாதிபதி மகாவித்வான்

## ஸ்ரீமத் உ. வே. அண்ணங்கராசார்ய சுவாமிகள் அவர்களின்

### எண்பதாம் ஆண்டு துவக்கவிழாப் பாராட்டுரைப் பாக்கள்

ந.ரா. முருகவேள், M.A., M.O.L., ஆசிரியர் : திருக்கோயில் சென்னை-34

(வெண்பா) 1 பேரறிஞர் என்போர்க்கும் பேரறிஞர்! கல்விநலன்
நேராகும் இன்றி நிரம்பிநின்றோர்!—சீராகும்
'நாமங்கை தானும் நலம்புகழ வல்லளோ?'
சேமங்கொள் அண்ணங்கர் சீர்!

2 அண்ணங்க ராசார்ய! ஐய! நும் கல்விநலன்
எண்ணுந் தொறும்மிகவே இன்பமுற்று.—முன்னம்
பெரும்பூதூர்த் தோன்றும் பெருமுனிவன் என்றே
இறும்பூதிங் கெய்திநிற்பேன் யான்!

3 அண்ணங்க ராசார்யர் போற்கற்றோர் யாருமிலர்!
எண்ணுங்கால் மற்றவன்றன் இன்னருளை—மண்ணினின்மிசை
என்போலப் பெற்றோர் எவருமிலர்! ஏகலவ்யன்
அன்றோ அவன்திருத்தாட்கி யான்.

4 கலைபயின்ற நற்றெளிவு, கட்டுரைக்கும் வன்மை,
நிலைதிறம்பா வாதநெறி நீர்மை—புலவிருந்தாம்
செவ்வியநற் பன்னலம்சேர் செம்மலண்ணங் கர்சிறப்பை
எவ்வகை,யான் பாராட்டு வேன்?

5 வடமொழியில் தென்மொழியில் வண்தெலுங்கும் இந்தி
திடமொழிகள் தம்மில்ஒரு சேர—மிடலுடனே
நல்லிதழ்கள் தாம்நடத்தும் அண்ணங்க ராசார்ய
வல்லறிஞன் போல்வார்யார் மற்று?

6 தேசும் திறலும் திருவும் புலமையும்
மாசிலா வைணவநன் மாண்புகளும்—பேசில்,உயர்
அண்ணங்க ராசார்யர் ஆற்ற மிகஅமைந்தார்!
விண்ணும்தான் போற்ற வியந்து.

7 "அரிய தெளிதாகும் ஆற்றலால் மாற்றிப்
பெருக முயல்வாரைப் பெற்றால்"—சரியிதென
முன்னம்பூ தத்தார் மொழிந்தவுண்மை யான்தெளிந்தேன்
அண்ணங்க ராசார்ய ரால்!

8 தானே தனக்குவமன்! தன்புலமை யேபுலமை!
தேனே அவன்றன் திருநூல்கள்!—வானே
வியந்துதொழும் அண்ணங்க ராசார்யர் மேன்மை
நயந்துமிகப் போற்றியுய்வோம் நாம்!

9 அன்புமிகு சான்றோய்! அறிவாற்றல் மிக்குயர்ந்தோய்!
இன்பமிக எண்பதாண் டெய்திநின்றோய்!—துன்றும்நின்
நற்புலமை மாண்பெல்லாம் நான்புகழ வல்லேனோ?
பொற்புமிக வாழ்க!நலம் பூத்து.

10 கீர்த்திமிகு கே.எஸ். கிருஷ்ணன்போற் பேரறிஞர்
ஆர்த்திமிகப் போற்றி அகமகிழ்ந்தார்!—தீர்த்தகராம்
நம்அண்ணங் கர்சீர் நயந்தென்றால், என்சொல்வேம்
செம்மல் அவர்தம் சிறப்பு.

11 மாற்றலர்தம் கோள்கள் மறுத்தொழித்துத் தம்கருத்தை
ஆற்றல்மிக நாட்டும் அருந்திறலில்—ஏற்றமிக்கார்
காஞ்சிவாழ் அண்ணங்கராரியர்! அவர் பெருமை
யாஞ்சொல்லப் போமோ இனிது?

12 அன்றுபலர் சான்றோர்கள் ஆற்றல்மிக வைணவத்தை
நன்றுமிகப் போற்றி நனிவளர்த்தார்!—இன்றதனைத்
தாம்ஒருவர் போற்றிமிகத் தாங்கி வளர்க்கின்றார்!
ஆம்! அவர்தொண் டென்புகழ்கேன் யான்?

(விருத்தம்)

1 மாஇருங் கலைகள் கற்றோர்! மகாவித்வான் மறைகள் தேர்ந்தோன்!
காயிரும் பொழில்கள் சூழ்ந்த கச்சியம் பதியில் வாழ்வோர்;
தாவரும் சீர்நம்பிள்ளை சந்ததி அமைத்த சான்றோர்
ஆயிரம் பிறைகள் கண்ட அண்ணங்கராரியர் வாழ்க!

2 வாக்கு வன்மை மணவாள மா முனிபோல் வாய்த்துடையோர்!
ஆக்குமுரையாலப்பெரிய ஆச்சானைப் போன்றொளிர்வோர்!
தேக்கு சமய வளர்ப்புழைப்பில் ஸ்ரீராமாநுசர்போல்வார்!
யார்க்கும் அண்ணங் கராசார்யர் அருமை பெருமை அளப்பரிதால்!

3 மாத இதழ்கள் பலபதிப்பார்! மாண்பார் பலநூல் வெளியிடுவார்!
வேதப் பள்ளி, கோஷ்டிகள்தாம் விளங்க நிறுவி நடத்துகிற்பார்!
ஓதி உய்நூல் பலதொகுப்பார்! உயர்ந்த அறங்கள் பலபுரிவார்;
நீதி வழுவா அண்ணங்கர் நிகரில் பெருமைக் கெல்லையுண்டோ?

4 நூற்றுக் கணக்கில் சிறந்தநல்ல நூல்கள் பலதாம் வெளியிட்டோர்!
மாற்றுப் பொய்ம்மைக் கொள்கைகளை மறுக்கும் திறனில் நிகரில்லார்!
வேற்றுப் புலத்தார் தாமும்மிக வியக்கும் சிறந்த வித்தகத்தார்!
ஆற்றல் மிக்கார் அண்ணங்கர்! அவர்தாம் வாழ்க பல்லாண்டே!

5 புலவ ராகப் பலர்இருப்பர்! புரவலராகச் சிலர்இருப்பர்!
புலவர் தாமே புரவலராய்ப் புவியில் இருத்தல் மிகஅருமை!
அலகில் சீர்த்தி அண்ணங்கர் ஆசார் யர்தாம், புலவர்களுள்
தலைவர்! மற்றும் புரவலராம் சான்றோர் வாழி நெடிதாழி!

6 இன்சொற் செல்வ! வைணவநல் இயல்பனைத்தும் எய்திநிற்போய்!
நன்சொற் புலவ! நாவலவ! நல்ல பலநூல் ஆசிரிய!
தென்சொற் கடந்து வடசொற்கடற் கெல்லை தேர்ந்த சிறப்புடையோய்!
என்சொற் கொண்டு நுமைப்புகழ்கேன்? இனிது வாழ்க பல்லாண்டே!

7 நாற்ப தின்மேல் ஆண்டுகளாய்ச் சென்னை நகரில் திருப்பாவை
போற்றி, உரையும் சொற்பொழிவும் புதிய புதிய பொருள்நலங்கள்
தோற்றி, விளக்கம் செய்துவரும் இராமாநுசநன்முனிவர் போல்
ஏற்று நுமையும் திருப்பாவை ஜீயர் என்றே யாம்தொழுவேம்!

வேறு

சீலம் மிகுப்ரஜோத்பத்தி பயங்கரப் பேர்சிறந்தீர்!
சாலநன் றெண்பதாம் ஆண்டுத் துவக்கம் தகஅடைந்தீர்!
ஞாலம் வியக்கும் நலஞ்சார் பணிகள் நனிபுரிந்தீர்!
மேலும்பல் லாண்டுகள் வாழ்க!நீர் இன்பம் மிகநிறைந்தே!

சென்னை-34
27—3—1970

இங்ஙனம், தங்கள் அன்புமிக்க,

ந. ரா. முருகவேள்.

# சென்னையில் ஸ்ரீராமநவமி மஹோத்ஸவம்

(ஸ்ரீஉவே. R. V. சேஷாத்ரி, B.A., B.L. வழக்கறிஞர், Egmore)

இவ்வருஷம் சென்னையில் பல பாகங்களில் ஸ்ரீராமாயண ப்ரவசனங்கள், சங்கீதக் கச்சேரிகள், ராம பஜனைகள், பூஜைகள், அர்ச்சனைகள் இவற்றின்மூலம் ஸ்ரீராமநவமி மஹோத்ஸவம் வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. ஆயினும் நகரத்தின் நடுநாயகமாக விளங்குவதும், பார்த்தஸாரதிப் பெருமான் கோயில் கொண்டு எழுந்தருளி யிருப்பதுமான திருவல்லிக்கேணியில் நல்லதம்பி முதலித் தெருவில் சுப்ரமணிய அய்யர் கல்யாண மஹாலில் ஸ்ரீராம பக்தஜன சபையின் ஆதரவின்கீழ் நடந்த ஸ்ரீராமநவமி மஹோத்ஸவம் விசேஷமாகக் குறிப்பிடத் தக்கது. பதினொரு தினங்களாக மேற்படி சபையார் நாள் முழுவதும் இராம சேவையிலீடுபட்டு ஆயிரக்கணக்கான ஜனங்களையும் அதில் ஈடுபடச்செய்தது மிகவும் பாராட்டற்பாலது. அந்த நாட்களில் காலைமுதல் மாலைவரை கோடி அர்ச்சனை, பிறகு இரவு 6-30 மணிமுதல் 8-30 வரை ஸ்ரீராமாயண ப்ரவசனம், அதன்பிறகு அருமையான சங்கீதக்கச்சேரிகள் ஆக இவற்றிற்கு ஏற்பாடு செய்து நடத்தினர் ஸபையார். ஸ்ரீவைஷ்ணவ உலகுக்குத் திலகம் போன்றவரும், வைதிக ஸார்வபௌமரும், பஹுபாஷா பண்டிதரும், உபந்யாஸம் செய்து பாமர ஜனங்களையும் பண்டிதராக்குவதற்கென்றே அவதரித்திருப்பவருமான ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமி ஏப்ரல் 6ஆம் தேதிமுதல் 16ஆம் தேதி வரை தினந்தோறும் மாலை 6-30 மணிமுதல் 8-30 மணிவரை ஸ்ரீராமாயண ப்ரவசனம் செய்தது நகர நிகழ்ச்சிகளனைத்துக்கும் சிகரம்போல் விளங்கிற்று.

ஸ்வாமியின் இராமாயண உபந்யாசத்தை ஏப்ரல் 6 ஆம் தேதி மாலை துவக்கி வைத்துப் பேசிய சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி கனம் அழகிரிசாமி அவர்கள் ஸ்வாமியின் பலமுகமான பாண்டித்யத்தையும், சொல்வன்மையையும் விசேஷமாக அவருடைய ஆழ்ந்த வேதஞானத்தையும் தமக்கே உரித்தான அழகிய முறையில் நன்கு எடுத்துக்கூறிவிட்டு, வால்மீகி கம்ப ராமாயணங்களில் அளவுகடந்த புலமை பெற்ற ஸ்வாமியிடமிருந்து அருமையான உபந்நியாசங்களைக் கேட்க யாவரும் ஆவலுடன் இருப்பதாகக் கூறி கம்பராமாயணத்திலிருந்து சில பாக்களையுங் கூறி தமக்குள்ள ராமபக்தியையும், ராமாயண ப்ரவசனம் கேட்பதில் உள்ள ஆவலையும் விளக்கினார்கள். அநேகமாக தினமும் உபந்நியாசத்தைக் கேட்டு ரசித்தார்கள்.

ஏப்ரல் 6ஆம் தேதி மாலை உபந்நியாசத்தைத்தொடங்கிய ஸ்வாமி பத்து தினங்களாக ஒரே அமிருததாரையைப் பொழிந்தார் என்றால் மிகையாகாது. "வேத: ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத் ராமாயணாத்மனா" என்ற த்யான ச்லோகத்தை விளக்கி 'ராமாயணம் முழுவதுமே வேதம்; வேதமே ராமாயண வடிவில் வால்மீகியால் உருவாக்கப்பட்டது' என்ற உண்மையை வேதத்தின் பல பகுதிகளிலிருந்து அருமையான வாக்கியங்களை அள்ளி எடுத்துச் சுரந்து அவை எப்படி ராமாயண ச்லோகங்களாக்கப்பட்டுள்ளன என்பதைக்காட்ட ச்லோகங்களையும் கணக்கின்றிப் பொழிந்து கேட்போர் திகைக்கும்வண்ணம் எடுத்தக் கூறினர். இவ்வண்ணம் எடுத்துக்கூறும் ஆற்றல் பொருந்தியவர் வேறு யாரேனும் தற்சமயம் இவ்வுலகில் இருப்பரோ என்றே அனைவரும் வியப்படைந்தனர்.

"வைதேஹீ ஸஹிதம் ஸுரத்ருமதலே ஹைமே மஹாமண்டபே
மத்யேபுஷ்பகமாஸனே மணிமயே வீராஸனே ஸுஸ்திதம்
அக்ரே வாசயதி ப்ரபஞ்ஜன ஸுதே தத்வம் முனிப்ய: பரம்
வ்யாக்க்யாந்தம் பரதாதிபி: பரிவ்ருதம் ராமம் பஜே ச்யாமலம்"

என்று ப்ரஸித்தமான ச்லோகத்தை ஸ்வாமீ அடிப்படையாகக் கொண்டு, இதில் கூறியபடி ஸ்ரீராமாயண தத்வத்தை ராமன் முனிவர்களுக் கெடுத்துரைத்த முறையில் யாவர்க்கும் தெளிவாக உபன்யஸித்தது ஓர் அபூர்வமான விருந்து.

ராமாயணத்தில் கதாபாகந்தான் மேலெழுந்த வாரியாகப் பார்க்கும்போது ஏற்படும் அர்த்தம் எனினும், தத்வார்த்தம் என்பது உள்ளுறை பொருள் என்றும் அதைத் தான் எம்பெருமானார் தம் மாதுலராகிய பெரிய திருமலை நம்பியிடம் ஒரு வருஷ காலம் திருப்பதியில் சென்றிருந்து கேட்டார் என்றும், அது ஆசார்ய பரம்பரையின் மூலம் வந்து ஆழ்வான், பட்டர், நம்பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை, பெரிய வாச்சான் பிள்ளை, பிள்ளை லோகாசாரியர் முதலிய ஆசார்யர்களால் கையாளப்பட்டு அவ்வாசிரியர்களின் கிரந்தங்களிலும் தெரிவிக்கப்பட்டுள்ளதென்றும், அவ்வர்த்த விசேஷங்களைத்தான் சிறுபான்மை கோவிந்தராஜர் தமது வியாக்யானத்தில் எழுதி வைத்தாரென்றும், அதனால்தான் ஸகல மதஸ்தர்களும் கோவிந்த ராஜீய வியாக்யானத்தைப் பெரிதும் போற்றி ஆதரிக்கின்றனர் என்றும் ஸ்வாமி விரிவாக நிரூபித்தது அற்புதமாயிருந்தது.

ஆழ்வானின் அதிமானுஷஸ்தவம், பட்டரின் ஸ்ரீரங்க ராஜஸ்தவ ஸ்ரீகுண ரத்ன கோசங்கள், தனிச்லோகி, ஈடு, ஸ்ரீவசனபூஷணம் முதலிய க்ரந்தங்களிலிருந்து ஏராளமான ஸ்ரீஸூக்திகளை ஸ்வாமி வாரிவழங்க, சபையோர் பரவசமடைந்தனர். ராமாயணத்தில் முக்கியமாக அனுபவிக்க வேண்டியது ராமனின் அஸாதாரண மான குணங்கள் என்று விளக்கி, அக்கல்யாண குணங்களைப் பலபடியாக அத்யாச் சர்யமான முறையில் அநுபவித்தும், அனுபவிப்பித்தும் கல்லும் கரையும்வண்ணம் ஸ்வாமி உபந்யஸித்தார். இன்னும் சீதாபிராட்டியின் பெருமை, திருவடியின் மஹிமை, பரதனின் மாண்பு முதலியவற்றையும் ஸந்தர்ப்ப விசேஷங்களில் நன்குரைத்தருளினர். ராமன் சாமான்ய தர்மங்களையும் இளையபெருமாள் சேஷத் வத்தையும், பரதாழ்வான் பாரதந்த்ரியத்தையும், சத்ருக்னாழ்வான் பாகவத சேஷத் வத்தையும், திருவடி ஆசார்யத்வத்தையும் தம்தம் அனுட்டானங்களினால் காட்டி லோகோபகாரம் செய்தார்கள் என்று ஸ்வாமி விளக்கினர்.

நவீன ரீதியில் ஸ்வாமி பல ஆராய்ச்சிகள் செய்து பிரமாணங்களின் வாயி லாக மயிர்க் கூச்சலெடுக்கும்படியான சில தத்துவங்களை எடுத்துக்கூறினர். பெருமான் அவதாரம் செய்தது கேவலம் ராவணனைக் கொல்வதற்கல்லவென்றும், அதை ஸங்கல்ப மாத்திரத்தால் செய்து விடுவார் என்றும், அநுல் அவதரித்தது பக்தஜன ஸஹவாஸத்திற்கும் தனது திருக்குணங்களை விளக்குதற்கும் என்றும் பல மேற்கோள்களை விளக்கிக் கூறினர்.

மாரீசன் ஸர்வாத்மனா நல்லவன், பரமபக்தன் என்று ஸ்வாமி நிரூபித்தது யாவரையும் திகைக்க வைத்தது, "ராமோ விக்ரஹவான் தர்ம:" என்றும், "அப்ர மேயம் ஹி தத் தேஜ: யஸ்ய ஸா ஜனகாத்மஜா" என்றும் ஒரு மஹரிஷி கூட கூறவில்லை. மாரீசன் கூறினன். என்னே அவன் பெருமை! என்று ஸ்வாமி மாரீசனைப் போற்றினர். தனக்கு எப்படியும் மரணம் திண்ணமென்று கொண்ட அவன் பெருமாள் கையில் மடிவது மேல் என்று கருதி மாயமானகப் போனன் என்றும், இராவணன் மடிந்து ஒழிய வேணும் என்பதற்காகவே "ஹா லக்ஷ்மண, ஹா ஸீதே" என்று இறக்குந் தருவாயில் கதறினன் என்றும் ஸ்வாமி கூறியபின் மாரீசனை இகழ்ந்தவர்கள் அவனைப் புகழ ஆரம்பித்து விட்டனர். மங்களா சாஸனம், சரணுகதி முதலிய தத்துவங்களை விசதமாகச் சொல்லி அவற்றை விவரிக்கத்தான் ராமாயணம் அவதரித்ததோ என்று நினைக்கும்படி ஏராளமான இராமாயண ச்லோகங்களை வேத வாக்குக்களுடன் எடுத்துக்கூறி ஸ்வாமி இவ் விஷயங்களைப் பரக்கஉபந்யஸித்தருளினது எங்கும் தேட்டறியாததாயிருந்தது.

"யாமோஷதிமிவாயுஷ்மன் அந்வேஷஸி மஹாவனே,
ஸாதேவீ மம ச ப்ராணா: ராவணேனேபயம் ஹ்ருதம்" இதில் ஆயுஷ்மந்!

என்று ஜடாயு ராமனுக்கு மங்களா சாஸனம் செய்தபடியால் பெரிய உடையார் என்ற சிறப்புப் பெயரை ஆசார்யர்கள் அவருக்கிட்டனர் என்பது ஸ்வாமியின் நிர்வாஹம். இராமாயணத்தின்கண் காணப்படும் பல மங்களாசாஸனங்களிலும் மிகச் சிறந்தது ஜடாயுவின் மங்களாசாஸனம் என்பது நம் பூர்வாசார்யர்களின்

கொள்கை என்பது ஸ்வாமியின் மூலம் தெரியவந்தது. பன்னியுரைக்குங்கால் பாரதமாம் என்னும்படி ஸ்வாமி அருளிச்செய்த எல்லா விஷயங்களையும் இச்சிறு கட்டுரையின் மூலம் வெளியிடுவது இயலாது, ஏதோ ஸ்தாலீ புலாகந்யாயத்தாலே இரண்டொன்று கூறினேம். இப்படி யநேகம். ஆங்காங்கு கம்பராமாயணத்தி லிருந்தும், அருளிச் செயலிலிருந்தும் பாசுரங்களை மழையாகப்பொழிந்த ஸ்வாமியின் ப்ரவசனத்தை எப்படி எடுத்துச் சொல்வதென்றே தெரியவில்லை.

இடையில் ஸ்வாமிக்குக் கடுமையான ஜ்வரம் வந்து இரண்டுநாள் உபந்யாஸம் நின்று விட்டது. திருமேனி பூர்ணமான குணமடைய வெகுநாள் செல்லுமென்று யாவரும் எண்ணும்படி யிருக்கச்செய்தேயும் ஸ்வாமி கணிசியாமலே அடுத்தநாள் அருமையான உபந்யாஸம் நடத்தினர். 16-4-70 பட்டாபிஷேகத்தன்று 6 மணி முதல் 9 30 மணிவரை உபந்யஸித்தும் ஸ்வாமிக்கு த்ருப்தியில்லாமல் ஸபை யோரின் நிர்ப்பந்தத்தின் பேரில் பலபல அர்த்தங்களைக் கோடி காட்டிவிட்டு பட்டாபி ஷேகம் செய்து முடித்தார். அன்று, நீதிபதி ராமப்ரஸாதராவ், நீதிபதி அழகிரிஸாமி ஆகியோர் ஸ்வாமியின் உபந்யாஸ வைகரியைப் பெரிதும் ரஸித்துப் பாராட்டுரை கள் வழங்கினர். மற்றும் சில பெரியார்களும்.

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்திற்கே ஏகதேசத்தில் உரிய சிறந்த தத்து வார்த்தங்களை ஸ்ரீ வைஷ்ணவ ஆசாரியர்களின் அரும்பெரும் ஸ்ரீ ஸூக்திகளைக் கொண்டு, வாரி வழங்கிய நம் ஸ்வாமியின் ப்ரவசனங்களை மற்ற ஸம்பிரதாயஸ்தர் கள் விரும்பிக் கேட்பர்களோவென்று நிர்வாஹிகள் சிறிது சந்தேகித்தனர். ஆனால் மற்ற ஸம்பிரதாயஸ்தர்கள் தான் ஏராளமாக வந்து ப்ரவசனத்தைக் கேட்டு ஆனந்தித்த தோடல்லாமல் "இப்படிப்பட்ட பிரவசனத்தை நாங்கள் இது வரையில் கேட்டதில்லை, இனி என்று கேட்போம்' என்று மிகமிகப் பாராட்டி மகிழ்ந்தனர். சென்னைவாஸிகளுக்கு இதுவொரு அபூர்வபாக்கியமென்கிற பேச்சே எங்கும் நிகழ்ந்தது. காஞ்சீபுரம் ஜீயர் ஸ்வாமிகளான ஸ்ரீமத் பரமஹம்ஸ. வாதி கேஸரி யதீந்திரப்ரவண ராமாநுஜஜீயர் ஸ்வாமிகள் இவ்வுபந்யாஸ ச்ரவணத்திற் கென்றே காஞ்சீபுரத்திலிருந்து எழுந்தருளி 10 நாளும் ஸபையை அலங்கரித் திருந்தது "எம்பெருமான் தன் சரிதை செவியால் கண்ணால் பருகுவோம்" என்ற ஸ்ரீகுலசேகராழ்வாரருளிச் செயலின்படி கண்ணாலும் பருகப் பொருத்தமாயிருந்தது.

ஓம். ஓம். ஓம்.

## திருவல்லிக்கேணி ஸ்ரீராமநவமி யுபந்யாஸச் சிறப்பு.

(ஸ்ரீமான். பண்டித. பரவஸ்து. புரிசை வரதாசாரியர்.)

ஸ்ரீமதுபயவேதாந்த ப்ரவர்த்தகாசார்யராய் நம்மிடையே நிலவிக் கலந்து பரிமாறி வரும் அவதாரபுருஷரான ஸ்ரீ உவே. மஹாபண்டித. பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்யஸ்வாமி அருளிவரும் ப்ரவசனங்களில் ஈடுபட்டுவரும் பல்லாயி ரக்கணக்கான தாஸவர்க்கங்களில் அடியேனும் ஒருவன். இதுவரை நம்ஸ்வாமி ஸ்ரீராமாயண ப்ரவசனங்கள் விஸ்தாரமாகவும் சங்கிரகமாகவும் ஆங்காங்கு அருளிச் செய்துள்ளவற்றைக் கேட்டுப் பரவசமெய்தினவன் அடியேன். ஆனாலும் சமீபத் தில் திருவல்லிக்கேணி ஸுப்ரமணிய அய்யர் திருக்கலியாண மண்டபத்தில் ஸ்வாமி அருளிச்செய்த ஸ்ரீராமாயண ப்ரவசனம் அப்ரமேயமானது. அத்விதீயமானது. ஒப்பாரும் மிக்காருமில்லாத மாமணிவண்ணனை ஸ்ரீராமபிரான் தன்னைப்போலவே தன் காதையையும் ஈடுவமை இல்லாதபடி செய்து போந்தருளித் தன்னையே உகப் பித்துக்கொண்டான் போலும். ஸ்ரீஸ்வாமீ திருவாக்கால் பத்தே நாட்களில் ஸ்ரீராமா யணம் பூர்த்தியடைந்ததெனினும் அடியேன்போல்வார்க்குப் பத்து வருடங்களுக் குச் சிந்தித்துத் தித்தித்துத் தேறி ருசித்து ரசிக்கத்தக்க விஷயங்கள் பலபலவும் ஸ்வாமி திருவாக்கில் என்னைக்கொள் என்னைக்கொள்ளென்று கங்கா ப்ரவாகம்போல் பெருக்கெடுத்தோடிய பெருமையை க்ஷேத்திர மாகாத்ம்யம் என்றும் ஸ்ரீபார்த்தசார தியின் திருவருட்பெருக்கெனவும் கொள்ளவேணுமென்றுர் பலர்.

உபந்யாஸ ஸபாமண்டபமானது மிக அற்புதமான ரசனை பெற்றிருந்தது. சுற்றியிருந்த ஸந்நிவேசங்களும் மணிமண்டபத்தின் நிர்மாணமும் எம்பெருமான்

ஸ்ரீசக்ரவர்த்தி திருமகனுடைய ஸாந்நித்யமும் கூடியிருந்த அடியார்கள் குழாமும் ஸ்ரீஸ்வாமி கம்பீரமான தோற்றத்துடன் வீற்றிருந்த பாங்கும் விஷயம் விளக்கும் ஆற்றலும் கேவலம் பரமநாத்திகருடைய சித்தத்தையும் கலக்கிப் புத்துணர்ச்சி யூட்டுவதாக அமைந்திருந்தது.

இதுகாறும் பலமுறை பல ப்ரவசன கர்த்தாக்களிடத்தில் கேட்டுப்பழகிய "வைதேஹீஸஹிதம்", "வேதவேத்யே பரே பும்ஸி" எனும் இரண்டு ராமாயண சுலோகங்களும் ஸ்வாமி திருவாக்கினின்றும் புறப்பட்டுப் புதுமெருகுடன் புதப்புது அர்த்த விசேஷங்களைக் கொண்டதாய் விளங்கியது. "தத்வம் முனிப்ய: பரம் வ்யாக்யாந்தம்" என்னநின்ற சக்ரவர்த்திதிருமகன் தன்னையேசொல்லின்செல்வன் என மகிழ்வடையச் செய்த திருவடி எதிர்நின்று விண்ணப்பிக்க ஸ்ரீராமசந்திரன் தானே முனிவர் குழாங்களுக்கு ஸ்ரீராமாயண தத்வார்த்தங்களை அருளிச்செய்தான் என்று ஸ்ரீஸ்வாமி விளக்கிக் கூறியபோது அந்த இடமே மணிமண்டபமாகவும் ஸ்ரீஸ்வாமியே சக்ரவர்த்தி திருமகனாகநின்று தத்வார்த்தங்களை எடுத்துப் பொழிபவராகவும் அங்குக் குழுமியிருந்த அத்தனைபேரும் மௌனசீலர்களும் மனனசீலர்களுமான முனிவர் கணங்களோவெனப் பிரமிக்கும்படி அமைந்திருந்தனவென்றால் இதில் ஒரு மிகையுமில்லையென அறுதியிட்டுக் கூறலாம்.

ஸ்ரீராமகதையானது பண்டிதரென்றும் பாமரரென்றும் வாசியின்றி யாவரும் அறிந்ததேயாகையால் இம்முறைதத்துவார்த்தங்களையும், வேதப்ராதுர்ப்பாவமானது ஸ்ரீராமாயணம் என்பதையும் விவரிப்பதே தமதுகுறிக்கோள் என்ற சங்கல்பத்துடன் வேத ப்ரமாணங்களை வாரியிறைத்தபோது, ஆசையுடையோர்க்கெல்லாம்வாரியிறைத்து வரம்பறுத்த ஸ்ரீராமாநுசனே என்னத் தோன்றினர் ஸ்வாமி. அப்படி வேதப்ரமாணங்களை ஓதும்போதெல்லாம் இன்ன காண்டம், இன்ன ப்ரச்நம், இத்தனையாவது அனுவாகம் என்று குறிப்பிட்டு அதற்குச் சான்றாக அச்சபையில் கோடியர்ச்சனையில் அந்வயித்துவந்த கனபாடிகளையும் தம்முடன் ஓதும்படி நியமித்து அவர்கள் ஸ்வாமியுடன் சேர்ந்து உத்கானம் பண்ணும்போது இரட்டை நாயனம் ஸுஸ்வரத்துடன் லயவித்தியாசமின்றி மேளத்துடன் ஒலிக்குமாபோலே இசைந்து கர்ணாம்ருதமாய் மேலும் மேலும் அனுபவிக்க விருப்பும்படியாய் இருந்தது. நம்ஸ்வாமி ஸாதித்தருளும் அர்த்தங்களை யாரும் கேட்க அதிகாரிகளேயொழிய, தாங்கள் எடுத்துரைக்க வல்லாரொருவருமிலர். ஆனாலும் சில பொருள்களை மட்டும் அடைவு கெடவும் விண்ணப்பிக்க விரும்புகிறேன். முதல்நாளன்று அவதாரிகையே அவதாரமாயது. ஸ்ரீராமசந்திராதிகள் நால்வரும் நான்குவிதமான தருமங்களையும் பின்புள்ளாரறியும்படி நடத்திக்காட்டினபடியைப் பலபடி விளக்கிக் காட்டினர். "அநக: சத்ருக்னோ நித்ய சத்ருக்ன:" என விளங்கிய சத்ருக்னாழ்வான் படியையும், ஆழ்வார்களில் மதுரகவியாழ்வார் படியையும் ஆசார்யர்களில் திருவரங்கத்தமுதனார் படியையும் ஒத்திட்டு மூன்றுவிதமான சேஷத்வ காஷ்டைகளை ஸ்ரீவசனபூஷணாதி திவ்யக்ரந்தங்களினின்றும் ஆழ்வார் ஆசார்ய ஸ்ரீஸூக்திகளிலிருந்தும் மேற்கோள்கள் காட்டி, கேட்பவர் யாவர்க்கும் பரமபதானந்தத்தை நம்ஸ்வாமி இங்கேயே ஊட்டினார் எனில் அதிசயோக்தியாகாது. சத்தியமே. மற்றைய ப்ரவசன கர்த்தாக்களுக்குப் புலனாகாத—கோசரமாகாத—ஆசார்ய சிரேஷ்டரான திருமலை நம்பிகளிடம் கேட்ட அர்த்தபாவங்கள் நெஞ்சில் உறையப்பெற்று எம்பெருமானார் திருவுள்ளத்துக்குப் பாங்காகத் தேங்கிய அர்த்தமிது என்று விளக்குங்கால் ஸ்ரீஸ்வாமியினுடைய ஆசார்யபக்தியை வியக்காமலிருக்கவும் ஆகுமோ? அப்படி அற்புதமான அர்த்த விசேஷங்களைச் சாதித்தருளும் காலத்திலும், இது அடியேனுடைய புத்தி நுட்பத்தினால் கண்டுபிடிக்கப்பட்டதல்ல. யாவும் நம் பூர்வாசார்யர்களான ஆளவந்தார் முதல் மணவாளமாமுனிகள் வரை அருளியுள்ளவைகளே என்று கல்வெட்டாகப் பேசி, பெருமையைத் தனதாகக் கொள்ளாமல் ஆசார்யபக்தி தோன்ற ப்ராமாணிகமாகப் பேசும் பெருமை நம் ஸ்வாமியொருவர்க்கேயன்றி மற்றையோர்க்கு ஆகாது. விச்வாமித்ர முனிவரைப் பின்சென்ற தாசரதிகள் வேள்விகாக்கச் சென்றதான கதை வியாஜமாத்ரமென்றும், முனிவர் * அஹம் வேத்மி மஹாத்மாநமென்று பரத்வத்தை வெளியிடவும், தாசரதிகள் * இமௌ ஸ்ம முநிசார்தூல கிங்கரௌ ஸமுபஸ்

திதௌ* என்று தமது ஸௌலப்யத்தை வெளியிடவுமே அமைந்ததென்றும் பேசினது பரமரஸம். இன்சுவையே வடிவெடுத்திருந்தது.

ஸீதா விவாஹ கட்டத்தில் பெரும்பாலும் கேட்கும் பிரசங்கங்கள் வேடிக்கைப் பேச்சுகளாலும் துணுக்கைச் சிரிப்புக் கதைகளாலும் சிரிக்கச் செய்வதாயிருக்கும். ஆனால் அன்று ஸ்வாமியின் உபந்யாஸம் பக்தர்களைக் கண்ணீர் பெருக்கவும் பெருமூச்செறியவும் செய்தவிதம் இப்பொழு தெம்மனோரால் இயம்புதற்கெளிதோ? விவாஹகாலத்தில் ஜனகசக்ரவர்த்தி பிராட்டியை இராமபிரான் கையில் ஒப்புவித்த படியை * இயம் ஸீதா மம ஸுதா * என்னும் சுலோக மூலமாய் விளக்கியபோது, "கோமகன்முன் சனகன் குளிர் நன்னீர், பூமகளும் பொருளும்மென நீயென், மாமகள் தன்னொடு மன்னுதியென்னுத், தாமரையன்ன தடக்கையினீந்தான்" என்ற கம்பர் பெருமான் பாசுரத்தை யிணைக்கி அபூர்வார்த்தங்களை அள்ளியள்ளி யிறைத்தது வெகு ஆச்சரியம்! வெகு வெகு அற்புதம்!! ரஸிகர்கள் உகப்பது! வித்வான்கள் வியப்பது! பண்டிதர்கள் பலகால் சிந்திப்பது. ஜனகன் பிராட்டியைத் தந்திலன், தண்ணீரையே தந்தானென்று ஸாதித்து, அதற்குத் திருநெடுந்தாண்டகத்தில் *வில்லிறுத்து மெல்லியல்தோள் தோய்ந்தாய்* என்ற பாசுரத்தின் வியாக்கியானத்தில் "பிராட்டி நீரானாள்" என்றுள்ள ஸ்ரீஸூக்தியின் அருமை பெருமைகளைப் பேசியும், அவ்விடத்துப் பொருள்நயத்தை யறியாதே அந்த வ்யாக்கியானமச்சிட்டவர்கள் "பிராட்டி நீராடினாள்" என்றும் இனியளானாளென்றுமச்சிட்டிருப்பதுபற்றி ஸ்வாமி யழுததும் ச்ரோதாக்க ளழுததும் திருவல்லிக்கேணிக் குளத்தைப் பெரும்பாலும் நிறைத்திருக்கும். "உருகுமால் நெஞ்சம், பெருகுமால் வேட்கை" என்று ஒவ்வொருவர் வாயிலும் வரப்பண்ணின அவ்வுபந்யாஸங்களின் பெருமையை உள்ளவாறு பேசப் பல திருக்குறட்பாக்கள் வேண்டியிருக்கின்றன. அவற்றை யெல்லாமெழுதினால் அச்சில் இடம்பெறாதென்று விடுக்கின்றேன்.

யுவராஜ பட்டாபிஷேக ப்ரயத்ன கட்டம் ஸாதிக்கும்போது பொதுமக்கள் "பஹவோ ந்ருப கல்யாணகுணாঃ புத்ரஸ்ய ஸந்திதே" என்றுதொடங்கி வருணித்த ராமகுணங்களை வேதங்களைக் கொண்டும் உபநிஷத்துக்களைக்கொண்டும் விவரித்த அழகும், இடையிடையே அங்கிருந்த கனபாடிகளையும் கூட்டிக்கொண்டு ஒவ்வொரு சுலோகத்திற்கும் பொருத்தமான வேதவாக்கியங்களை யிசைத்ததும், ஆழ்வார் பாசுரங்களையும் ஆசார்ய திவ்யஸூக்திகளையும் வாரிவழங்கியதும் அடியேன் போல்வாருடைய வாக்குக்கு எட்டாதவை அப்பொழுது அத்திரளில் அமர்ந்து அநுபவித்ததே என்போன்றவர்களின் பிறவிப் பேறாகும். அப்போது பக்தர்களிடையே ஏற்பட்ட ஹாஹாகாரம் அடங்கச் சிறிதுபோதாயிற்று. ஸ்ரீராமகாதையின் ஒவ்வொரு கட்டமும் "வேதঃ ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத் ராமாயணாத்மநா" என்பதை மூதலிப்பதென்று ஸ்வாமி நிருபித்த வகைகள் வேறெங்கும் கேட்கமுடியாதவை, ஸ்வாமியிடத்திலும் மறுமுறை கேட்க முடியாதவையென்றே சொல்லலாம்.

இடையில் ஸ்வாமிக்கு இரண்டுநாள் திருமேனி பாங்கில்லாமல் அடியோங்களின் தீவினைப்பயனாக இடைப்பட்டது ப்ரவசனமழை. தடைபட்ட வெள்ளம் உடைபட்டு வருவதுபோன்று ப்ரவஹிக்கத் தொடங்கியது மறுநாளே. விபீஷண சரணாகதிகட்டத்திலும் அபயப்ரதானகட்டத்திலும் ஸ்வாமியுரைத்த தர்மஸம்ஸ்தாபனப் பெருமைப்பேச்சு அங்கு அமர்ந்திருந்த இரண்டு நீதிபதிகளும் சட்ட வல்லுநர்களும் ஸ்வாமியின் முற்கால தற்கால பிற்கால அனுபவத்திறனைப்பற்றி வியக்கப் பண்ணிற்று.

பட்டாபிஷேக தினத்தன்று காலக்கணக்கையே மறந்திருந்தனர் பக்தர்கள். மாலை 6 மணிக்கு ஆரம்பித்த ப்ரவசனம் 9-15க்கும் முடிவுபெறாமற் சென்றது. முன்னணியிலிருந்த பக்தரொருவர் கடியாரத்தை யெடுத்துக்காட்ட, பக்தர்களின் பொறுமையை மேலும் சோதிக்கலாகாதென்று திருவுள்ளம் பற்றியே பட்டாபிஷேகத்தைச் செய்து தலைக்கட்டினார். பக்தர்கள் ஸ்வாமி திருமேனிக்குப் பல்லாண்டு பாடினர். உயர்நீதிபதிகளிருவரும் உயர்ந்த பேச்சுக்கள் பேசினர். ... •

பொங்கும் மங்களம் எங்கும் தங்குக.

## முக்கிய அறிவிப்பு

என்பால் பேரன்பு பூண்டவர்களும் என்னுடைய மதிப்புக்கு இலக்கான வர்களுமான பல பெரியார்களும் நண்பர்களும் நாற்றிசையிலும் பல நூற்றுக்கணக்காகவுள்ளார்கள். மற்றைத் திசைகளிலுள்ளாரை விட்டுத் தென்திசையிலுள்ளாரை மட்டுமாவது இச்சிறுநூலில் நான் ப்ரஸ்தா விக்க வேண்டியது அவசியம். எதற்காக? ஆத்ம த்ருப்திக்காக மட்டுமே. இதில் கீழே பல பெரியார்களைப் பற்றிப் பேசியிருந்தாலும் இன்னும் பேசவேண்டியவர்கள் பலருளர். அவர்களை மேல் அனுபந் தத்தில் ஒருவாறு ப்ரஸ்தாவித்து ஆசைதீரப் பெறுவேன். இப்போது முக்கியமாக இருவரைப்பற்றிப் பேசித் தலைக்கட்டுகிறேன்.

## அன்புள்ள தம்பியைக் காண்மின்!

எனக்கு ஸஹோதரிகளுண்டேயொழிய ஸஹோதரர் ஜனித்ததில்லை. ஆனாலும் சக்ரவர்த்தி திருமகனார் விபீஷணாழ்வாரை நோக்கிக் "குகனொடு மைவரா னோம் முன்பு, பின் குன்றுசூழ்வான் மகனொடு மறுவரானோம், எம்மிடை யன்பின் வந்த அகனமர்காதலைய! நின்னொடு மெழுவரானோம், புகலருங்கானந்தந்து புதல்வராற் பொலிந்தானுந்தை" என்று கூறியதாகக் கம்பர் பாடிய கணக்கிலே நானும் சென்னைமாநகர் புகுந்த பின்பு சில சகோதரர்களைப் பெற்றதுண்டு;



அவர்களில் தலைவர் இங்கு என்னுடன் நிற்பவர். இவர்க்கு D. கிருஷ்ணமூர்த்தி யென்று பெயர். Free India என்னும் ஆங்கிலப் பத்திரிகைக்கு ஆசிரியர் இவர். இவருடைய நட்பினால் நான் அடைந்த—அடைகின்ற நன்மைகள் பலபலவே. சீரணிந்த தோழமை கொண்டவிதம் எம்பெருமான் திருவுள்ளத்திற்கே தெரியவரும்.

## மற்றொரு தம்பி உயர்திரு. V. N. தேவநாதன்

கீழே ஒரு தம்பியைப்பற்றித் தெரிவித்தேன். மற்றொரு தம்பி இதோ என்னருகே நிற்பவர். என்னுடைய க்ரந்தமாலை யாபீஸ் காரியங்களும் ஸத்க்ரந்த



ப்ரகாசன ஸபையின் காரியங்களும் எனக்குச் சிறிதும் விசாரமில்லாதபடி பரிபூர்ணமான பொறுப்புடன் கவனித்து வருபவர் இவரொருவரே. பலவாண்டுகளாக இவர் இராமனுக்கு இலக்குமணன்போல் உள்ளமூறிய உவப்புடனும் அன்புடனும் எனக்குப் புரிந்துவரும் பணிவிடைகள் பலவாயிரம் ரூபா சம்பளம் கொடுத்தாலும் வேறொருவரால் செய்யஇயலாது. இவரைப்பற்றி ஸ்ரீராமாநுஜனில் பலகால் எழுதியிருக்கின்றேன் எவ்வளவெழுதியும் எனக்குத் த்ருப்தியில்லை. இவர் என் குடும்பத்தில் ஒருவரென்றே நினைக்கத் தகுதியுடையவர் சென்ற பங்குனித் திங்களில் 5௨ இவருடைய இளைய மகளுக்குத் திருநாகையருகில் திருமணம் நடந்தேறியது. அப்போதைய படங்களையும் அன்பர்கள் கடாட்சித்து உகப்பது. அப்படங்கள் அடுத்த பக்கங்களில்.

# தன் சரிதைச் சுருக்கத்தின் அநுபந்தம்.

— ஸ்ரீமான் D. ராமஸ்வாமி ஐயங்காரை விளித்து எழுதியவை —

அடியேனுடைய ஸம்ஸ்க்ருதநூல்கள் பெரும்பாலும் வட இந்தியாவில் பரவுகின்றன; தெலுங்கு நூல்கள் ஆந்திர மாகாணத்தில் பரவுகின்றன. தமிழ் நூல்கள் தென்னுட்டில் மட்டுமன்றிக்கே எந்நாட்டிலும் பரவி வருகின்றன. நம் நாட்டினர் எங்கும் பரந்திருப்பதனல். இத் தமிழ் நூல்களில் அத்யந்தம் லோகோபகாரகங்களான வியாக்யாநாதி க்ரந்தங்கள் பலவற்றினிடையில் பரபக்ஷப்ரதிக்ஷேபநூல்கள் ஸமய விசேஷங்களில் தோன்றி இவையே மேம்பட்டுக் காணப்படுகின்றன. உண்மையில் அடியேனுடைய மறுப்பு நூல்களுக்குக் காரணபூதர்கள் பலர் எனினும், அவர்களுள் ஸ்ரீ D. ராமஸ்வாமி ஐயங்கார், B. A., B. L., முதல் ஸ்தானம் வஹிப்பதாக அடியேனுடைய அபிப்ராயம். ஏற்கெனவே ஸ்ரீ ராமாநுஜன் 236ல் அவரையே முன்னிலையாக்கி யெழுதியிருந்தவற்றின் ஸாரமாக இஃது எழுதுகிறேன் (28-9-1944) தாரணஹ புரட்டாசித் திருவோணத்திலிருந்து தேவரீருடைய ஆசார்யாபசாரங்கள் அநுவர்த்தித்து வருகின்றன. உலகம்வாழ தேசிக ஸார்வபௌமருடைய திவ்யசரித்திரத்தை யெழுதி வெளியிடவேண்டியது அவசியமென்பதை யாரும் மறுக்கமாட்டார். தேவரீர் ஸ்ரீ தேசிக வைபவம் என்று பெயரிட்டு, உலகம் போற்ற நின்ற மஹாசார்யர்களைத் தூஷிப்பதுதான் தேசிகவைபவப்ரபஞ்சன மென்று கருதிச் சில விடங்களில் அவ்வுத்தமாசாரியர்களின் திருநாமத்தை ஸ்பஷ்டமாகக் கூறியும், சில விடங்களில் மறை முகமாகவெழுதியும் அபசாரப்பட்டிருப்பது அஸஹ்யாபசாரங்களில் பரிகணிக்கத் தக்கதாகவுள்ளது.

— அழகிய மணவாளப்பெருமாள் நாயனரை நிந்தித்தது —

2. அதில் பக்கம் 6ல்—"ஸ்வாமி தேசிகனுடைய வாழ்க்கையின் நிகழ்ச்சிகள் சரித்திர ஆராய்ச்சி முறைமையில் தக்க ஆதாரங்களுடன் நமக்குக் கிடைத்தில." என்று பிராமாணிகமாக எழுதிவிட்டு, நிராதாரமாகச் சில மஹாசார்யர்களை வலுவில் பிடித்திழுத்து "விரலுக்குத் தகாத வீக்கம்" என்னும்படியான முறையில் நிந்தித்திருக்கிறீர், அதில் பக்கம் 10ல் "அஸூயுக்களால் வந்த இன்னல்கள்" என்று தலைவரியிட்டு, அநுவதிக்கு மவர்களுக்கும் பாபம்கூடுபூரிக்கும்படி யெழுதியிருக்கிறீர். அதாவது "ஸ்வாமியிடம் பொறாமை கொண்டவருள் ஒருவரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனர் இவருடன் போட்டியிட்டதன் பலனுக ஸ்வாமியிடமிருந்து ஸ்ரீ பாதுகாஸஹஸ்ரம் என்ற க்ரந்தம் தோன்றியது" என்றெழுதியுள்ளீர் அழகிய மணவாளப் பெருமாள் நாயனரென்னு மாசிரியர் யார்தெரியுமோ? வடக்குத்திருவீதிப்பிள்ளையின் திருக்குமாரரும், பிள்ளைலோகாசாரியர் திருத்தம்பியாரும், ஆசார்யஹ்ருதயாதிக்ரந்த காரருமாவர். உமது ஆசார்ய குடும்பஸ்தரான

சாமா திருமலைதாதாசாரியர் வாதிகேஸரி ஜீயர் பிணங்கியதாக எழுதியுள்ளார். நீர் அவரைவிட்டு தேசிகன் காலத்திலில்லாதவரான அழகிய மணவாளநாயனுரைப் பிடித்துக்கொண்டீர். "ரங்காஸ்தாநே ரஸிகமஹிதே ரஞ்ஜிதாசேஷசித்தே வித்வத்ஸேவா விமல மநஸா வேங்கடேசேந" என்று ஸ்வாமி தம்மாலேயே பொறித்து வைக்கப்பட்டது. தம் மனம் முன்பு மலீமஸமாயிருந்ததென்றும், ரங்காஸ்தானம் சேர்ந்து ரஸிகவித்வத்ஸேவாபாக்யம் பெற்ற பின்பே வைமல்யமடைந்ததென்றும் ஸந்தேஹ விபர்யயமற அருளிச்செய்திருக்க, அவ்வாசார்யர்களோடு சண்டையிட்டாரென்று ஒருவர் மாறி ஒருவராக எழுதிக்கொண்டே காலங்கழிப்பது உங்களுக்கு ஒரு போதுபோக்கா யிருக்கின்றதந்தோ! ஏதேனுமொரு மூலையில் ஒருவரிருவராவது வஞ்சிக்கப்படட்டுமேயென்பது ஒன்றேயாயிற்று உங்களுடைய ஆசாமோதகம். இந்த நப்பாசையோ தப்பாசையோ நம்முடைய வாழ்நாளிலும், பிறகு ஒரு நூற்றாண்டுவரையிலும் உங்களுக்கு நிறைவேறாதென்பது திண்ணமாக எண்ணத்தக்கது.

— தேசிக சரித்திரத்திற்கு மூலாதாரம் ஏதுமில்லை யென்பது —

3. நீர் எழுதுகிற விஷயங்களுக்குச் சிறந்த ஆதாரமிருப்பதாகவும் அதற்கு குருபரம்பரையென்று பெயராகவும் காட்டிவிட்டீர். குருபரம்பரா ப்ரபாவம் என்று சொல்லத் தெரியாத அவிவேகிகள் குரு பரம்பரையென்று சொல்லுகிறரீதியிலே நீரும் எழுதிவிட்டீர். இது வொரு பெரியவிஷயமன்று. குருபரம்பரா ப்ரபாவமென்றே உமக்கு விவக்ஷிதமென்று கொள்வோம். 'குருபரம்பரையில்' என்னாதே 'குருபரம்பரைகளில்' என்றமையால் நீர் செய்யும் ஆசார்ய நிந்தைகளுக்கு ஆதாரமான சுவடிகள் பல இருப்பதாகத் தெரிவித்தீராகிறீர். 'காணலாம். என்னாதே 'விளங்கக்காணலாம்' என்றபடியாலே அந்தச் சுவடிகளின் பெருமையும் தெரிவித்ததாகிறது குருபரம்பரை கிடையாதென்றும், அச்சிட்டிருப்பவை கல்பிதங்களென்றும் (திவம் கதர்களான) ஸ்ரீமத்தன்றி பட்டப்பாதாதாசாரியர் ஸ்வாமி, சாமா, திருமலைதாதாசாரியார், சேட்லூர் நரஸிம்ஹாசாரியார் என்னுமிவர்கள் கல்வெட்டுச்செய்து அச்சிட்டிருப்பதெல்லாம் அபத்தம் என்கிறீரா? இது தெரியவேணும். இது வொரு முக்கியமான விஷயம்.

— நீங்கள் தூஷிக்கும் பூர்வாசாரியர்களின் உண்மைப் பெருமை —

4. ஸ்ரீரங்கத்தில் ஆசார்யகம் செய்துவந்தவர்களும் அவர்களின் சிஷ்யர்களும் ஸ்வாமி தேசிகனுக்குப் பல்வகையான இடையூறுகளையும் ஹிம்ஸைகளையும் புரியத் தலைப்பட்டதற்கு மூன்று காரணங்களெழுதியிருக்கிறீர். 1. அவ்வாசார்ய ஸார்வபௌமர்கள் கற்காத ஸ்ரீ பாஷ்யாதிகளை இவர்கற்றுப் பன்முறை ப்ரவசனம் செய்துவிட்டாரென்றும், 2. அவ்வாசார்யவர்யர்கள் கற்ற பிரபந்தங்களிலும் இவர் தெளிந்த ஞானத்துடன் திகழ்ந்தாரென்றும். 3. அந்த ப்ரபந்தங்களிடத்தில் அவர்களைவிட அதிகமான ஆதரத்தை இவர் செலுத்திவந்தாரென்றும் ஆக இம்மூன்று காரணங்களைக்காட்டி இவற்றால் [இப்பெருமைகளைப் பொறுமல்] அவ்வாசார்யர்கள் இவரைப் பரிபவப்படுத்தவும் ஹிம்ஸிக்கவும் தலைப்பட்டார்களென்

றெழுதியிருக்கிறீர். ஸதாசார்ய ஸேவையும் ஸதுபதேச ச்ரவணபாக்யமு மில்லாமையாலன்றோ நீர் இங்ஙனே அபசாரப்பட்டிருக்கிறீர். நான் ஆர்ஜவத்தோடு உம்மைத் தெளிவிக்கிறேன். "ஸ்ரீரங்கத்திலிருந்த சில ஸ்ரீ வைஷ்ணவர்கள்" என்று ஸாமான்யமாக எழுதியிருந்தீராகில் தொலையட்டுமென்று விட்டுத் தொலைக்கலாம். அங்கு ஆசார்ய பீடத்தை அலங்கரித்திருந்த மஹாசார்ய ஸார்வபௌமர்களின் மீது உம்முடைய அஸூயாப்ரவாஹம் எறிப்பாய்ந்திருக்கிறது. அவ்வாசார்யர்கள் என்றைக்கோ திருநாட்டுக் கெழுந்தருளிவிட்டாலும் உலகம் நிறைந்த புகழ்வாய்ந்த அவர்களது திவ்ய ஸ்ரீஸூக்திகள் மறையவில்லையே. ஸ்வாமி தேசிகனும் சிரஸாவஹித்து தம்முடைய க்ரந்த நிர்மாணங்களுக்கும் வழிகாட்டியாகக்கொண்ட அந்த திவ்ய க்ரந்தங்களை ஸேவிக்கு முலகமெல்லாம் "நாந்ருக்வேத விநீதஸ்ய நாயஜுர் வேததாரிண:, நாஸாம வேதவிதுஷச் சக்ய மேவம் ப்ரபாஷிதும்; நூநம் வ்யாகரணம் க்ருத்ஸ்நம் அநேந பஹுதா ச்ருதம்." என்று சக்ரவர்த்தி திருமகனர் திருவடிதிறத்தில் சொன்னதெல்லாம் இவ்வாசிரியர்களுக்கே யொக்குமென்று •கண்ணுங் கண்ணீருமாயிருந்து கொண்டாடா நின்றுற. ஸ்ரீரங்கத்தில் ஆசார்ய பதவியை யலங்கரித்த ஒவ்வோராசாரியரும் "இதிஹாஸ புராணங்களை யதிகரித்து, பரபக்ஷ ப்ரதிக்ஷேபத்துக்குடலாக நியாய மீமாம்ஸைகளையும் அதிரித்துப் போது போக்கு அருளிச்செயலிலேயா யிருந்தவர்கள்" என்று பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்யும்படியான அதிசயத்தைப் பெற்றிருந்தவர்களென்பதை நீர் இப்பிறப்பிலறிந்திலீராகிலும் மறுபிறவிகளிலறியப் பெறுவீர். அத்தகைய மஹாசார்யர்களின் திவ்ய ஸ்ரீஸூக்திகளைக் காதால் கேட்கவும் கண்ணல் காணவும் பாக்கியம் பெருததற்கு ஆயுச்சேஷமெல்லாம் அநுதபிக்க வேண்டுமத்தனை.

— போட்டிச்சண்டை யென்பதன் அஸமஞ்ஜஸத்தன்மை —

5. 'குழாங்களாயடியீர்! உடன் கூடி நின்ருடுமினே' என்ற விடத்திற்கு வியாக்கியான மிட்டருளின ஆசார்ய ஸார்வபௌமர்கள் "அவன் பக்கலிலே நிக்ஷிப்த(ஸ)பரராயிருக்கிற நீங்கள் நால்வரிருவர் இங்கிருக்கும் நாலு நாளும் த்யாஜ்யமான அர்த்த காமங்களைப் பற்றிச் சீறுபாறென்றிராதே நம் பெரிய குழாத்திலே போய்ப்புகுமளவும் ஒருமிடரு யநுபவிக்கப் பாருங்கோள்" என்றருளிச்செய்யா நின்றுர்கள்' இப்படிப்பட்ட உதாரஹ்ருதயர்களை, நீர் அஸூயுக்களென்று நெஞ்சால் நினைப்பதும் மஹாபசாரமாயிருக்க, எழுதிவைப்பதும் செய்தீரே; மறுமறு பதிப்புகளும் செய்து போருகிறீரே. யதிராஜ ஸப்ததியில் இந்த ச்லோகம் தெரியுமே உமக்கு—"ஸ்வஹஸ்தேநோத்க்ஷிப்தைஸ் ஸ கலு நிஜ காத்ரேஷு பஹுலம் கலத்பிர் ஜம்பாலைர் ககன தலமாவிம்பதி ஜட:" என்பது; இந்த நிதர்சனம் உமக்கே பொருந்துமையா! நீரெழுதின ப்ரக்ருத தேசிக வைபவத்தில் (பக்கம் 11 ல்) "அத்வைத க்ரந்தங்களுக்குப் போட்டியாக யாதவாப்யுதயம் ஸங்கல்பஸூர்யோதயம் முதலிய க்ரந்தங்கள் அவதரித்தன" என்றெழுதியுள்ளீர். இது ஸ்வாமிக்கு எவ்வளவு அவஹேளனமான வார்த்தை என்பதை அந்தோ அறிந்திலீரே. ஆசார்யர்கள் ஸ்வாநுபவ பரீவாஹமாக க்ரந்தங்களையருளிச் செய்பவர்களேயன்றி, போட்டியிடுவதென்பது எங்கேனு முண்டா? "சங்கரபாஷ்யத்திற்குப் போட்டியாக ஸ்ரீ பாஷ்யமிட்டருளினர்" என்ருற் போன்ற பங்க்திகளை ஓர் ஆசார்ய

ராவது எழுதியிருக்கக் கண்டீரோ? நீரொருவர் தவிர வேறொருவர் இப்படி யெழுதக் கற்றவருளரோ? இதேயிடத்தில் தானே அதையும் எழுதியிருக்கிறீர்; எதையும்? "ஸ்வாமியிடம் பொறுமை கொண்டவருள் ஒருவரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் இவருடன் போட்டியிட்டதன் பலனாக..." என்பதையும். போட்டியிடுவதும் போட்டிச் சண்டைக்கு வருவதும் கி. பி. 1800 க்குப் பிறகு உங்கள் திரளின் காரியமே யொழிய, பரமஸத்வநிதியான ஸ்வாமி தேசிகனோ அவருடைய மதிப்பிற்குரிய ஆசாரியர்களோ போட்டியிடுவதென்பதை நெஞ்சாலும் நினையார். கனவிலும் கருதார். இந்தச்சொல்லே மிக அஸமஞ்ஜஸம்.

— பூர்வாசார்ய ஸ்ரீஸூக்தியமுதவெள்ளங்கள் அவதரித்த நேர்மை —

6. உலகில் போட்டியிடுவதென்பது ரஜஸ்தமோகுண வச்யர்களின் காரியமே யொழிய ஸாத்விகர்களின் காரியமன்று என்பதைக் கூடவா நீர் அறியீர்? நம்முடைய புனிதமான நூற்களில் போட்டியென்கிற அஸப்யச் சொல் காணவே முடியாதது. அஹம்பாவத்தோடு செய்யும் துர்வழக்கைப் போட்டி யென்பர்கள். இதை முந்துற முன்னம் தேசிகன் திருமுடிமேல் ஏற்றிவிட்டு அடுத்தபடியாக அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் திருமுடிமீதும் ஏற்றிவிட்டீர். பாத்ரபத்யப் போட்டி, வாழிப் போட்டி ப்ரபந்தப் போட்டி யென்று பல போட்டிகள் பிற்காலத்து உங்களில் ஏற்பட்டதுபோல முற்காலத்திலுமுண்டென்று காட்டமுற்பட்டீராந்தோ! யாதவாப்யுதய மென்கிற மஹாகாவியம் ரஸகனமென்பது மட்டுமன்றிக்கே ஒவ்வொரு சுலோகமும் அனுபவம் வழிந்த சொல்லல்லவா? இதைப் போட்டி நூலென்று சொல்லத் துணிந்தபடியெங்ஙனே? 'ஸ்ரீவசன பூஷணாதி ரஹஸ்யங்களுக்குப் போட்டியாக ரஹஸ்யத்ரய ஸாராதிகள்; ஆழ்வார்களின் திவ்யப்ரபந்தங்களுக்குப் போட்டியாக தேசிகப்ரபந்தங்கள்; சரணாகதி கத்யாதிகளுக்குப் போட்டியாக ரகுவீரகத்யம்; பஞ்சஸ்தவாதிகளுக்குப் போட்டியாக ஸ்தோத்ரங்கள்; ஸித்தித்ரய வேதார்த்தஸங்க்ரஹாதிகளுக்குப் போட்டியாக ந்யாயஸித்தாஞ்ஜநாதிகள் என்றெழுதிக் கொண்டு போவீர் போலும். ஸ்ரீமந்நாத முனிகளின் திவ்ய ஸூக்தியவதாரத்தைப் பற்றி யருளிச்செய்யும் ஆளவந்தார் "அபரிமிதாச்யுத பக்தித்தவஜ்ஞாநாம்ருதாப்தி பரிவாஹசுபைர் வசோபி:" என்றருளிச் செய்கிறார். அங்கு ஸ்தோத்ரபாஷ்யத்தில் ஸ்வாமி தேசிகன் என்ன ஸாதிக்கிறாரென்று பார்க்க வேண்டா; மூல ஸ்ரீஸூக்தியினழகு போதுமே. நீர்பால் நெய்யமுதாய் நிரம்பின வேரி நெளிக்குமாபோலே ஜ்ஞானம்ருதாப்தி நிமிகிற வாய்கரை மிடைந்து மொழிபட்டோடும் கவியமுதவெள்ளத்தைப் போட்டிக்கிட்ட கவடியாக எழுதுகிறீராந்தோ!

— சீரொன்று தூப்புல் தனியனின் தடுமாற்றம் —

7. வியப்பினும் வியப்பாக வொன்றெழுதியுள்ளீர்; "ஸ்வாமி சந்தமிகு தமிழ் மறையோனென்று தம்மைப் பேசிக்கொண்ட சீர்மைக்கே தனியாகவொரு தனியனை ஸமர்ப்பிக்க வேண்டாவோ? தமிழில் *சீரொன்று தூப்புல்* என்னுந் தனியனைப் பிள்ளை லோகாசார்யர் ஸமர்ப்பித்தார் என்பதும் ப்ரஸித்தம்" என்பதாக. D. R. ஸ்வாமிந்! தத்வமுக்தாகலாப வியாக்கியானமான ஸர்வார்த்தஸித்தியில்

'மரீசிகாம்பலிஸ்நாத: கபுஷ்பக்ருதசேகர:, ஏஷ வந்த்யாஸுதோ யாதி சசச்ருங்க தநுர்த்தர:,'' என்றோர் அற்புதமான சுலோகம் உதாஹரித்தருளுகிறார் தேசிகன். அதுதான் இங்கு நினைவுக்கு வருகின்றது. தேசிகப்பிரபந்தங்களென்று நீங்கள் வைத்துக் கொண்டிருப்பவற்றில் ஒன்றிலாவது தூப்புலென்னுஞ்சொல் ஏறியிருக்கிறதாவென்று பார்க்கலாகாதா? அத்திகிரிமாகாத்மியத்தை ''மெய்விரத நன்னிலத்து மேன்மையேத்தி வேதாந்தவாசிரியன் விளங்கினனே'' என்று ஸ்வாமிதாம் தலைக்கட்டியான பின்பு ''சீராருந்தூப்புல் திருவேங்கடமுடையான்'' என்றொரு வெண்பாவைப் புனைந்திருக்கிறீர்கள். கீழ்ச் செய்யுளில் இல்லாத விஷயம் இதில் ஏதேனுமுண்டோ வென்று பார்த்துத் தெளிய முடியவில்லையா உமக்கும்? பிரபந்த சாரத்தைப் பற்றிப் பின்னையும் கிளற வேண்டுமோ? அப்பய தீக்ஷிதாக்ரஹாரத் தூப்பலை தென்திருவரங்கம் கோயில் கொண்ட பிள்ளைலோகாசார்யரும் தெரிந்து கொண்டு தனியனிட்டருளினரென்பது வெகு அழகியது. ஸ்ரீமான் அய்யாக்ருஷ்ண தாதாசாரியார் சொல்லிக்கொண்டிருந்தார் — "அண்ணாவைப்பங்கார் பழநடைவிளக்கத்தில் ரங்கநாதன் தூப்புல்பிள்ளையை முனிந்தோமென்று நிக்ரஹித்ததாக எழுதியிருக்கையாலே தூப்புலென்பது ஸ்ரீரங்கநாதன் திருவாக்கிலேயே வந்ததாக ஒப்புக்கொண்டு தீரவேண்டும்'' என்று. வாஸ்தவம்; இத்தகைய ப்ரபல ப்ரமாணத்தினால் வெற்றி பெற்றுவிடலாம். இதனால் ஸ்ரீரங்கநாதன் முனித்ததாகச் சொல்லப் படுவதொன்றே உண்மையெனத் தேறிநிற்கும். அப்பயதீக்ஷிதர் தேசிகனுக்கு ஸமகாலத்தவரென்றும், அப்போதே தும்பைவனமேற்பட்டு தூப்பலென்கிற கொச்சைநாமமும் வழங்கிவந்ததென்றும் சொல்லியு மெழுதியும் தீர்ந்தாலொழிய உய்யும்வகையில்லையென்று திடமாகக்: கொள்ளீர். திருத்தண்கா என்கிற திருநாமம் ஆழ்வார் திருவாக்கில் வந்திருக்க அதைத் தவிர்க்க காரணமென்னோ?

— எம்பெருமானாருடைய அருளிச் செயலவகாஹனம் —

8. "பாஷ்யகாரர் அநுஷ்டித்துக் காட்டிய ப்ரபத்தி மார்க்கத்தைத் தூஷித்தும் வந்தார்கள்'' என்கிறீர். 'அந்த ப்ரபத்திமார்க்கம் எது? அதை தூஷித்தவர்கள் யாவர்? தூஷித்த விதம் யாது? என்று கேட்டால் ஒன்றுக்காவது விடையிறுப்பீரோ? "லவணவணிஜ: கர்ப்பூரோத்கம் கிமித்யபிமந்வதே." என்ற யதிராஜ ஸப்ததி ஸூக்திதான் நினைவுக்கு வருகிறது. இத்த ஸந்தர்ப்பத்தில் தன்னளவறியாதே ஒன்றெழுதியுள்ளீர்; (அதாவது—) ''மேலும் ஸ்ரீ பாஷ்யகாரர் ஆழ்வார்களின் அருளிச் செயல்களைத் தமது ஏகாந்த அநுபவத்திற்கு விஷயமாக்கி வந்தாரேயன்றி அவ்வருளிச் செயல்களைப் பற்றிச் சிறிதளவும் தம் க்ரந்தங்களில் ப்ரஸ்தாவிக்கவில்லை! அதனால் உபநிடதங்களும் திவ்யப்ரபந்தங்களும் தனித்தனியாக வெவ்வேறு கட்சியாரால் கொண்டாடப்பட்டுவந்தனவேயன்றி அவற்றின் ஒற்றுமை உலகில் நன்கு அறியப்படவேயில்லை.'' என்பதாக. ஐயோ! எம்பெருமானார் திவ்ய ப்ரபந்தங்களைத் தமது ஏகாந்தாநுபவத்திற்கு வைத்துக் கொண்டிருந்தாரென்றால் என்ன அர்த்தமையா? ஸ்வாமி திருமாலையாண்டான் பக்கலிலே திருவாய்மொழிப்பொருள் கேட்டதாக தேசிகன் ஸம்ப்ரதாய பரிசுத்தியிலும் குருபரம்பராஸாரத்திலுமாக இருமுறை பொறித்து வைத்துள்ளார். ஒருவர்க்கும் தெரியா

மல் இருளிலே சென்று கதவடைத்துக்கொண்டு ஏகாந்தமாகக் கேட்டு வந்தாரென்கிறீரா? திவ்ய தேசங்களில் நடைபெறும் இயல்கோஷ்டிகளில் அந்வயியாதே ஒதுங்கிவர்த்தித்தாரென்கிறீரா? 'பல்லாண்டு பல்லாண்டு' என்று தமிழைச் சொன்னால் வாய் வெந்துபோமென்று "தந்தஸம்வத்ஸாம் தந்தஸம்வத்ஸரம்" என்று சொல்லிக் கொண்டிருந்த உங்களினத்தவர்களைப்போல் உடையவரும் சொல்லிக் கொண்டிருந்தாரென்கிறீரா? "தமிழ் மறைகளாயிரமும் ஈன்ற முதல் தாய் சடகோபன், மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமானுசன்" என்கிற திருவாய்மொழித்தனியனை வீம்புக்காகவாவது சொல்லி வருகிறீர்களே, தமிழ்மறைகளாயிரத்தையும் இராமானுசன் மொய்ம்பால் வளர்த்த விதம் யாது? என்று கேட்டால் வாய் திறக்கவல்லீரோ? உடையவர் வாழிதிருநாமத்தில் "மறையதனில் பொருளனைத்தும் வாய் மொழிந்தான் வாழியே, மாறனுரை செய்த தமிழ் மறை வளர்த்தோன் வாழியே" என்று வைணவவுலகமெல்லாம் அநுஸந்தித்து வருகிறது. இவ்விரண்டுவாக்கியங்களினால் உடையவருடைய உபய வேதாந்த நிர்வாஹகத்வம் அற்புதமாகப் பேசப்பட்டது. உடையவருடைய ஸகல ப்ரபாவங்களையும் கேட்டார்வாய்க் கேட்கையன்றிக்கே ஸாக்ஷாத்தாக அநுபவித்த திருவரங்கத்தமுதனார் "நாட்டிய நீசச்சமயங்கள் மாண்டன, நாரணனைக் காட்டிய வேதம் களிப்புற்றது, தென்குருகைவள்ளல் வாட்டமிலா வண்டமிழ் மறைவாழ்ந்தது மண்ணுலகிலீட்டிய சீலத்திராமானுசன்றன் இயல்வுகண்டே" என்றார் நூற்றந்தாதியில். எம்பெருமானார் எங்கிருப்பர்? என்ன; "திருவாய்மொழியின் மணந்தருமின்னிசை மன்னுமிடந்தொறும் புக்குநிற்கும் குணந்திகழ் கொண்டலிராமானுசன்" என்றார் அவ்வமுதனார் தாமே.

இதையெல்லாம் நாம் த்ரமிடோபநிஷத் ப்ரபாவ ஸர்வஸ்வத்திலே நீருமுகக்கப் பாரதமும் ராமாயணமுமாகப் பண்ணியுரைத்தோம். இவ்வளவையுங் கண்டு வைத்து "பாஷ்யகாரர் அருளிச்செயல்களைக் கதவு மூலையில் அநுபவிக்க வைத்துக் கொண்டிருந்தார்" என்றெழுதுகிறீர். "முண்டத்வாத் மோஷகத்வாத் முடுமுடு மடவாதாரகத்வாத் தடத்வாத் தண்டத்வாத் பூபுஷத்வாத்". போன்ற சுலோகங்களை எம்பெருமானார் ஸாதிக்க வில்லையென்பது வாஸ்தவம். எம்பெருமானார் மட்டுமா? ஆளவந்தார், பிள்ளான், ஆழ்வான், பட்டர், எங்களாழ்வான், அம்மாள், அப்புள்ளார்....யாருமே ஸாதிக்க வில்லையன்றோ. ஏன் ஸாதிக்கவில்லை? அவர்களுக்கு உபயவேதாந்த ஸங்கமனம் செய்ய சக்தியில்லாமையாலே யென்றால் ஆமாம் ஆமாம் என்று தலையாட்டுவீரா?

— பிராட்டி வைபவத்தில் அசைக்கவொண்ணாத தேசிக ஸித்தாந்தம் —

9. தேசிகாவதாரகாரண நிருபணத்தில்—"பலர்; பிராட்டியின் பெருமையை மறைத்து அவ்விஷயத்தில் பல தவறான ஸித்தாந்தங்களை ப்ரவசனம் செய்துவந்தனர்; அவற்றைத் திருத்திப் பிராட்டியின் உண்மைப் பெருமையை உலகில் ஸ்தாபிக்கவேண்டியதும் அவசியமாயிற்று.......இதற்காகவும் தேசிக னவதாரம் அவசியமாயிற்று" என்றெழுதியுள்ளீர். உமக்கு இந்தமருள் 1944 வரை இருந்திருக்கலாம். அதன் பிறகு என்னுடைய பல நூல்களினால் இந்த மருள் அறவே அகன்

திருக்குமென்று நம்புகிறேன்; நம்புகிறேனென்பது போதாது, சபதமிட்டுச் சொல்லுகிறேன். இந்த மருள் உமக்குமட்டுமன்று; உமது வகுப்பில் பெரும் பாலார்க்கு உள்ளதே; அனைவர்க்கும் இது மாய்ந்தொழிந்ததென்பது உமக்குத் தெரியாததன்று. ஸ்ரீமத் கோழியாலம் ஸ்வாமியின் காலத்தில் தொடங்கின இந்த சர்ச்சை அப்போதே தலை மடிந்திருந்தும் இடை இடை இடையில் பலப்பலர் கிளப் பிப் பங்கப்பட்டொழிந்தனர். முடிவாக ஸ்ரீ உ. வே. மதுராந்தகம் வித்வான் வீர ராகவாசார்யர் ஸ்வாமிக்கு அடியேனளித்த ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்யமும் வைதிக மநோஹரா ஸஞ்சிகைகளும் தேவரீர்க்கும் கிடைத்திருக்கின்றன; அவற்றின் ஸாரம்—பிராட்டிக்குப் புருஷகாரத்வந்தையும் எம்பெருமானுக்கு மோக்ஷப்ரதத்வத் தையும் ஸ்தாபித்த ஆசார்யர்களில் முன்னணியில் நிற்பவர் ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன் ஒருவரே யென்பதாம். இப்படி நாமெழுதுவதைக் காணும்போது கண் கலங்கும்; திருக்கண் சிவக்கும். வெகுவெகு ஸம்ப்ரமங்கள் விளையும், என்ன பண்ணுவது? கீதையில் "தஸ்மாத் அபரிஹார்யேர்த்தே ந த்வம் சோசிதுமர் ஹஸி" என்கிற சுலோகம் அழுவார்கண்ணைத் துடைக்கத் தோன்றியது. அதையே இங்கு நினைவூட்டுகிறேன். நான் கொண்டாடும் பரமப்ராமாணிகரான வொரு வடகலை வித்வான் இதையெல்லாம் பரிபூர்த்தியாகக் கடாக்ஷித்துவிட்டு எழுதினர்—"மிகவும் டேஞ்ஜரான நோயின் சிகித்ஸைக்கு அமெரிக்கா ஸர்ஜன் வந்துதான் என்ன செய்யமுடியும்? பீஸைப்பெற்று ஜோப்பியில் போட்டுக் கொண்டு பேசாதே திரும்புவதுதான் செய்யமுடியும்" என்றெழுதினர்.

— D. R. ஐயங்காருக்குச் சில முக்கியமான உத்போதனங்கள் —

10. குலப்பெருமை, அம்மாளின் அநுக்ரஹம், வித்யாப்யாஸம், திருவயிந்திரபுரம் எழுந்தருளுதல், இல்லறம், காலக்ஷேபம்ஸாதித்தல், வடதேசயாத் திரை—என்று மகுடங்களிட்டு நீர் எழுதியுள்ள ஸ்வாமிவைபவங்களை எவ்வளவு மேம்பட எழுதிக்கொண்டாலும் ஆக்ஷேபம் தோன்றுமோ? மூலாதாரமில்லாமல் எழுதும் விஷயங்களானாலும் இதராசார்ய தூஷணத்தில் புகாமல் ஸ்வாமியின் பெருமையை எவ்வளவு ஏற்றிப்பேசுவதாயிருந்தாலும் உம்மைக்காட்டிலும் மிக மிக அதிகமாகவே மகிழ்ச்சியடைவேன். நானெழுதாத பெருமையுண்டோ?

அற்புதச்செயல்கள் என்று மகுடமிட்டு "சிலருக்கு ஸ்வாமி விஷயத்தில் பொருமையும் ஏற்பட்டது; அவர்கள் இவரைப் பரிபவத்திற்குள்ளாக்க முயற்சிகள் செய்தார்கள்" என்றிங்ஙனே யெழுதிப் போருகிறீர்; இப்படியெழுதுவதை ஸங் கல்ப பூர்வகமாக விட்டுத் தொலைக்கும்படிக்கு மிக மிகப் பிரார்த்திக்கின்றேன். எழுதுவதை மட்டுமன்று, நெஞ்சால் நினைப்பதைக்கூட ஸவாஸநமாக விட்டுத் தொலைக்கவேண்டும். ஜநிதர்மாக்களுக்கு க்ஷுத்பிபாஸைகள் போல் ஈர்ஷ்யா ஸூயைகளும் இயற்கையில் பிறப்பன. இவை அவர்ஜநீயங்கள். இத்தகைய துர் ஜனங்கள் ஸ்வாமிஸகாசத்தில் அணுகவும் மாட்டார்கள்; அணுகினாலும் ஸ்வாமி அன்னவர்களைக் கண்ணெடுத்தும் பாரார். க்ஷுத்ரர்களோடெல்லாம் போட்டி யிட்டாரென்று மீண்டு மீண்டுமெழுதி ஏடுகளை நிரப்புவது இனி வேண்டா; இது அறவே மறக்கத்தக்கது; இது மஹாபாதகத்திலும் கொடிதுகாணும்.

"பிரதிவாதிகளை ஜயித்தல்" என மகுடமிட்டு எழுதுகையில் எவ்வளவு ஆசார்யாபசாரத்தை மூட்டை கட்டிக்கொண்டிருக்கிறீரந்தோ! "அக்காலத்தில் ஸ்ரீரங்கத்தில் ஆசார்யகம் செய்து கொண்டிருந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் திவ்யப்ர பந்தத்தை மட்டும் அதிகரித்து ஸ்வகோஷ்டியில் உபந்யாஸம் செய்ய வல்லவர் களாக மாத்திரமிருந்தார்களேயன்றி ஸ்ரீபாஷ்யாதி க்ரந்தங்களைப் பரிசயம் செய்து பிறமதத்தினரோடு வாதம் செய்ய உரியராக இல்லை; ஆகவே காஞ்சீபுரத்தில் போட்டிச் சண்டையிடுவதற்கென்றே பிறந்த ஸர்வதந்த்ரஸ்வதந்திரரை ஸேவிக் கக் கருதின தென்னரங்கன் தன்னிடம் வரவழைத்துக் கொண்டான்'. என் றெழுதியிருக்கிறீர். 'அஸ்தாநே செவி கொடுத்ததன்பயனன்றோவிது.

ஸ்ரீ பாஷ்யமென்றால் என்ன? அது வெளுப்பா கறுப்பா என்றுகூட அறிய கில்லாத நீர் ஸ்ரீரங்கத்தில் ஆசார்யபதவியில் வாழ்ந்த பெரியார்கள் ஸ்ரீபாஷ்ய மறியாதவர்கள் என்றும், திவ்யப்ரபந்தம் மட்டும் கற்றவர்கள் என்றும் கை கூசாமல் மனங் கூசாமல் எழுதுகிறீர் 650 ஆண்டுகட்கு முன்னே வாழ்ந்த மஹான் களின் யோக்யதையைப் பற்றியெழுத நீரா அதிகாரி? *ப்ராரப்தம் உத்தம குணா ந பரித்யஜந்தி* என்பதற்கு உத்தம சீலர்களையும் ப்ராரப்தகருமம் விடாதென்று பொருள் கூறி ப்ராரப்த பண்டிதரென்று கோஷ்டிபுரம் ஸ்வாமியால் விருது சாத் தப் பெற்றிருந்தவொருவருடைய உபதேசமன்றோ உம்மை இப்பாடுபடுத்துகிறது. இந்த துருபதேசங்களெல்லாம் பலர்க்கு என்றைக்கோ மாண்டொழிந்தனவே.

— ஸ்ரீபாஷ்யகார ஸ்ரீஸூக்தியை அஸ்வரஸமென்ற விஷயம் —

11. நீதிமன்றங்களில் பெட்டிமேலேற்றி "ஸர்வசக்தியுள்ள ஸ்வாமி முன் பாக ஸத்யமாய்ச்சொல்லுகிறேன்; நான்சொல்வதெல்லாம் ஸத்யம்; ஸத்யந்தவிர வேறில்லை" என்று சொல்லுவித்து வாக்குமூலம் வாங்குவதுபோல் வாங்கவேணு மய்யா; இன்னாரினையாரென்று பாராமல் ஆசாரியர்களை தூஷிப்பதொன்று தானே உமக்குத்தெரியும்; ச்ருதப்ரகாசிகாசார்யருட்பட ஸகலாசார்யர்களையும் நீர் தூஷித் தவர்தானே; ஸத்யமாய்ச் சொல்லும்' என்று வினவினால், நீர் ஆமாம் ஆமாம் என்ன வேணுமேயொழிய வேறொன்றும் சொல்லப்போகாதென்று நான் ஸத்ய மாய்ச் சொல்லுகிறேன். உமக்குப் பல வித்வான்களோடு பரிசயமிருக்குமே. அவர்களை நீர் கேட்கவேண்டியதாவது - ஒரு விஷயத்தை யெடுத்து 'இது அஸ்வ ரஸம்' என்று எழுதினால் அதற்கு என்ன அர்த்தம்? என்று (கேளும்'); அஸ்வரஸம் என்பதும் அஸாது என்பதும் பர்யாயம் என்று உள்ளபடியுரைப்பர்கள். அதற்கு மேல் ஸ்வாமி நியாயஸித்தாஞ்ஜனத்தில் ஸ்ரீ பாஷ்யகாரருடைய ஸூக்தியொன் றை யெடுத்து "ஏக க்ரத்த சகலாஸ்வாரஸ்யம் க்ராஹ்யம்" என்கிறாரே, அதற்கு என்ன அர்த்தம்? என்று கேளும். அர்த்தமென்ன? அனர்த்தந்தான் என்பர்கள். *யதிப்ரவரபாரதீ ரஸபரேண நீதம் வய:* *ஏரணிகீர்த்தி யிராமானுசமுனியின் னுரைசேர், சீரணி சிந்தையினோம் சிந்தியோமினித் தீவினையே* என்ற அழகு இதுதானோ? என்று கேளும். இதுதான் என்பர்கள். அதைவாங்கி முன்தானை யிலே முடிந்துகொள்ளும். உங்கள் வித்வான்களைக் கேட்கவேண்டிய விஷயங்கள் இப்படி இன்னும் அனேகமிருந்தாலும் இவ்வளவு போதுமிப்போது.

— ஸ்ரீதேசிகனுடைய ஸபா ப்ரவேசமும்—ஸபா வைராக்யமும் —

12. ஒருமருமம் உணர்ந்து கொள்ளும். ஸ்வாமி ஹயக்ரீவோபாஸனை பண்ணினபோது "ஸ்வாமிந் ஸமாஜேஷு ஸமேதிஷீய ஸ்வச்சந்த வாதாஹவபத்த சூர:" என்றும், "ஜிகீஷதோ மே கவிதார்க்கி கேந்த்ராந் ஜிஹ்வாக்ரஸிம்ஹாஸநம் அப்யுபேயா:" என்றும் கவிகளையும் தார்க்கிகர்களையும் வெல்ல வேணுமென்று ஆசை கொண்டிருந்தார். புதுக்கோட்டை, வனபர்த்தி, கத்வால், மைஸூர் முதலான ஸம்ஸ்தானங்களுக்குச் சென்று கவிகளையும் தார்க்கிகர்களையும் வென்று ஒருவாறு அவ்வாசையைத் தீர்த்துக்கொண்டிருப்பர். இதெல்லாம் ஸ்வாமி ஆசார்ய பீடத்தை அலங்கரித்தருள்வதற்கு முன்பு. அதாவது 18, 20 பிராயத்திற்குள்ளே. இருபத்தோராவது பிராயத்திலே "ச்ராவிதசாரீரக பாஷ்ய:" என்னும்படி ஆசார்ய பீடாரோஹணம் செய்த பின்பு "ஸம்பாவநா யஸ்ய ஹி காலகூட: ஸபா புஜங்கீ குணபம் தருண்ய:" என்று தேசிகதிநசர்யையில் சொல்லுகிறபடி எந்த ஸபையிலும் தலைகாட்டாதிருந்தார். இதைப்பற்றி நான் ஸபாபுஜங்கீஸர்வஸ்வமென்று 105 சுலோகங்கள் கொண்ட இரண்டு ஸர்க்க முள்ள காவியத்தை உரையோடுங்கூட தேவநாகரியிலும் தெலுங்கிலும் வெளியிட்டிருக்கிறேன். ஸங்கல்பஸூர்யோதயத்தில் ஆசார்ய சிஷ்யஸம்வாத கட்டமொன்றை அமைத்து, ஆசார்யன் 'நான் வாதத்திற்குவருவது தகாது, சிஷ்யா! நீ சென்று வென்றுவா' என்று ஆசீர்வதித்து அனுப்புகிறார்; விச்வாமித்ர முனிவர் தாம் பொருவதை விட்டுத் தாசரதிகளை இடையிட்டதையும் அங்கு உதாஹரிக்கிறார் ஆசாரியர். என்னுடைய நூல்களில் இல்லாத விவரணம் எதுவுமே கிடையாதென்பது உமக்குத்தெரியுமே. தேசிகனுக்குப் பெருமை கூறுவதென்னும் வியாஜத்தினால் அவர்க்கு லாகவமே யன்றோ நீங்கள் ஸ்தாபித்து வைப்பது. இந்த அஸந்தர்ப்பம் இனிவேண்டா.

— நிகமபரிமலத்தின் நித்யகல்யாண மஹோத்ஸவம் —

13. 'ஸ்ரீதேசிகனருளிய திவ்யஸூக்திகள்' என்று மகுடமிட்டு நிகமபரிமலம் என்றெழுதி அது லுப்தமென்றும், பக்கத்திலேயே யெழுதி முடித்திட்டீர். சில கர்ப்பங்கள் நாலாறுமாதத்தில் அபார்ஷனாவதுண்டே, அப்படியாய் விட்டதாக ஹிஸ்டரி முடித்து விட்டீர். (உமது வைபவம்-பக்கம் 13ல்) அந்த நிகமமலம் 74000 கிரந்தங்கள் கொண்டதென்றும் மிக அழகியதென்றும், திருவாறுயிரப்படிக்குப் பின் தோன்றிய பல வியாக்கியானங்களிலுள்ள தோஷங்களையெல்லாம் களைந்தொழித்த தென்றும் எழுதுகிறீர். தேசிகன் திருவாக்கில் ஆறுயிரப்படியென்றோ திருவாறுயிரப் படியென்றோ திருக்குருகைப்பிரான் பிள்ளானென்றோ பிள்ளானென்றோ ஒரு மூலையிலும் ஒரு துணுக்கையும் வெளிவந்ததாகக் காணுமையாலே அந்தத் திருவாறு யிரப்படிக்கே கண்டனமாகத்தான் நிகமமலம் தோன்றிய தென்று உண்மையை யறிவீராக. தேசிகன் தம்முடைய பகவத்விஷய காலக்ஷேபத்திற்கு நிதியாகக் கொண்ட பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியானத்தையும், பிரதிபதார்த்தம் தெரிந்து கொள்வதற்காக ஏகாந்தமாயுபஜீவித்த வாதிகேஸரியன்னீராயிரத்தையும் சிரமேற்கொண்டிருந்தாரென்பதை நான் எத்தனை நூல்களில் விரிவுக்கு அஞ்சாமல் புநருக்திக்கும் கூசாமல் விவரித்துள்ளேனென்பது நன்குகத்தெரியுமேயுமக்கு.

ஸ்ரீதேசிக திவ்யஸூக்திகளில் ஏதேனும் சுவைகண்டால் அதற்கு ஆகரம் பெரிய வாச்சான் பிள்ளை முதலானருடைய வியாக்கியானங்களேயென்பதில் ஸந்தேஹ முடையார் ஆருமில்லைகிடீர்! அங்ஙனே தேசிகனுக்குக் கண்கொடுத்த ஆசார்யர்களிடத்திலா நீங்கள் அபசாரப்படுவது. இதைப்பற்றி நீர் தீர்க்காலோசனை செய்யவேணும்.

— ஸ்ரீராமதேசிகாசார்ய சிரோமணியின் உண்மையுரை —

14. அந்நாள் தொடங்கி இடைவிடின்றி அவதரித்து வந்த என்னுடைய ஆராய்ச்சி நூல்களை உப்பிலியப்பன் ஸ்ரீராம தேசிகாசாரியர் ஆர அமர ஆராய்ந்தது பழுதுபடாமல் ஸபலமாம்படி தேசிக ரஹஸ்யப்பதிப்பில் ஸதஸ்யமாக எழுதி முகப்பிலேயே வெளியிட்டிருக்கிற பங்க்திகள்—"ஸ்ரீ தேசிகசர்த்ரம் பல்வேறு பதிப்புக்களில் வெளிவந்துள்ளது; அவற்றில் நிகழ்ச்சிமுறை, நடந்த இடம், காலம் முதலியவற்றில் வேறுபாடு காணப்படுவது உண்மையே" என்பனவாம். இவை உமக்கு உகப்புக்கு இடமாயினவோ? வெறுப்புக்கிடமாயினவோ அறியேன். நீரும் "ஸ்வாமி தேசிகனுடைய வாழ்க்கையின் நிகழ்ச்சிகள் சரித்திர ஆராய்ச்சிமுறைமையில் தக்க ஆதாரங்களுடன் நமக்குக் கிடைக்கவில்லை" என்றெழுதியிருக்கிறீர். இதை முன்னமே யெடுத்துக் காட்டியிருக்கிறேனே. இது உண்மையானாலும் இதை நீர் எழுதியிருக்கவே கூடாது. நீரும் உம்மைச்சேர்ந்தவர்களும் எழுதும் தேசிக சரித்திரங்களில் எந்தெந்த விஷயங்களுக்கு ஆதாரம் கிடைத்திருக்கிறதென்று கேட்டால் "ஸ்ரீ ரங்கத்தில் ஆசார்ய பதவியை அலங்கரித்திருந்த பெரியார்களெல்லாரும் தேசிகனிடத்தில் அசூயை கொண்டு திருஹத்வாரத்தில் பாதரக்ஷைகளைக் கட்டிவைத்தும் காலைவாரியிழுத்துவிட்டும் ச்ராத்தத்தைக் கெடுத்தும் மற்றும் பலபல செய்தும் தேசிகனைப் பரிபவப் படுத்தினர்கள்" என்னுமிவ் விஷயங்களுக்கே பிரபலமான ஆதாரங்கள் கிடைத்திருக்கின்றனவென்பீர்போலும்.

— ஸ்ரீதேசிகனைப்பற்றிய எந்தவிஷயத்திலும் நிர்ணயமில்லாமை —

15. முக்கியமாக ஒன்றே ஸாரமாகத் தெரிவிக்கிறேன். நீரெழுதிய தேசிக வைபவத்தில் ஸ்வாமியின் அவதார ஸமாபனத்தை யெழுதுகையில் ஸ்வாமி பரமபதித்தது ஸ்ரீ ரங்கத்தி லென்று சிலர் கூறுவதாகவும், திருவயிந்திரபுரத்திலென்று சிலர் கூறுவதாகவும் எழுதி முடித்திருக்கிறீர். இப்படி கூட எழுதலாமா? அவதார வருஷத்தில் விவாதம்; பரமபதித்த ஸ்தலத்தில் ஸந்தேஹம். மற்றவை கிடக்கட்டும்; வருஷம் விபவமா சுக்லமா? என்கிற போராட்டம் இன்னும் தீரவில்லை; இல்லையில்லை. அதை ஒருவாறு தீர்த்துக் கொண்டோமென்கிறீரா? அது தீருகிற விவாதமாக இல்லையே; அதைச் சிறிது விவரிக்கிறேன் கேளும்.

— தேசிகாவதாரவர்ஷ விவாதம் —

"ஸ்ரீ வைஷ்ணவஸித்தாந்த ப்ரசார ஸபாத்யக்ஷை: ப்ரகாசிதா" என்று 1938ல் வெளியிடப்பட்ட தத்வடீகைக்கு ஸ்ரீமத் பரமஹம்ஸ. இஞ்சிமேட்டழகிய சிங்கர் அருளிய பூமிகையில் "அவதாரகால:" என்று மகுடமிட்டு எழுதுகையில் (வடமொழியில்) 'ஸ்வாமியவதாரம் விபவ வருஷத்திலென்று பல பெரியார்களிடம்

கேட்டிருக்கிறோம்' என்றெழுதிவிட்டு, சுக்ல வருஷத்தில் அவதார மென்கிற பக்ஷத்தைக் காட்டி அதற்கே ப்ரமாணம் காட்டுகிறார் "ஸ்ரீதீயோக்யே சகே சுக்லே ஸம்பூத் வேங்கடேச்வர:" என்று. "சுக்லே என்பதற்கு சுக்ல வருஷத்திற்கு முந்தின வருஷத்தில்' என்று லக்ஷணையால் பொருள் கொள்ளலா மென்கிறார்கள்" என்று மெழுதுகிறார். விபவ வருடமென்பதற்கு ஒரு ப்ரமாணமும் காட்டிற்றிலர். தமக்குக் கேள்வி யென்றுரைத்தனே. முடிவில் ஒரு நிர்ணயமுமில்லை. நிர்ணயமிருக் கட்டும். அவதார வருஷத்தில் இப்படி மதபேதம் ஏன் உண்டாகவேணும்? வேறு எந்த ஆசார்யருக்காவது இங்ஙனே விவாதமுண்டாகியிருக்கிறதோ? சொல்லு வீரா? அவதார வருஷத்தில் தான் விவாதமென்றால் பரமபதித்த ஸ்தலத்திலுமா விவாதம் விளையவேணும்? தேசிகன் விஷயத்தில் நிர்விவாதமானது ஒன்றுமே கிடையாதா? எதை யெடுத்தாலும் விவாதந்தானா? "தேவப்பெருமாளுடைய அவதாரகாலத்திலேயே தேவாஸுரயுத்தம் தொடக்கமாயிற்று, அது இற்றைக் கும் அநுவர்த்திக்கிறது" என்று சில ரஸிகர்கள் சொல்லுமாபோலே, தேசிக னுடைய கர்ப்பவாஸமே தொடங்கி எதிலும்விவாதந்தான் என்ன வேண்டியதா யிற்றே. நீர் எழுதியிருக்கிறபடி பரமபதஸ்தலவிவாதம்இப்பிறப்பில்இந்தயுகத்தில் திருவதாக இல்லையே! பெரியோர்கள் அவதரித்த ஸ்தலத்தையும் திருநாடலங்கரித்த ஸ்தலத்தையும் உலகில் அவரவர்கள் எப்படிகாத்து வருகிறார்களென்பது உமக்குத் தெரியாதா? இது விவாதத்திலிருக்கிறதென்று எழுதிவைப்பது? தேசிகனோடு இடையறாத தொடர்பு இருந்தால் இப்படியெழுதி வைக்க ப்ரஸக்தியிருக்குமா? தங்க ளுடைய நவீனத்வத்தைத் தாங்களேயா கல்வெட்டாக்குவது? சிற்றம்வேண்டா.

— ஸ்ரீதேசிகனுடைய உண்மைப் பெருமையைப் பேசாமை —

16. ஸ்வாமி தேசிகன் தமிழிலும் வடமொழியிலும் மணிப்ரவாளத்திலும் நூல்களியற்றினர் என்றெழுதினீரேயொழிய ப்ராக்ருதத்திலும் புலியானவர் என் றெழுத மறந்தீரே. ஸ்ரீ வைஷ்ணவாசார்யர்களில் வடமொழி தென்மொழி மணி ப்ரவாளங்களில் நூல்களெழுதினவர்கள் இருந்தாலும் ப்ராக்ருதத்திலெழுதினவர் ஒருவரும் கிடையாது' என்று ஜயபேரியடித்து இதையுமெழுதியிருக்கவேண்டாவா? முக்கியமான பெருமைகளை விட்டுவிடுகிறீர். வீண்வம்பு தும்புகளை வளர்த்துகிறீர்.

— திதிவார நக்ஷத்ரயோககரண ஹோரைகள் குறிப்பிடுமழகு —

17. பஹுதான்யஹு ஆவணிமீ சுக்லத்விதீயை ஹஸ்தநக்ஷத்ரங் கூடிய செவ்வாய்க்கிழமையன்று 18-8-1338ல் உலகமங்களத்திற்குக் காரணமான ராமா நுஜாபாத்ரபத்யம் தோன்றியதாக எழுதுகிறீர். இந்த பத்யத்தினால் விளைந்த உலகமங்களம் நாடறிய நகரமறிய ஊரறிய உலகமறிய கோர்ட்டறிய கொத்தள மறியப் பரவியிருப்பதால் இதில் யாருக்கும் ஸம்சயம் வர்த்தியாது. ஆங்கிலத்தேதி தெரியவந்ததே யொழிய தமிழ்த்தேதி தெரியவில்லையே பாவம்! ஏபாவம்! கி. பி. 1329ல் ஸ்ரீமான் வேங்கடதனியனவதாரம் என்கிறீர். ஒன்று கேட்கிறேன் சொல்லு வீரா? ஸ்வாமியின் திருவாக்கில் அத்புதமும் அத்யத்புதமுமான நூல்கள் அவத ரித்தன; அவற்றுள் சததூஷணி முக்கியமா' அதிகரணஸாராவளி முக்கியமா?

தத்வமுக்தாகலாபம் முக்கியமா? என்று கேட்டால் ஒவ்வொன்றும் முக்கியமே யென்று தான் விடையிறுப்பர் விவேகிகள். இவை தோன்றியது எந்தவருடம்? எந்த மாதம் எந்த நக்ஷத்ரம்? எந்த திதி? என்று கேட்டால் வாய்திறப்பாரில்லே. ஏனில்லை? வேணபேர் இருக்கிறார்கள் என்கிறீரா? ஓரிரவில் ஒருயாமத்தில் ஒரு விநாடியில் அவதரித்ததாகச் சொல்லப்படுகிற பாதுகாஸஹஸ்ரம் தோன்றியது இன்னநாளிலென்பது யார்க்கேனும் தெரியுமோ? பிறந்தநாள் தொடங்கிப் பாதுகாஸஹஸ்ர பஹுமானம் பெற்றுவருகிற வொரு பத்யத்திற்கு திதி வார நக்ஷத்ர லக்ன ஹோரைகளுட்பட ச்லோகபூர்வகமாகவும் தெரிவிக்கப்படுகிறதென்றால் இதை ஆச்சரியமென்பதா? அற்புதமென்பதா? விசித்திரமென்பதா? விடமமென்பதா? மாயமென்பதா? ஆழ்வார் "மருள் தானீதோ மாயமயக்கு மயக்கே" என்கிறரே. அது வென்பதா? 'அதுவிதுவுது வென்னலாவன வல்ல' என்பதா?

— அஸம்பத்தோக்திகளேபரங்கள் —

18. இதை நன்கு நெஞ்சிற்கொண்டு விடையிறுக்கவேண்டுகிறேன்; தேவரீர் எழுதியிருக்கிறபடி தேசிகனவதாரம் கி. பி. 1268. ஸ்ரீமான்வேங்கடதனியனவதாரம் 1329. மற்றது கிடக்கட்டும்; தேசிகனுக்கு ஷஷ்ட்யப்த பூர்த்தியான பிறகு மேலே ஒருவருடமும் கழித்து ஸ்ரீமாந் வேங்கடதனியனவதரித்ததாகக் காட்டிவிட்டீர். ஸ்வாமிதாமே ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் "விம்சத்யப்தே விச்ருத நாநாவிதவித்ய:" என்று ஸாதித்தபடி இருபதுபிராயத்திற்குள் தம்முடைய கல்விப் பயிற்சிகளை முடித்துக் கொண்டவர் உடனே ப்ரவசன ப்ராரம்பம் செய்திருக்க வேண்டியவர். அதையும் அவ்விடத்திலேயே தாமே ஸாதிக்கிறார் "த்ரிம்சத் வாரம் ச்ராவித சாரீரகபாஷ்ய:" என்று; முப்பதுதடவை ஸ்ரீபாஷ்யப்ரவசனம் செய்தருளினதாக ஸாதித்தபடி. தத்வடீகையில் "....ப்ரவசந விதாவஷ்டாவிம்சே ஜயத்வஜபட்டிகா" என்று இருபத்தெட்டாவதான ப்ரவசனபர்யாயத்தில் அந்த (தத்வடீகா) க்ரந்தம் ஸாதிக்கப்பட்டதாகவுள்ளது. இந்த ப்ரவசனங்களெல்லாம் இருபது திருநக்ஷத்ரத்திலிருந்தே நிகழ்ந்து வந்தனவென்று கொள்ளாமல் ஷஷ்டியப்த பூர்த்திக்குப் பிறகுதான் ஸ்வாமி ப்ரவசனமாரம்பித்தாரென்று சொல்லிவருகிறீர்கள். ஹா, எங்கே சொன்னேனென்பீர்; ஸ்ரீமாந் வேங்கட தனியன் அவதரித்த காலத்தைச் சொன்னபோதே இது சொல்லப்பட்டதாக ஆகவில்லையா! தனியன் ஸேவிக்கும்படியான ப்ரஸக்தியில்லாமல் உபந்யாஸரூபமாக ஸாதித்து வந்தாரென்பீர். வேறுகதியேது? அபத்தபஞ்சாங்கத்திற்குஅறுபது நாழிகையும் த்யாஜ்யந்தானே.

— பிராட்டி வைபவத்தைக் குறைத்ததும் நிறைத்ததும் —

19. தேசிக வைபவத்தில் நீர் எழுதியிருப்பதும் தவிர உமது வகுப்பைச் சேர்ந்தவர்கள் பெரும்பாலும் அந்தபரம்பரையாய்ச் சொல்லி வருவது "தென்கலையாசாரியர்கள் பிராட்டியின் வைபவத்தை மிகவும் குறைத்து விட்டார்கள்; அதை தேசிகனே ஆணியடித்தாற்போல் நன்றாக ஸ்தாபித்தவர்" என்பதாக. இது ஒன்றையும் பாராமல் கண்மூடித்தனமாகச் சொல்லி வருவதேயொழிய இதில்

ஈஷத்தும் உண்மையில்லை யென்பதைப் பலகால் பலநூல்களினல் ஏழேழ்பிறவிக்கும் வாய்திறக்க முடியாதபடி நிரூபித்திருக்கிறேன்; ஸதாசார்ய ஸூக்திரக்ஷா முதலான எனது நூல்களைப் பாராத வித்வான்களுமில்லை; மறுப்பெழுதுவதாகத் தொடங்கி மருமமறிந்து ஒய்ந்து நில்லாதவர்களுமில்லை அவற்றையெல்லாம் தேவரீர் அறியாதவருமல்லீர்.

20. உபஸம்ஹாரம் செய்கிறேனிதனை. எம்பெருமானர் தரிசனத்தைக் காப்பதற்கென்றே அவதரித்த தேசிகனுக்கு பகவத் ராமாநுஜ ஸூக்திக்கு முரணைப் பேசும்பரிசு புத்திபூர்வகமாகவும் ப்ராமாதிகமாகவும் நேர்ந்துவிட்டது. இவ்விரண்டு வகுப்பிலும் பல காட்டியிருக்கிறேனுகிலும் புத்தி பூர்வகத்திற்கு ஒன்றும், ப்ராமாதிகத்திற்கு ஒன்றுமாக இரண்டே நினைவூட்டி நிகமிக்கிறேன். கைவல்ய விஷயத்தில் ஸ்ரீபாஷ்யகாரர் ஸ்ரீபாஷ்யத்திலும் கீதா பாஷ்யத்திலும் அவிருத்தமாக ஸாதித்திருக்கவும், என்னைப் போன்ற அல்பஜ்ஞர்களும் எளிதாக ஸமந்வயப்படுத்தியிருக்கவும் கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்தியை அஸ்வரஸமென்று தள்ளினது புத்திபூர்வகம். சமதமார்த்த நிருபணத்தில் கீதாபாஷ்ய ஸூக்தியை மறுத்துரைத்தது ப்ராமாதிகம். ஸ்வாமியே ஸாக்ஷாத்தாக எழுந்தருளினலும் இவை அபரிஹார்யமான அவத்யங்களே. உமது கொள்கையின்படி ஸ்ரீரங்கவாஸிகள் ஸ்ரீபாஷ்ய பரிசயம் பண்ணுதிருந்தது க்ஷேமாய. பண்ணியிருந்தால் அவர்களுக்கும் இந்த அவத்யம் நேர்ந்திருக்குமோ என்னவோ! ஒருகால் நாம் ஸ்ரீரங்கம் விடைகொண்டிருந்தபோது ஆண்டவனுச்ரமத்திலிருந்து ஏழெட்டு ஸ்வாமிகள் வந்துகொண்டிருந்தார்கள்; அவர்கள் கையிலிருந்த ஸ்ரீகோசத்தைக் கண்டு இதென்ன ஸ்ரீகோசம்? என்று கேட்டேன். பரமபதபங்கம் என்ருர்கள். அது காலக்ஷேபமாகிறதென்றும் சொன்னுர்கள். பரமதபங்கத்தை இப்படிச் சொல்லுகிருர்களென்று தெரிந்துகொண்ட நான் 'இதில் என்ன விஷயம்' என்று கேட்க' பரமபதமில்லையென்று அத்வைதிகள் வாதிப்பதைக் கண்டிப்பது இது என்ருர்கள், இத்தகைய வித்வான்கள் இற்றைக்கும் விளங்குகின்றுர்கள். அன்னவர்களால் இவற்றுக்கெல்லாம் எளிதில் ஸமாதானம் கிடைத்துவிடுமென்று நிற்கிறேன். *

## — ஸ்ரீமத் பரமஹம்ஸ கோழியாலம் ஸ்வாமியின் கீர்த்தி —

இப்போதெழுதப்படுகிற தன் சரிதைச் சுருக்கத்திற்கு மூலமான "தானேயெழுதிய தன் சரிதையில் (பக்கம் 26ல்) எழுதப்பட்டுள்ள வொருவிஷயத்தை இங்கு முன்னம் உபஹரிக்கிறேன். (கோழியாலம் ஸ்வாமி ஜீவித்திருக்கும்போதே அவரும் கடாக்ஷித்தருளினதே இது). — புரட்டாசித் திருவோணத்தன்று விளக்கொளி தேசிகன் தேவப் பெருமாள் ஸன்னிதிக் கெழுந்தருளி மங்களாசாஸனம் செய்தான பிறகு ஆழ்வார் திருவீதி வலமாக ஸ்தோத்ரபாட கோஷ்டியுடன் எழுந்தருள்வது வழக்கம். தென்கலை கோஷ்டி முன்னே செல்லப் பின்னல் வடகலை கோஷ்டி வருவது. அந்த கோஷ்டியின் முன்னணியில் கோழியாலம் ஸ்வாமி யெழுந்தருளுகிருர். தேசிகன் மணவாள மாமுனிகள் ஸன்னிதிக்கருகே யெழுந்தருளுகையில் இந்த உத்தமாச்ரமி என்ன செய்திருக்கிருரென்ருல்,

யதிராஜஸப்ததி ஸேவித்துக் கொண்டிருக்கிற ஸ்வகீயர்களை நோக்கி 'நிறுத்துங்கள் நிறுத்துங்கள்' என்று கைதூக்கிச்சொல்லி நிறுத்தச் செய்து, தாம் மணவாள மாமுனிகளுக்கு ப்ருஷ்டபாகத்தைக் காட்டிக்கொண்டு நின்று, "சொல்லுங்கோள்! உரக்கச் சொல்லுங்கோள்!! *குரௌ வாதிஹம்ஸாம்புதாசார்யசிஷ்யே ஜநா பக்திஹீநா யதீந்த்ராப்ரியாஸ் ஸ்யு:, யதீந்த்ராப்ரியா விஷ்ணுகாருண்யதூரா: குதோ முக்திவார்த்தா ஹி தாத்ருக்விதாநாம்* ... ... *ஹந்த ஹந்த! ராமக்ருஷ்ண தூஷணபிதாயிநாம் கிம் நு சித்ரமத்ர சைத்யராவணாநுஸாரிணாம்* என்று தாமும் கோஷிக்கிறார், பிறரையும் கோஷிக்கச் செய்கிறார். "இதெல்லாம் இப்போது ஏதுக்கு?" என்று சில பெரியார் அருகேவந்து சொல்லவும் "உங்களுக்கென்ன தெரியும்? சொல்லுங்கோள்" என்று த்ரிதண்டத்தை விதிர்த்து ரோஷகஷாயிதாக்ஷராய் நியமிக்கிறார். இதையெல்லாம் அடியேன் ஸந்நிஹிதமான எங்கள் கோஷ்டியிலிருந்து கொண்டே (பத்தடி தூரத்தில் நின்று) பார்க்கிறேன். அப்போது அங்குகால்மணிகாலம் அந்த யதீச்வரரின் அட்டஹாஸம் அளவுகடந்தது.

"குரௌ வாதிஹம்ஸாம்புதாசார்ய சிஷ்யே" என்கிற சுலோகம் தென்கலையாருக்கு உச்சாடனமந்த்ரமென்று அந்த வகுப்பினருடைய நினைவு. இந்த ச்லோகத்தின் பொருள் என்னவென்றால் "தேசிகனிடத்தில் பக்தியில்லாதவர்கள் எம்பெருமானார்க்கு விலக்காவர்கள்; அன்னவர்கள் எம்பெருமானுடைய அருளுக்கு விலக்காவர்; அவர்களுக்கு மோக்ஷப்ரஸக்தியே கிடையாது" என்பதாம். இது ஸத்யமான வார்த்தை. தேசிகபக்தியில்லாதவர்களுக்கு ஒருவிதமான நன்மையும் கிடைக்காதென்றால் இதில் விப்ரதிபத்திகொள்ள ப்ரஸக்தியே கிடையாது. ஒரு ஆசார்யனிடத்தில் ஒருவர் பக்திபூண்டிருப்பதற்கு எது லக்ஷணமென்றால் அந்த ஆசார்யருடைய ஸ்ரீஸூக்திகளின் உண்மைப்பொருள்களை உள்ளபடியேயறிந்தும் அறிவித்தும் அநுஷ்டித்தும் போருவதேயாம். தேசிக திவ்யஸூக்திகளின் உண்மைப்பொருள்களை யுணராததோடு அவற்றுக்கு நேர்மாறான பொருள்களைப் பேணி அவற்றையே பிடிவாதமாகப் பேசுவதும் எழுதுவதுமாயிருப்பவர்கள் தேசிக பக்தர்களாக ஆக முடியுமோ? தேசிக ஸம்ப்ரதாயமென்றும் தேசிகதர்சனமென்றும், தேசிகன் தேசிகன் தேசிகனென்றும் உருப்போடுகிறவர்கள் தேசிகனுக்கு ஸர்வாத்மநா அநபிமதமென்று விளங்கநின்ற புண்ட்ரத்தையும் அர்த்தங்களையும் அநுஷ்டானங்களையும் ஆதரிப்பவர்களென்று தேறிவிட்டால் அவர்களை தேசிக பக்தர்களென்னமுடியுமா? *குரௌ வாதிஹம்ஸாம்புதாசார்ய சிஷ்யே ஜநா பக்திஹீநா:* என்றதற்கு அவர்களேயன்றோ ப்ரதமலக்ஷ்யமாக ஆகக்கூடியவர்கள். இது நான் இப்போது புதிதாகத் தெரிவிப்பதன்று. இக்கட்டுரைக்கு லக்ஷ்யபூதரான ஸ்ரீமத் கோழியாலம் ஸ்வாமியின் ஸன்னிதியில் பலகால் விஜ்ஞாபித்தது. அவ்வளவேயன்று. மேலுங்கேண்மின்;

அடியேனுடைய நூல்களில் உபந்யாஸ சதத்வய மென்பது உலகமுழுதும் பரவியுள்ள வொருநூல். அது ஸ்ரீராமாநுஜன் 199ல் தொடங்கப்பெற்று 208ல் முடிவு பெற்றிருக்கின்றது. தனிப் புத்தகமாகப் பலர் பேணி வைத்துக்கொண்டிருப்பதுமாகும். அதில் 179 ஆம் உபந்யாஸம் "ஸ்ரீரங்கநாத பாதுகாப்ரேக்ஷ

ஞோபந்யாஸம்" என்று மகுடம் புனைந்தது. அதற்கு அநுபந்தமாகவே 180 ஆம் உபந்யாஸம் "குரௌ வாதிஹம்ஸாம்புதாசார்ய வுரை" என்று தொடங்கப்பட்டு அது 192 ஆம் உபந்யாஸத்தளவும் சென்றிருக்கிறது. அந்த வுபந்யாஸத்தின் முடிவில் "குரௌ வாதிஹம்ஸாம்புதா சார்ய சிஷ்யோபந்யாஸத்தை இவ்வளவோடு நிறுத்திக் கொண்டேன்" என்று தலைக்கட்டியிருக்கிறேன். இருபத்து நான்கு பக்கம் நிரம்பிய அந்த பதினன்கு உபந்யாஸங்களும் ஸ்ரீமத் பரமஹம்ஸ-(வர்த்தமாந) ஸ்ரீமதாண்டவன் கடாக்ஷித்தருளவே விஜ்ஞாபிக்கப்பட்டவையென்பது அவ்விடத்தில் ஸுஸ்பஷ்டமானது. அந்த உபந்யாஸங்களில்

## 191. ப்ரபல ஸந்தேஹவிஜ்ஞாபநோபந்யாஸம்

என்பது தலையானது. அதில் விவரிக்கப்பட்ட *த்ருட பூர்வச்ருத மூர்க்கவிஷயத்தைப் பற்றி இதுகாறும் அடியேனல் நூறுக்கு மேற்பட்ட நூல்கள் நான்கு பாஷைகளிலும் வெளியிடப்பட்டு உலகம் பரவியுள்ளன தேசிக ஸம்ப்ரதாயஸ்தர்களென்றும் தேசிகதர்சன ப்ரதிஷ்டாபகர்களென்றும் பேர்பெற்றிருக்கும் பண்டிதோத்தமர்கள் என்னை நோக்கி விடையிறுக்க முன்வர வெள்கினலும், ஸூத்த்யர்கள் பலர்க்கும் உண்டாகியிருக்கின்ற கலக்கங்களைப் போக்கித் தெளிவுபெறுத்த "த்ருடபூர்வச்ருதோக்தி ஸமர்த்தனம், க்ரந்தஜ்ஞரபஹாஸ்யோக்தி ஸமர்த்தனம், இதிமந்தைரிதம் ப்ரோக்தமுக்தி ஸமர்த்தனம்" என்றிப்படி பெயரிட்டு வெளியிட்டுத் தாங்கள் பெற்றிருக்கும் விருதுகளை நிலைநாட்டிக் கொள்வது நன்று. இந்த சர்ச்சைகள் ஸ்ரீமத் கோழியாலம் ஸ்வாமி காலத்தில் தொடங்கப்பட்டவையென்பதை மீண்டும் விஜ்ஞாபித்து இக்கட்டுரையை முடிக்கிறேன். ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரம் தோன்றின நாள் முதலாக ஏதத்க்ஷணபர்யந்தம் ஒரு தென்னசார்யராலும் பரிஹரிக்கப்படாத ப்ரத்யவஸ்தானங்கள்" என்றெழுதிவைத்த கோழியாலம் ஸ்வாமி அடியேனுடைய நூல்களைக் கடாக்ஷித்தருளியே "நாதிஸ்வஸ்தமநா யயௌ" என்ன வேண்டாமல் "அதிஸ்வஸ்தமநா யயௌ" என்ன வேண்டியதாயிற்று-என்று ஒரு நூலில் எழுதியுள்ளேன். ... ... ... ...

## இவ்வறிவிப்பை அனைவரும் கவனிப்பது.

உலகப் பிரசித்தராக விளங்கும் ராஜாஜீ - C. ராஜகோபாலாசாரியாரவர்கள் தமிழிலும் ஆங்கிலத்திலும் பல எழுதி வெளியிட்டு வருகிருர். அவற்றையெல்லாம் நான்பார்க்க அவகாசமுமில்லை, யோக்யதையுமில்லை. ஆனல் ஒரு சமயம் அவருடைய இரண்டு கட்டுரைகளை நோக்க நேர்ந்தது; ஒன்று உத்தர ஸ்ரீராமாயணத்தைப் பற்றியது; மற்ருென்று ஆண்டாளைப் பற்றியது. உத்தர ராமாயணத்தை அவலக்ஷணராமாயணமென்றும், அநியாயமாக யாரோ கற்பித்தராமாயணமென்றும் பலவாறு இகழ்ந்து எழுதிவிட்டார். ஆண்டாளென்று ஒருவ்யக்தி கிடையவே கிடையாதென்றும், பெரியாழ்வாருடைய பாவன விசேஷத்தினலாகிய கற்பன

விசேஷமத்தனை யென்றும், திருப்பாவை யென்பதும் நாச்சியார் திருமொழியென்பதும் பெரியாழ்வாருடைய கற்பனை விசேஷமேயொழிய வேறல்ல வென்றும் எழுதியச்சிட்டுத் திசைகள் தோறும் பரவவிட்டார். இவை யிரண்டும் ஒரு ஆஸ்திகர்க்கும் ஒரு வைதிகர்க்கும் உடன்பாடன்று. ஆனாலும் உலகில் பெருமை பெற்ற C. R. மனம்போனபடி யெழுதிப்பலர்க்கு புத்திபேதத்தை யுண்டு பண்ணிவிட்டார். இவற்றைப் பார்த்தவர்கள் பலவாயிரக்கணக்கிலிருப்பர்கள். பார்த்து வருந்தினவர்களும் பலரிருப்பார்கள். ஆனால் அவரவர்கள் பார்த்து வாளா விருந்தார்களேயல்லது ஒருவரும் மறுப்பெழுத முன்வந்திலர். மேற் கூறிய இரண்டு விஷயங்களும் மறுக்கத்தக்கவை – அவசியம் மறுக்கவேண்டியவை – என்பதில் யார்க்கும் விப்ரதிபத்தியிராது. ஆனால் யாரும் மறுத்தெழுதினதாகத் தெரிய வில்லை. இரண்டுக்கும் பரிபூர்ணமான மறுப்பெழுதிப் பிரசுரஞ்செய்ய எம்பெருமான் அடியேனுக்கே கட்டளையிட்டருளினன். கடமையை நிறைவேற்றினேன், C R. அவர்களுடைய இரண்டு கட்டுரைகளையும் ஸப்ரமாணமாக மறுத்தொழித்தேன். அந்த மறுப்புரைகளை அவர்க்குமனுப்பி உகக்கச் செய்தேன். உலகமெல்லாமுகந்தது. இதேபோல அடியேனெழுதும் மறுப்புரைகள் யாவும் அவசியமானவை; பிரதிபக்ஷிகளாலும் *வாய்திறக்கவுண்டோவழி யென்று நெஞ்சார நினைக்கத்தக்கவை.

மற்றொன்றும் நினைவூட்டுகிறேன். திருவாய்மொழியில் * வம்பவிழ்கோதை பொருட்டா மால்விடையேழுமடர்த்த * என்கிற பகுதிக்கு த்ரமிடோபநிஷத்தாத்பர்ய ரத்னாவளியில் "[illegible]" (கோதார்த்த உக்ஷாவமர்த்தே) என்று தேசிகன் ஸாதித்ததாக அச்சில் விழுந்துவிட்டது; இது ஸர்வாத்மநா அஸங்கதம்; இங்கு நீளார்த்த என்றிருக்கவேணுமே யொழிய கோதார்த்த என்றிருப்பது பொருந்தவே மாட்டாது – என்பதை நன்கு உபபாதித்திருக்கிறேன். இது இருபத்தைந்து ஆண்டுகட்கு முன் நிகழ்ந்தது. நானெழுதும் எத்தனையோ விஷயங்களை வித்வான்கள் பார்த்தும் பாராதது போலவே யிருந்துவருவதுபோல இதிலும் இருந்துவிடவேண்டும்; விதியென்பது தனிப்பட்டதாகையாலே இதற்கு மறுப்பெழுதத் தொடங்கினர் இருவர். இதைப்பற்றி ஸ்ரீராமாநுஜனில் பலகால் பார்த்திருப்பீர்கள். இந்த சர்ச்சை தொடங்கின காலத்தில் சில வித்வான்கள் கீர்த்திமூர்த்திகளான கோஷ்டீபுரம் ஸ்வாமியிடத்திலும், ஸேதுபதி ஸம்ஸ்தான வித்வான் ராகவையங்காரிடத்திலும் [திருவல்லிக்கேணியில்] ப்ரஸ்தாவித்தார்கள்; இருவரும் ஸாதித்ததை உலகம் மறந்திராது. இருவரும் எனது நிருபணப்ரகாரங்கள் என்ன? என்று கேளாமலே "அண்ணங்கராசாரியருடைய ஆராய்ச்சியென்றால் விபரீதமானவழியில் செல்லவேமாட்டாதே; எது உண்மையோ அதுதான் அவருடைய புத்தியில் படும்; இதைப் பற்றி விசாரமேதுக்கு?" என்று ஒரேவார்த்தை சொல்லி முடித்தார்கள். நிர்தேசித்த ஸ்வாமிகளிருவரும் ஒரு மிடறாகச்சொன்ன வார்த்தையிது. இதை ஆத்மப்ரசம்ஸை யென்று சிலரோ பலரோ நினைக்க நேர்ந்தாலும் வருவதோர் அவத்யமில்லை. திருவல்லிக்கேணி வேத வேதாந்த வர்த்திநி ஸதஸ்ஸில் மேலே குறித்த ஸ்வாமிகளிருவரும் ஒருகால் உபந்யாஸகர்களாக எழுந்தருள நேர்ந்தது. அப்போது அவர்கள் திருவாக்கிலிருந்தே வெளிவந்ததும் ஸதஸ்யர்களனைவரும் செவிசாற்றியதுமான விஷயமிது. இனி அடுத்த கட்டுரை.

---

## — ஸ்ரீமதுபயவே. உத்தமூர். வீரராகவாசார்ய ஸ்வாமி —

இந்த ஸ்வாமி தமக்கு ஆசார்யராகக் கொண்ட ஸ்ரீமத் கோழியாலம் ஸ்வாமியின் காலத்திலிருந்தே அடியேனோடு வாத விவாத சர்ச்சை கொண்டிருப்பவர். ரஹஸ்யத்ரய ஸாரத்தில் "இதிமந்தைரிதம் ப்ரோக்தம் ஸ்ரீமச் சப்தவிரோதத:... க்ரந்தஜ்ஞைரபஹாஸ்யம் தத் பதிப்ராதாந்யதோந்வயாத்" என்றதும் "த்ருடபூர்வச்ருதோ ஹ்ரக்க: ... என்கிற தசையாம்" என்றதும் சித்த ஸ்வாஸ்த்யமில்லாத தசையில் எழுதப்பட்டவை யென்பதான வொரு வழக்கு இன்று நேற்று தோன்றியதன்று; நாற்பது வருஷங்களுக்கு மேலாயிற்று. இதில் ஸம்ப்ரமங்கொண்ட கோழியாலம் ஸ்வாமி தாம் ச்ராந்தராய் விச்ராந்தராகி அந்தேவாஸியான இவர்க்குக் கட்டளையிட்டார். இவரும் அந்தனையும் கைகாட்டினர். பட்டர் அஷ்டச்லோகியில் "ஈசாநாம் ஜகதாம் அதீசதயிதாம் நித்யாநபேதாம் ச்ரியம் ஸம்ச்ரித்ய" என்றிட்டு, அதன்மேல் "ஆச்ரயணோசிதாகில குணஸ்ய அங்க்ரீ ஹரேராச்ரயே இஷ்டோபாயதயா" என்றிட்டு, அதன்மேல் "ச்ரியா ச ஸஹிதாய" இத்யாதியருளிச் செய்திருப்பது இவர்களுடைய கொள்கையை அறுத்துத்தொலைப்பதென்னுமிடத்தை நாம் எடுத்துக்காட்டினபோது "அஷ்டச்லோகி பட்டருடைய க்ருதியன்று" என்று ஸஹஸா எழுதிவிட்டாரிவர். தேசிகன் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் அஷ்டச்லோகியை அஸக்ருத் உதாஹரித்தருளுகிறார். கண்டம் கண்டமாக உதாஹரித்தது தவிர (அகாரார்த்தோ விஷ்ணு:) அகாரார்த்தாயைவ ஸ்வமஹம்) என்கிற இரண்டு சுலோகங்களைப் பூர்த்தியாகவும் உதாஹரித்தார். சில ப்ரமாணங்களை இன்னார் கூறியதென்று காட்டாமல் உதாஹரிப்பதுண்டே; அப்படியன்றிக்கே மூலமந்த்ராதிகாரத்தில் அஷ்டச்லோகீஸூக்த்யுதாஹரணத்தில் பட்டர் திருநாமத்தை ஸ்பஷ்டமாகவுமிட்டருளினர். இப்படியிருக்க, பட்டர் ஸ்ரீஸூக்தி தம்முடைய துர்வாதத்திற்கு வஜ்ரகுடாரமாயிருப்பது கண்டு 'அஷ்டச்லோகி பட்டர் ஸாதித்ததன்று' என்று எழுதி முடித்துவிட்டாரிவர். இவர்கள் அபிநவ தேசிகர்களாம், தேசிக தர்சநோத்தாரகர்களாம். "அப்படி நானெழுதவில்லை" என்று சொல்லிக்கொண்டு உய்யவும் வழியில்லையே. விரலுக்குத் தக்க மோதிரம் பண்ணாதே மோதிரத்திற்காக விரலைச் சீவுகிற மேதாவிகளிறே

ஆண்டவனுடைய ஷஷ்டியப்தபூர்த்தி மலருக்கு ஏதோ எழுதிக்கொடுக்க முன்வந்த விவர் —"தமிழ் மறைகளையும் சேர்த்து உபயவேதாந்தம் நாம் கற்க வேண்டுமென்று நாதமுனிகள் தொடக்கமாக நமக்கு உபதேச ஸம்ப்ரதாயம் ஏற்பட்டிருக்கிறது" என்றெழுதிவிட்டு "இதனால் அருளிச்செயல்களுக்கு வேதத்தைப்போல், பூர்ணமான ஸ்வாதந்த்ரியங் கொடுத்ததாகாது" என்று "ஸ்வயமபி லிகிதம் ஸ்வயம் ந ஜாநாதி கணக்கிலே யெழுதியுள்ளார். இந்த அபசப்தத்தை அநுவதிப்பதும் அபசாரமாகும். 'அருளிச்செயலுக்கு மேற்பட்டசாஸ்த்ரமில்லை' என்று உள்ளபடியறிந்தும் அறிவித்தும் வருகின்ற ஆண்டவன் இந்த அபசப்தத்தைத் தமது மலரில் கடாக்ஷித்தருளி எப்படித்தான் ஸஹித்திருக்கிறாரென்பது தெரியவில்லை. யாரும் இவரிடத்தில் வந்து 'திவ்யப்ரபந்தங்களுக்கு வேதத்தோடொப்ப பூர்ணமான ஸ்வாதந்த்ரியம் கொடுக்கவேணும்' என்று பிச்சை கேட்கவில்லை. ஸ்வாதந்த்ர்யமாவது என்ன? பூர்ணமான ஸ்வாதந்த்ர்யமாவது

என்ன? அது வேதத்திற்கு உள்ளவிதம் யாது? என்பதை நன்கு உபபாதித்துக் காட்டிவிட்டனரே அது இதற்கில்லை என்னவேணும். "ப்ராசீநாநாம் ச்ருதிபரிஷதாம் பாதுகே! பூர்வகண்யா" என்று பூர்வதேசிகன் ஸாதித்ததை அபரதேசிகன் கண்டித்துவிட்டாரென்று உத்தரமேரூர் வாஸுதேவாசாரியர் உரைத்தபடி. ....

### ஸ்ரீஉவே. வித்வான். மதுராந்தகம் வீரராகவாசார்யஸ்வாமி.

இந்த ஸ்வாமி சிலவாண்டுகளாகத் திருவரங்கம் பெரியகோயிலில் வேதாந்த ப்ரவசனம் செய்து கொண்டு எழுந்தருளியிருக்கிறார். இவர் அடியேனுக்கு நாற்பது வருஷங்களுக்கு மேலாக ஸ்நிக்தர். ஸ்நிக்தரென்றால் போதாது, பரமாப்தர் என்ன வேணும். அடியேன்பால் உள்ளும் புறமுமொத்த அன்புடைய பரமாப்தர்களில் இவரைத் தலைவரென்பேன். அடியேன் பலகால் சிந்தைசெய்யும் ஸ்ரீமத் பரமஹம்ஸ. கருடபுரம் ஸ்வாமியோடு கூடவே இவரையும் சிந்திப்பேன். நித்ய ஸ்மரணீயரான (கீர்த்தி மூர்த்தி.) காரப்பங்காடு சிங்கப்பெருமாள் ஸ்வாமியின் திருவாக்கு ஏதோ .... அப்படியவதரித்ததென்று அடியேன் விசாரப்படுவது முண்டு. 'பலவதீ பவிதவ்யதா' என்று ஸமாஹிதனாகிறேன். இந்த மதுராந்தகம் ஸ்வாமியோடு வாத விவாதசர்ச்சைகள் பலகால் நேர்ந்து விட்டன; அவை ஸ்ரீராமாநுஜனுடைய பல இதழ்களிலும், வைதிக மநோஹராவின் நாலைந்து ஸஞ்சிகைகளிலும், (கிம் பஹுநா) எனது ஸமீபகாலத்துத் தெலுங்கு மாஸிக பத்திரிகையிலுங்கூட ஏறிவிட்டன. இதைப்பற்றி இங்கு வளர்த்திக் கொண்டுபோக விருப்பமில்லை. சிலவார்த்தைகளை மட்டிமெழுதி முடிக்கிறேன்.

இந்த ஸ்வாமிக்கும் அடியேனுக்கும் பத்தெட்டு வருடங்களுக்கு முன்பு நடந்த பிரபல சர்ச்சைகள் பலபலவுண்டு; அவை கிடக்கட்டும். ஸமீப காலத்தில் இவர் அடியேனை நோக்கி ஸம்ப்ரதாயஸுதா என்றொரு சுவடி (ஸ்ரீரங்கத்திலச்சிட்டு) அனுப்பினர். அதற்கு அடியேன் ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்யம் என்கிற ப்ரத்யக்ஷரகண்டனம் ஸ்ரீராமாநுஜன் மூலமாகவே வெளியிட்டேன். அது தனிப் புத்தகமாகவுமுள்ளது. [விரும்புவார்க்கு அனுப்பத் தடையில்லை.] ஸ்ரீராமாநுஜன் 229ல் பக்கம் 35ல் (மேலே ப்ரஸ்தாவித்த ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்யத்தில்) "நம்முடைய கோரமான சபதமொன்று" என மகுடமிட்டு எழுதியிருப்பதை மட்டும் இங்கு உதாஹரித்து முடிக்கிறேன்.

— "நம்முடைய கோரமான சபதமொன்று —

தேசிகனை ப்ரதிவாதி பயங்கரம் அண்ணன் அப்படி கொண்டாடியிருக்கிறார். சோளசிம்ஹபுரம் தொட்டயாசாரியர் ஸ்வாமி இப்படி கொண்டாடியிருக்கிறார்.... என்று ஒவ்வொருவரும் எழுதியும் பேசியும் போருவதனால் என்ன ஸாதித்தீர்களாகிறீர்கள் என்பது தெரியவில்லை. ப்ரதிவாதி பயங்கர வம்சஸ்தர்களும் தொட்டயாசார்ய வம்சஸ்தர்களும் இல்லாமல் போகவில்லையே. அந்நாள் தொடங்கி இந்நாள் வரையில் விலக்ஷண சிஷ்ய ஸம்பத்தோடும் விளங்கிவரும் பரம்பரையினரான விவர்கள் அன்றுமின்றும் தென்கலை ஸம்ப்ரதாயஸ்தர்களே யல்லது ஒருகாலத்திலும் ஒருதேசத்திலும் இவர்களை இதரஸம்பிரதாயத்தில்காட்டமுடியாது. இவ்வுபய பரம்பரையிலும் வேதாந்தாசார்ய நாமகரணம் விவாதம் முற்றின

இக்காலத்திலும் இடையருது தொடர்ந்து வாரா நின்றது. நம்முடைய எத்தனை
நூல்களில் இவ்விஷயம் புனருக்தி தோஷத்திற்கு அஞ்சாமல் நிரூபிக்கப் பட்டிருக்
கின்றதென்பதை உலகமும் மறவாது. நீங்களும் மறவீர்கள். கி. பி. பத்தொன்
பதாவது நூற்ருண்டு பிறந்த பிறகுதான் நீங்கள் தேசிகனை யறிந்தவர்களே
யொழிய, அதற்கு முன்பு தேசிகனென்ருே எம்பெருமானரென்ருே ஆழ்வா
ரென்ருே ப்ரஸ்தாவித்த ஒரு வடகலை வ்யக்தி கூட இல்லை இல்லையென்று சபதம்
பண்ணி யெழுதியிருக்கிறேனே; எழுதின மசி இன்னும் உலர வில்லையே. நீங்கள்
அகாண்டே த்வேஷிக்கும் மணவாள மாமுனிகளும் தேசிகோக்திகளைத் தம்
முடைய வியாக்கியானங்களிலே உதாஹரித்தருளி யிருப்பதையும், மாமுனிகளுக்
குப் பிறகும் ஸந்நிஹிதர்களும். வ்யவஹிதர்களுமான ப்ரக்க்யாத வித்வான்கள்
பலர் தென்கலை ஸம்பிரதாயஸ்தர்கள் உதாஹரித்திருப்பதையும் நாமன்ருே
பலகால் எடுத்துக் காட்டியிருக்கிருேம். இப்படி உங்கள் வகுப்பில் ஆழ்வாரையோ
எம்பெருமானரையோ தேசிகனையோ ப்ரஸ்தாவித்த ஒரு புராதந வ்யக்தியைக்
காட்டி விட்டீர்களானல், இதுகாறும் நான்கு பாஷைகளிலும் நானெழுதி வெளி
யிட்டுள்ள பலநூறு புத்தகங்களையும் கிழித்தெறிந்துவிட்டு ஆயுச்சேஷமுள்ள
வரையில் அஜ்ஞாதவாஸம் செய்வேனென்பது ஸத்யம்.

பலவூர்களில் தேசிகனுக்கு பரஹ்யஸ்தலங்களில் புதுக்கோயில் கட்டி
யிருக்கிறீர்களல்லவா? அப்படி கட்டினதில் முதன்முதலாகக் கட்டினது எவ்வூரில்?
என்றைக்கு? என்பதை விசாரித்து நிர்ணயிப்பதில் அருமையில்லையே. அந்த
நன்னுளுக்குப் பத்தெட்டு ஆண்டுகட்கு உட்பட்ட காலத்தில்தான் நீங்கள் தேசி
கனைப்பிடிக்க ஆரம்பித்தீர்களென்பது சிலாலிகிதம். அப்படி ஆரம்பித்த நாள்
தொடங்கி யுத்தகாண்டமே தவிர வேறில்லை யென்பதும் நிர்விவாதம். சகுந்தலை
தன்னை துஷ்யந்தன் அங்கீகரிக்க மாட்டேனென்றபோது அவள் கண்வாச்ரமத்
திற்கே மீண்டும் செல்ல நினைக்கையில் வெளிவந்திருக்கும் வார்த்தை எவ்வளவு
ஆச்சரியமானது தெரியுமோ? [பதிக்ருஹே தவ தாஸ்யமபிக்ஷமம்.] இது எவ்வளவு
சாஸ்த்ரார்த்தம் பொதிந்த வார்த்தை! அம்மா! மஹா ப்ரபு உன்னை அந்தப்புரத்
திற்கு வேண்டா மென்ருரே யொழிய நீ வாசல் பெருக்கவுங் கூடாதென்று மறுத்
திலரே யென்ருன் மஹாவிவேகி. அந்த அழகான வார்த்தையை மீண்டுங்
கேளீர்—பதிக்ருஹே தவ தாஸ்யமபிக்ஷமம். நம்பெருமாள் ஸன்னிதி முதலான
விடங்களில் தேசிகன் இப்படியன்ருே வாழவேண்டும். அவர் திருவுள்ளத்திற்குப்
பாங்கல்லாதபடி தெருவுக்கொரு கோவிலைக் கட்டிவைத்துக் கூத்தடிப்பது ஒன்றே
உங்கள் புதுமையை ஜயபேரியடித்துக் காட்டவில்லையா?

வாயெடுத்தால் தேசிகன் தேசிகன்—தேசிக தர்சனம் தேசிக ஸம்ப்ர
தாயம் என்கிறீர்களேயொழிய, அந்த தேசிகன் நிர்ணயித்த அர்த்தங்கள் இன்
னின்னவை யென்று நிராபாதமாக எடுத்துக்காட்ட வல்லீர்களோ! "விசிஷ்
டாத்வைத தர்சனம் என்றும் தென்னுசார்ய ஸம்பரதாயம் என்றும் நான் வெளி
யிட்டிருக்கிற நூல்கள் பலவாண்டுகளாக உலகம் பரவியுள்ளன. இவை ஒரு
பாஷையிலல்ல; வடமொழி தென்மொழி வடுகுகளான மூன்று பாஷைகளிலென்
பதை உலகமறியும். இவற்றை ஆங்கிலத்திலும் மொழி பெயர்த்து வெளியிட்டுள்
ளார்கள்! வெளியிட்டு வருகிருர்கள். இப்படி "தேசிக தர்சனம்" என்று பெயரிட்டு
ஒரு சுவடி எழுதி உதவுவீர்களா? அப்படியெழுத உங்களிடம் என்ன சரக்கிருக்
கிறது? "யதி ஸ்யாத் உபலப்யேத" என்பது உங்களுக்குத் தெரியாததா? நீங்
கள் கொண்டிருக்கிற ஒவ்வோர் அர்த்தமும் ஆழ்வார் ஸ்ரீஸூக்தி விருத்தம்,
பகவத் பாஷ்யகார ஸூக்தி விருத்தம், கிம் பஹுநா? ஸ்ரீதேசிக ஸூக்தி விருத்
தம்-என்று நாம் விபுலமாகச் செய்துள்ள—செய்து வருகின்ற-ப்ராப்த ஸமயேஷு

செய்யப் போகின்ற நிருபணங்கள் "வாஸுதேவக்ருஹம் த்வேகம் நப்லாவயதி ஸாகர:' என்னும்படி நிற்பவையன்றோ? உங்களில் வித்வான்களுக்குக் குறைவா? பிரசுரம் செய்யப் பத்ரிகைகளுக்குக் குறைவா? எதிலும் எக்குறையுமில்லையே. வேதத்தில் "துர்ப்பிக்ஷம் தேவலோகேஷு" [தைத்திரீயாரண்யகே] என்றுப் போலே உங்கள் திறத்திலே "துர்ப்பிக்ஷம் ஸாதவிகார்த்தேஷு" என்ன வேண்டியன்றோ நின்றது. இப்படி நாம் துணிந்தெழுதுகிறோமென்று ஸந்தாபயதி ஸ்வம் தேஹம் ஆபாததலமஸ்தகமாக தபிக்கலாம் பரிதபிக்கலாம் சிலபாலிசர்களையிட்டு உபாலம்ப வர்ஷங்கள் செய்யலாம். ப்ரஹரிக்கலாம் வேறொன்றுமாகாது."

---

## —ஸ்ரீமதுபயவே. திருவரங்கம் திருமலைதாதாசாரியர் (D. T.) ஸ்வாமி—

இவர் பண்டிதராஜாதி அனேக பிருதுகளை வஹிப்பவர். உண்மையில் வித்யா பரிச்ராந்தர். இளமையில் அதிஸ்நிக்தராயிருந்தவர். தம்முடைய உத்யான பத்ரிகையை வெகுகாலம் அடியேனுக்கு அன்புடன் அனுப்பி வந்தார். அதிலிருந்து ஸம்ப்ரதாய ஸம்பந்தகந்தமுமில்லாத காவ்யாலங்காராதி விஷயங்களில் அடியேன் மறுப்புகள் பல எழுத நேர்ந்தது. தென்மொழியிலும் வடமொழியிலும் பல நூல்கள் (ஸு 1940 லிருந்து) எழுதியச்சிட நேர்ந்தது. அது வொரு பாரதம்; பாரதமன்று, மஹாபாரதம். ரகுவம்சத்தில் "திலீபாநந்தரம் ராஜ்யே" என்ற சுலோகத்தின் மல்லிநாத வியாக்கியானத்தில் ஏதோ பிழையிருப்பதாக இவர் மருண்டு எழுதியிருந்தார். உண்மையில் ஒரு பிழையுமில்லையென்று நிரூபிக்க நேர்ந்தது. அதிலிருந்து பலவிவாதங்கள் கம்பபாணம்போல் தொடர்ந்து விட்டன. காஞ்சீபுரியில் (அடியேனுடைய இளமையில்) ப்ரசண்ட பண்டிதோத்தமராக எழுந்தருளியிருந்த—பதினறுகால் மண்டபத் தெதிர்த் திருமாளிகைக் காரரான ஸ்ரீமதுபயவே. தன்றி பட்டப்பாதாதாசாரியர் ஸ்வாமி மிக அற்புதமாக எழுதியிருந்த ஸுபாஷித நீவி வியாக்கியானத்தை இவர் தமது உத்யான பத்ரிகையில் கண்டம் கண்டமாக அச்சிட்டு வந்தார். அதில் ஓரிடத்தில் அந்த பட்டப்பா ஸ்வாமி அற்புதமான வொரு கதையெழுதியிருந்தார். அதில் ஓரிடத்தில் வித்யமாநயோ: (கித்யமாநயோ:) என்று அவரெழுதியிருந்ததை இவர் (வித்யமாநயோ:) என்று மருண்டு அச்சிட்டு விட்டார். க்ரந்தலிபியில் கவர்க்கத்விதீயாக்ஷரத்திற்கும் வகாரத்திற்கும் சிறிது வாசியேயுள்ளதனால் இந்த முத்ராபகர் க்ரந்தலிபி மாத்ருகையைக் கண்டு மருண்டு இப்படி விபரீதமாக அச்சிட்டு விட்டாரென்றுணர்ந்து மிகவருந்தி உத்போதனம் செய்ய நேர்ந்தது. இது தவறுதானென்று தெரிந்து கொள்ள அதிகமான படிப்பு வேண்டியதில்லை. இவரோ பண்டிதராஜர். விவேக சக்தியும் நிரம்பியவர். ஏதோ அச்சுப் பிழை நேர்ந்து விட்டதென்று ஒரே வார்த்தையில் முடிக்க வேண்டியிருக்க, அப்பப்ப! எவ்வளவு கந்த்ர கோளம்! எவ்வளவு களேபரம்!! மேலே ப்ரஸ்தாவித்த பட்டப்பாதாதாசார்ய ஸ்வாமியின் தௌஹித்ரர் ஸ்ரீமான் M. S. வரதாசாரியரென்பவர் சென்னை அடையாற்றில் ப்ரதிஷ்டிதராய் வாழ்கிறார் அவரைக் கேட்டால் மஹாபாரதமோதுவர். அவர் மஹா மேதாவி மஹாவிவேகி. அந்த ஸுபாஷித நீவி வியாக்கியானம் இப்போது ஸ்ரீமத் உத்தமூர் வீரராகவாசார்ய ஸ்வாமியால் மறுபதிப் பேற்றப் பட்டிருப்பதாகக் கேள்வி. அதில் எப்படியிருக்கிறதென்று பார்க்கவேணும்.

மிகச் சில்லரையான இந்த விஷயத்தை ப்ரஸங்கிக்கவே லஜ்ஜையாயிருக்கிறது. மேன்மேலும் ஸம்ப்ரதாய விஷயங்களிலும் விபரீத லேகனங்கள் மலிந்தன. அதைப்பற்றின விவரணங்கள் ஸமயாந்தரே.

---

அடியேனுடைய அன்புக்கிலக்கானவர்களும் அடியேன்பால் பேரன்புபூண்டவர்களுமான பெரியார்களை இச்சிறுநூலில் ஸம்க்ஷேபமாகவாவது ஸ்மரிக்கவேண்டுவது மிக அவசியம். அவர்களுடைய திருவுருவப்படங்களை ஸ்ரீராமாநுஜனில் வெளியிட்டிருக்கிறேனாதலால் அவர்களது திருநாமங்களையும், அவர்களது உருவப்படங்கொண்ட ஸ்ரீராமாநுஜன் லக்கத்தையும் இங்குக் குறிப்பிட்டு க்ருதக்ருத்யனாகிறேன்.


ஸ்ரீமத்பரம. (வர்த்தமாந) வானமாமலை ஸ்வாமி 200
,, திருமலை பெரிய ஜீயர் ஸ்வாமி 219
,, திருக்குறுங்குடி ஜீயர் ஸ்வாமி 219
,, அஹோபில மடம் அழகியசிங்கர் ஸ்வாமி 201
,, ஸ்ரீமந் நாராயண ஜீயர் ஸ்வாமி 200, 243
,, திருக்குடந்தையாண்டவன் 221
,, ஸ்ரீபெரும்பூதூர் எம்பார் ஜீயர் ஸ்வாமி 249
,, ,, எதிராஜ ஜீயர் ஸ்வாமி 107
,, ஸ்ரீகாஞ்சி. அழகிய மணவாள ஜீயர் ஸ்வாமி 200
,, திருமெய்யம் ஜீயர் ஸ்வாமி 201
,, ஸம்பத்குமார ஜீயர் ஸ்வாமி (கோருட்ல) 144
,, ஸ்ரீராம ராமாநுஜ ஜீயர் (கலிங்க பட்ணம்) 212
ஸ்ரீ. உ. வே. முதலியாண்டான் பெரிய ஸ்வாமி 242
,, இளையவில்லி ஸ்ரீஸூக்தி ரத்நாகர ஸ்வாமி 203, 205
,, உயர்நீதிபதி அழகிரிசாமியவர்கள் 242
ஸ்ரீரங்கஸ்வாமிகளின் கோஷ்டி 212
,, பண்டித அ. மு. ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி 109
,, காஞ்சி ஜகத்குரு காதி க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி
,, V. N. வெங்கடவரதாசார்ய ஸ்வாமி B.A., B.L., 249
,, K. திருவேங்கடாசாரி B.A., B.L., 201
,, K. S. சம்பகேசய்யங்கார் ஸ்வாமி B.A., B.L., 212, 248
,, P. B அனந்தாசாரியர் ஸ்வாமி B.A., B.L., 248
,, Liberty Press, ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமி 212
,, K. E. ராஜகோபாலாசார் ஸ்வாமி B.A., B.L., 211
,, சித்ரகூடச் வித்வான் வேங்கடாசார்ய ஸ்வாமி 203
,, மஹர்ஷி ஸ்வாமி பௌத்ர வாஸுதேவாசாரியர் 243
,, குன்றபாக்கம் தி. வி. கிருஷ்ணமாசார் ஸ்வாமி 249
,, அக்காரக்கனி ஸம்பத்குமாராசார் ஸ்வாமி 242
,, C. S. பார்த்தஸாரதி ஐயங்கார் ஸ்வாமி B.A., B.L., 210
ஸ்ரீ கோவை வேதவியாஸபட்டர் ஸ்வாமி 205
,, A. ஸ்ரீநிவாஸய்யங்கார், சென்னை முத்தியால்பேட்டை 219, 222, 248
,, கோமல் சேஷாத்ரியாசார்யஸ்வாமி 222
,, P. V. S. ஐயங்கார், புது டில்லி, கரோல்பாக் 244
,, ஒ. மு. பாஷ்யகாராசாரியர் (காஞ்சி) 224
,, (T.V.S. பிரமுகர்) தி. அ. திருவேங்கடாசாரியரும், சேலம் தம்புஸாமி ஐயங்காரும் 248
,, R. வரதராஜையங்கார் ஸ்வாமி 226
,, மு. ஸௌந்தரராஜய்யங்கார் (ஹைதராபாத்) ஸ்வாமியும், ஸகிந்தராபாத் ஸ்ரீ லக்ஷ்மி நாராயணன் ஸந்நிதியதிகாரி தெய்வநாயக மையங்காரும், ஹைதராபாத்எண்டோமெண்டு டிப்டிகமிஷனர்ஸ்ரீமான் கிடாம்பி கோபாலையங்காரும் 248
,, திருமலை நச்சம்பாடி வரதாசார்யர் ஸ்வாமி, காஞ்சி 207
,, வித்வான் மண்டயம் ஆழ்வார் திருமலை ஐயங்கார் 242
ஸ்ரீபெரும்பூதூர் கோஷ்டி 222
திருவல்லிக்கேணி அத்யாபககோஷ்டி 219
,, திருநாங்கூர் உபந்யாஸகோஷ்டி 219
,, கோவர்த்தனம் (P. B.) ரங்காசாரியர் (தௌஹித்ரீபதி) ப்ருந்தாவனம் 205, 206
,, V. P. வரதாசாரி, புது டில்லி (தௌஹித்ரீபதி) 206
,, T. S. ராமாநுஜாசாரிய ஸ்வாமி. அட்வகேட், கடலூர் 242
,, வேளுக்குடி K. வரதாசாரிய ஸ்வாமி 226, 227
,, திருநாங்கூர் வித்வான் P. B. அண்ணங்கராசாரியர்
,, க்வாலியர் ஸத்யமூர்த்தி ஸ்வாமி 224
கோ. க. அண்ணன். ராகவாசாரியர் 201
ஸ்ரீபெரும்பூதூர் மணவாள திருவேங்கடாசாரியர் 201
புத்தூர் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன பத்ராதிப ஸ்வாமி 243
நாஜிவீடு. நடாதூர் சடகோபாசாரியர் 201
மா. ரங்கஸாமி ஐயங்கார் (பெருமாள் செட்டி & Sons) 98
K. திருவேங்கடாசாரியர், அட்வகேட் 200
திருநீர்மலை கோமடம் ஸ்ரீநிவாஸாசார்ய சிரோமணி 200

ஸ்ரீ (ஸ்ரீமதாண்டவன் ஸன்னிதி
ஸ்ரீகார்யம்) சித்ரகூடம் வித்வான்
விஜயராகவாசாரியர் ஸ்வாமி 242
,, காஞ்சீபுரவாஸிகளான
தென்னாசார்ய ஸ்வாமிகளின்
கோஷ்டி 199, 201
,, ஸ்ரீவில்லிபுத்தூர் திருவாழி
ராமானுஜாசாரியர் 200, 204
,, ப்ரதிவாதிபயங்கரம் அனந்தாசாரிய
சிரோமணி (காஞ்சி)
,, ஸ்ரீபெரும்பூதூர் கற்பூரம் பட்டப்பா
ஸ்வாமி வேங்கடாசாரியர் 201, 217
,, திருமலை விஞ்சிமூர்
சிங்கராசாரியர் 201, 203
,, தி. அ. பு. ஸ்ரீநிவாஸாசாரி 201
,, கோயில் P. B. ராமானுஜாசாரியர் 201
,, அகரம் முடும்பை கண்ணமாசாரியர் 242
,, ஸ்ரீகாஞ்சீ வானமாமலை
திருவேங்கடாசாரியர் (மணவாள
மாமுனிகள் ஸன்னிதி) 207
,, தி. அ. ஸ்ரீசைல கிருஷ்ணமாசாரியர் 201
,, கோ. க. அ. ராகவாசாரியர் 201, 203
,, கோ. கம். திருமலாசாரியர் ஸ்வாமி
ப்ரயாகை வேணமாதல மந்திரம் 200
,, கோயில் தி. அ. சதாபிஷேகம்
ஸ்வாமியின் காலக்ஷேப கோஷ்டி 200
,, தி. அ. குன்றபாக்கம்
கிருஷ்ணமாசார்ய, கோபாலாசார்ய
சிரோமணிகள், திருப்பதி 201
,, P. B. ஸ்ரீநிவாஸவரதாசாரியர் ஸ்வாமி
ப்ருந்தாவனம் 203, 206
,, கிடாம்பி ஸ்ரீநிவாஸவரதாசார்ய
சிரோமணி (திருப்பதி) 203
உயர்திரு. C. ஸுப்ப்ராயலு செட்டியார் 219
M. ஏகாம்பர முதலியாரவர்க்ள் 203, 251
உயர்திரு. A. V. கன்னைய நாயுடு 219
சிதன்ன சின்னிக்ருஷ்ண செட்டி 219
உயர்திரு. R. நாராயணன்,
S. அண்ணாமலை 203, 215
ஸ்ரீமத்பரம. மணவாள திருமலாசாரியர்
(ஜாமாதா) 206
,, P. B. காதி ஸ்ரீநிவாஸாசாரியர் 209
,, சித்ரகூடம் C. S. பார்த்தஸாரதி
ஐயங்கார் அறுபதாண்டு கோஷ்டி 212
(ரிடையர்ட் ஜட்ஜ்) W. கிருஷ்ணஸாமி நாயுடு 207
,, ராயதுர்க்கம் வரததாதாசாரியர் 207
,, பரவஸ்து சிங்கராசாரியர் (காஞ்சி) 207
உயர்திரு. M. S. சார்ங்கபாணி முதலியார் 208
,, M. பக்தவத்ஸலம் (மாஜி மந்திரி) 209
ஸ்ரீ.உ. வே. ஸ்ரீரங்கம் திருமஞ்சனம் ஸ்வாமி 209
,, R. ராமரத்னமையங்கார் ஜெம்ஷெட்பூர் 209
R. செந்தாமரைக்கண்ணன், மேட்டூர் டாம் 212
ஸ்ரீ. உ. வே. நல்லப்பா ரங்கஸாமி ஐயங்கார்,
B.A., B.L., 250
மங்களாசாஸன பத்ரிகை
கமலாபுரம் ஸந்தான கோபாலாசாரியர் 251
ஸ்ரீமான் ஸ்ரீமதி C. V. பத்மநாபகல்யாணி 242
(அகரம்) A. ராமானுஜாசாரியர் B.A.,
புதுடில்லி 203, 217
ப்ரஹ்மஸ்ரீ பதரீநாராயண சாஸ்த்ரி 220
பரமார்த்தபூஷணம் நாகெள்ள
ஸம்பத்து செட்டியார்
252ல் குடும்பவுருவப்படம்
ஞானபக்திநிதி ஸ்ரீமான்.
கோப்பரம் நடேச செட்டி, சென்னை 242
ஸ்ரீமான். கராலபாடி ராதாகிஷ்ணய்யா } 219,
P. V. பாண்டுரங்கம் செட்டி } 242
சிதன்ன சின்னி கிருஷ்ண செட்டி
பெங்களூர் ஸ்வாமிகளின் கோஷ்டி 242



# அடியேன் செய்யும் விண்ணப்பம்

உபசாராபதேசேந க்ருதாந் இஹ
க்ருதேள மயா,

அபசாராந் இமாந் ஸர்வாந்
க்ஷமஸ்வ வரதப்ரபோ !

ஸர்வம் ஸ்ரீ க்ருஷ்ணார்ப்பண மஸ்து.